REGD. No. M 4392

# அநுமகரத்வஜா

ஷட்குண மகரத்வஜா
சக்தி வாய்ந்தது



சுத்தமான ஷட்குணத் தங்கத்தினுல் மிகவும் சிறிய அளவில் ஆனுல் பிரமாத சக்தி வாய்ந்ததாக உயர்ந்த முறையில் தயாரிக்கப்பட்டுப் பிறகு மாத்திரை வடிவம் ஆக்கப்பட்டிருக்கிறது. உபயோகிப்பதற்கு மிகவும் சுலபம். மற்ற மகரத்வஜங்களை விடச் சக்தி வாய்ந்தது.

○●○

14 மாத்திரைகள் ஒரு புட்டியில் இருக்கின்றன. (7 முழு அளவுகள்)

## பெங்கால் கெமிகல்

கல்கத்தா : பம்பாய் : கான்பூர்

ஏஜண்டுகள் :

என். தேசாய் கௌண்டர் & கோ
41, பந்தர் தெரு - சென்னை



# டி.எஸ்.ஆர். கோகுல் ஹேர் ஆயில்



டி.எஸ்.ஆர் கோகுல் கூந்தல் தைலம் அதன் அரிய வாஸனைக்கும் அபூர்வ குணத்திற்கும் பெயர்போனது. இது கூந்தலை கருகருவென்று நீண்டு வளரச் செய்வதோடன்றி, மூளைக்கு குளுகுளுப்பையும் அபரிமித சுறுசுறுப்பையும் அளிக்கிறது.



## டி.எஸ்.ஆர். & கோ., கும்பகோணம்.

சென்னை நகரத்திற்கு சோல் ஏஜண்டுகள் :
சுராஜ் ஏஜன்ஸீஸ்
லாயிட்ஸ் ரோடு, ராயப்பேட்டை, சென்னை

கோவை, பாலக்காடு அன்டு நீலகிரிக்கு
சோல் ஏஜண்டுகள் :
B. பாலபட்டாபி செட்டியார்
346, வைசியாள் தெரு, கோயமுத்தூர்

வட ஆற்காடு ஜில்லாவுக்கு :
சேகர்ஸ், திருப்பத்தூர் (வ. ஆ.)






Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
*116-119*, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

பாலு (சிரித்துக் கொண்டே):—நீங்கள் தான் குடும்பத்தை உதறித் தள்ளிவிட்டுச் சாமியாராகப் போகப் போகிறீர்களே? என்னைப்பற்றி நீங்கள் கவலைப்படுவானேன்?

ராமு:—இந்தக் கவலையெல்லாம் எதற்கு? அப்பா தாடி வளர்த்துக் கொண்ட பிறகு ஒரு போட்டோ பிடித்துப் பத்திரிகைகளில் போட்டுப் பொதுஜன அபிப்பிராயம் கேட்கலாம்.

மங்களம்:—நீங்கள் திவ்யமாகத் தாடி வைத்துக் கொள்ளுங்கள். எனக்கு ஆட்சேபணையே இல்லை. மங்களத்து மாமி அகத்துக் காரர் பெரிய யோகீஸ்வரராகப் போய் விட்டார் என்றால் எனக்குப் பெருமையாக இருக்காதா?

பிரணதார்த்தி:—இது வேறு பெருமையா? அப்படி ஒருவரும் சொல்ல மாட்டார்கள்! இந்த ராட்சசியிட்டே இருந்து நிர்வாகம் பண்ண முடியாமல் மனம் வெறுத்துப் பரதேசியாகப் போய்விட்டார் என்றுதான் எல்லாரும் சொல்லுவார்கள்.

[முகவாய்க் கட்டையைத் தடவிக் கொள்கிறார்.]

ராமு:—அப்பா! அப்படித் தடவிக் கொள்ள இன்னும் கொஞ்சநாள் போகட்டும்! குற்றாலத்து அருவிச் சாரல் போலப் பறக்கும் தாடியைத் தடவிடக் குறைந்த பக்ஷம் ஒரு வருஷகாலமாவது ஆக வேண்டும்!

பாலு:—இல்லேடா! அப்பா நந்தனார் போலே பக்திமான்! அன்று நந்தன் 'நாற்பது வேலி நிலம் நடவு நட்டாகவில்லை' என்று பாடினதும் வயலிலெல்லாம் கதிர் சாய்ந்து விழுந்தனவாம்! அது போல இன்று அப்பா நாட்டக்குறிஞ்சி ராகத்தில் 'நாலுசாண் தாடி வளர்ந்தாக வேண்டும்' என்று பாடுவார்! உடனே அற்புதமான தாடி தோன்றிவிடும், காமரா டிரிக்ஷாட் போல!

[பஞ்சாமி வருகிறார்]

பிரணதார்த்தி:— என்னடா பஞ்சாமி! எங்கேயாவது வழிதவறி வந்து விட்டாயா? அதிசயமாக இருக்கேடா!

பஞ்சாமி:—எய் பிராணதார்த்தி! மறந்து போய் விட்டாயா? இன்றைக்கு ஐந்துமணி கிராண்டு டிரங்க் எக்ஸ்பிரஸிலே நம்ப கம்பெனி மானேஜிங் டைரக்டர் மார்த்தாண்டம் டில்லியிலே யிருந்து வரப்போகிறாரே! எல்லோரும் வரவேற்புக்குக் கண்டிப்பாய் ஸ்டேஷனுக்கு வர வேண்டும் என்று நம்ப துரை முட்டிக் கொண்டானே!

பிரணதார்த்தி:—ஆமடா ஆமாம்! மறந்து போய் விட்டேன்! ... டேய் பாலு! அந்தக் கண்ணாடியையும் ஷேவ் பெட்டியையும் எடடா! ... கணேசு! ஒரு பாத்திரத்திலே ஜலமும் சோப்பும் கொண்டு வா! ... டேய் பஞ்சாமி! இருடா! ஒரு நிமிஷத்திலே க்ஷவரம் இழுத்துக் கொண்டு வந்து விடுகிறேன்!

மங்களம்:—(பின்கட்டு கதவிடுக்கிலிருந்து) ஸ்ரீலஸ்ரீ ஸ்வாமிகள் பிரதிக்ஞையை மறந்து விட்டார் போலிருக்கு!

ராமு:—அப்பா! நிஜமாகவா? நீங்கள் சன்யாசம் வாங்கிக் கொள்ளப் போவதில்லையா? அடடா! நமக்குத் தெரிந்த போட்டோகிராபரிடம் உங்கள் தாடிப் படத்தைக் குறைந்த ரேட்டில் எடுத்துக் கொள்ளலாமென்று நினைத்தேனே!

பாலு:—அடடா! "அந்த நாகூர் தாடிக்காரர் பிள்ளை என்று எல்லோரும் என்னைக் கூப்பிடுவார்கள். பெருமை தரக்கூடிய விஷயம்" என்று எண்ணிப் பெருமிதப் பட்டுக் கொண்டேனே! எல்லாம் மனக் கோட்டைதானா?

கணேசு:—அடடா! நான் 'ஹிமாலய பயணம்' என்று எழுத போர்டுகூடத் தேடி எடுக்கலாமென்று நினைத்தேனே!

பிரணதார்த்தி:—போங்கடா வேலையற்றப் பசங்களா! தாடி வளர்த்துண்டா நாளைக்கு எவன் எனக்கு ஆபீஸிலே அக்கவுண்டண்ட் வேலை கொடுப்பான்? சன்யாசியாகப் போய்விட்டால் நாளைக்கு எவன் உங்களுக்கு ரேஷன் அரிசி வாங்கிக் கொட்டுவான்? ... எய் மங்களம்! பஞ்சாமிக்கு டிபன் கொண்டுவா! அவனுக்கு முட்டைக்கோஸ் வடை என்றால் உயிர்! கூடவே எனக்கும் ஐந்தாறு கொண்டு வா.

மங்களம்:—நீங்கள் வெளியே கிளம்பும் போது ஞாபகமாய் அலுமினியப் பாத்திரக் காரனுக்கு ஐந்து ரூபாய் வைத்துவிட்டுப் போங்கள்.

பஞ்சாமி:—என்னடா பிரணதார்த்தி! இந்தப் பசங்களெல்லாம் என்ன கலாட்டா பண்ணிக் கொண்டிருக்கிறார்கள்?

பிரணதார்த்தி:—அவர்களுக்கு என்னடா வேலை! அப்பா தாடி வளர்த்துண்டா எப்படிக் காட்சி யளிப்பார் என்று ஆராய்ச்சி பண்ணிக் கொண்டிருக்கிறார்கள்.

பஞ்சாமி:—அசல் லேக் அலிக்குத் தாடி வைத்தாப் போலிருக்கும்!

பிரணதார்த்தி:—அடபாவி! இரைந்து பேசித் தொலைக்காதே! எல்லாரும் என்னை முறைச்சுப் பார்க்க ஆரம்பித்து விடப் போகிறார்கள்!

[போகிறார்கள்]

பாலன் :—அமெரிக்கா, ரஷ்யா, எல்லாம் அம்மா கிட்டே பிச்சை வாங்கணும். ஒவ்வொருத்தன் அணுகுண்டு, ஹைட்ரஜன் குண்டு என்று அலறியும் யாரும் அஞ்சக் காணோம். இந்த அம்மா கத்தரிக்காய் குண்டை வீசி அப்பாவைப் பயப்படச் சொல்கிறாளே !

பிரணதார்த்தி :—சன்யாசம் வாங்கிக்கிறதன்று சினிமாவுக்குப் போய்விட்டு வருகிறாப்போலே நினைத்துக் கொண்டியா? இல்லாத போனால், புடவைக் கடையிலே போய் 'லபக்' என்று ஒரு புடவையைத் தூக்கிக் கொண்டு வராமாதிரி எண்ணமோ? கத்தரிக்காயோ வெண்டைக்காயோ நின்று விட்டு நீங்கள் உட்கார்ந்திருங்கள். நான் சாமியாராகத்தான் போகப்போகிறேன்.

மங்களம் :—இமயமலைக்குப் போகப் போகிறீர்களா? அல்லது விந்தியமலைக்குப் போகப் போகிறீர்களா?

சுலோசனா :—அப்பாவுக்கு அங்கெல்லாம் போனால் ஜலதோஷம் பிடித்துவிடும்! நம்ப வீட்டு வாசலிலேயே 'இமாலய பவனம்' என்று ஒரு போர்டு எழுதி மாட்டிவிட்டு உள்ளே நிம்மதியாக உட்கார்ந்து விடுவார்.

பிரணதார்த்தி :—சன்னியாசம் வாங்கியும் சம்சார பந்தமா?...முடியவே முடியாது!

சுலோசனா:—அப்பா! திடீரென்று நீங்கள் சன்னியாசம் வாங்கிக் கொண்டுவிட முடியாது! அதைப்பற்றி எங்களுக்கு 'ஒரு மாத நோட்டீஸ்' கொடுத்தாக வேண்டும்!

பிரணதார்த்தி :—இன்றிலிருந்து நான் தாடி வளர்க்கப்போகிறேன். இது நிச்சயம். இந்த மாதம் பூராவும் பரீட்சை பார்ப்பேன். உங்க அம்மா சிக்கனமாகவும் பொறுப்பாகவும் குடித்தனம் நடத்தாவிட்டால்...

ராமு :—...அப்பா கருப்பையா சலூனிற்குள் நுழைந்து சிறிது நேரம் கழித்து மழமழவென்று திரும்புவார்!

மங்களம்:—தாடி வளர்க்கப் போகிறேன் என்றீர்களே! போன மாதமே வளர்த்துக் கொண்டிருக்கக் கூடாதா? போனவாரம் வடாம்பிழிந்து உலர்த்தி எடுப்பதற்குமுன் காக்காய் பிராணனை வாங்கிவிட்டது! தாடியுடன் நீங்கள் அங்கே காவல் இருந்திருக்கலாமல்லவா?

பிரணதார்த்தி :—சோளக் கொல்லையிலே காவலுக்கு வைக்கிற பொம்மை போல என்னை எண்ணி விட்டாய், இல்லையா? இந்த வீட்டில் நான் ஒரு பொம்மைபோல் தான் இருக்கிறேன்! இல்லாத போனால் போன மாதத்தில் இருபத்திராறு ரூபாய்க்குப் பால் கணக்கும், பத்தொன்பது




ரூபாய்க்குக் கறிகாய் செலவுக் கணக்கும் எழுதி யிருப்பாயா?

மங்களம் :—மடமட வென்று நாலு சிநேகிதர்களைக் கட்டிக் கொண்டு வந்து சாப்பாடு போடு என்கிறார்கள்! சம்பிரமமாக வேறு சமைத்துக் கொட்டவேண்டும். முட்டைக் கோஸ் நம்ப வீட்டு முற்றத்திலே முளைக்கிறதாகத்தான் எண்ணம்!

பிரணதார்த்தி :—இனிமேல் உனக்கு அத்தகைய தொந்தரவு எதுவுமே இருக்காது. ஸ்ரீலஸ்ரீ பிரணதார்த்திஹர ஸ்வாமிகள் கூட உன் வீட்டிற்குள் நுழையமாட்டார்! எங்கு பிக்ஷை அகப்படுகிறதோ அங்கு சாப்பிட்டுவிட்டுக் காலத்தைக் கழிப்பார்!

ராமு :—பார்த்தாயா! பார்த்தாயா! ஒரு முக்கிய விஷயம் மறந்து போச்சு! டேய் பாலு! அப்பா தாடி வைத்துக் கொண்டால், தாகூர் மாதிரி இருப்பாரா?

சுலோசனா :—தாடி வைத்துக்கொண்டால் அப்பா தாகூர் மாதிரியும் இருக்கமாட்டார், பெர்னாட்ஷா மாதிரியும் இருக்கமாட்டார். சரித்திர புஸ்தகத்திலே போட்டிருக்கிற ஔரங்கசீப் போல இருப்பார்!

பாலன் :—என்டி, அப்பாவைக் கேலி பண்ணுகிறாய்! நீ வறட்டுத் தவளைமாதிரி பாடற பாட்டு அவருக்குப் பிடிக்கவில்லை என்பதற்காக அவரை ஔரங்கசீப் என்கிறாயோ? அப்பா ரஷ்யாவில் பிரபலமடைந்த ராஸ்புடின் மாதிரியாக்கும் இருப்பார்!

பிரணதார்த்தி :—ஏய் பாலு பிரம்மஹத்தி! உனக்கு இப்போதே முதல் ரஷ்யா பயித்தியம் பிடித்துவிட்டது. அதை முளையிலேயே கிள்ளி எறிய வேண்டும்.

# பிராணதார்த்தியின் பிரதிக்ஞை!

கோமதி ஸ்வாமிநாதன்

[விடுமுறை நாள். பிற்பகல் மூன்று மணி.

பிராணதார்த்தி ஏதோ கணக்குப் புஸ்தகத்தைப் பார்த்தவாறு கூடத்து நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறார். அவர் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்கிறாற்போல் கோபம் ததும்பி நிற்கிறது. பிராணதார்த்தியின் மனைவி மங்களம் வாசற்பக்கம் அலுமினியப் பாத்திரம் வியாபாரம் செய்பவனுடன் பேரம் செய்து ஒரு பாத்திரத்தை வாங்கிக் கொண்டு உள்ளே வருகிறாள். அவருடைய குழந்தைகளான ராமு, பாலன், கலோரா, மீனு எல்லோரும் கூடத்தில் ஏதோ விளையாடிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார்கள்.]

பிராணதார்த்தி :—சதா பாத்திரம் பாத்திரம் என்று என் காசைத் தொலைக்கிறாய்? வீட்டிலே இருக்கும் பாத்திரத்தை புழங்கித் துப்புரவாய் எடுத்துவைக்கத் தெரியவில்லை! மாதத்தோறும் ஓட்டை உடைசல் என்று ஏதாவது பாத்திரத்தை மாத்திரம் காசைக் கொட்டி வாங்கிக் குவிக்கத் தெரிகிறது!

மங்களம் :—இந்தக் கோபத்தில்தானா தக்காளிப் பழம்போல் சிவந்திருக்கிறது?... நானும் நீங்களும் இப்போதுதான் தனிக் குடித்தனம் நடத்துகிறோமா? ஒன்றரைப் பாத்திரத்தில் சமைத்துச் சாப்பிட்டுப் பொழுதைப் போக்க! நாலு குழந்தைகளாச்சு! பெரிய சம்சாரமாச்சு! அதற்குத் தகுந்த பாத்திரங்களில்லாமல் திண்டாடுவார்களா என்ன? இந்த விவகாரத்திற்கெல்லாம் நீங்கள் வரக்கூடாது.

பிராணதார்த்தி :—நான் வரக்கூடாதென்றால் நான் சம்பாதிக்கும் பணமும் இனிமேல் பாத்திரம் வாங்க வராது. நான் ஒரு நாலுமுழ வேஷ்டி வாங்க நாலு மாதமாக யோசித்து வாங்க முடியாமலிருக்கிறேன். நீ என்னடான்னா, அடுக்கு போகிணி என்று அனாயாசமாக வாங்கித் தள்ளுகிறாய்!


தாடி வளர்த்துக்கொண்டபிறகு போட்டோ...

மங்களம் :—இதற்கு ஏன் இப்படி நாடக மேடையிலே பேசுற மாதிரி நீட்டி முழக்குகிறீர்கள்? இந்த வீட்டிலே இனிமேல் நான் ஒரு தம்பிடிக்குக்கூட சாமான் வாங்கப் போவதில்லை. நீங்களே ஒரு கோராகும்பரைப் பார்த்து அவனிடம் மண் பானை சட்டிகளாக வாங்கிக் குவியுங்கள். அவைகள் மலிவாக இருக்கும்.

ராமு :—சரிதான்! அப்பா போடும் சத்தத்திலே வெங்கலப் பாத்திரங்களே எதிரொலிக்கின்றன! சட்டிபானையாக இருந்தால் பட் என்று விட்டுப் போகும்!

பிராணதார்த்தி :—நான் சத்தம் போடுவதுதான் எல்லோருக்கும் தெரிகிறது! உங்க அம்மா ஊமைபோல் செய்யும் காரியங்களெல்லாம் யாருக்குத் தெரிகிறது? நூற்றைம்பது ரூபாய்ச் சம்பளத்தைக் காற்று வாக்கில் ஊதி விட்டு விடுகிறாள். பால்...... தயிர்...பட்டுப் புடவை...ஆகவே சம்பளம் இரண்டாம் தேதியே குளோஸ்!

மங்களம் :—நிறுத்துங்கோ உங்கள் அபசகுனப் பேச்சை! பேரைத்தான் ஏதோ மாதிரி பிராணஹத்தி என்று வைத்திருக்கிறார்கள். அதற்காக மற்ற எல்லாவற்றையும் சொல்ல வேண்டாம்!

பிராணதார்த்தி:—உனக்குத்தான் மங்களம் என்று பொருத்தமாய் பேர் வைத்திருக்கிறார்களே!......கொண்டு வந்து கொட்டும் ரூபாய்களுக்கெல்லாம் மறு நிமிஷம் மங்களம் பாடிவிடுகிறாயல்லவா!...இதோ பார் மங்களம்! நான் ஓர் முடிவுக்கு வந்துவிட்டேன். பேசாமல் சன்னியாசம் வாங்கிக் கொண்டு போய்விடப் போகிறேன். மாதம் முப்பது நாளும் உழைத்து உயிரை விட்டுச் சம்பாதித்த எனக்குத் திருப்தியாக இந்த வீட்டில் ஒரு காரியமும் நடப்பதில்லை.

மங்களம் :—அட பாவமே! டிபனைச் சாப்பிட்டுவிட்டு சன்னியாசம் வாங்கிக் கொள்ளுங்கள். பிறகு, ராத்திரி அதை விட்டு விட்டு சாப்பிட வந்துவிடுங்கள். கத்தரிக்காய் பொரிச்ச கூட்டு பண்ணப் போகிறேன்!

துணுக்குகள் வெளி வந்திருக்கின்றன. ஆனால் இந்த வாரக் 'கல்கி'யில் அக்கப்போர் பகுதியில் அமெரிக்க காய்களையும் இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்டுகளையும் ஒருமைப் படுத்தி வந்திருக்கிறதே அது எல்லாவற்றையும் விடப் பிரமாதம் என்று சொல்ல வேண்டும்!

இதைச் சிருஷ்டி செய்தவரை நெப்போலியன், நெல்சன் போன்ற வீரர்களுடன் ஒப்பிட்டுக் கௌரவிக்க வேண்டும். ஏனென்றால் காய்களைக் கூட இன்ஷ்யூர் செய்யக் கூடிய அமெரிக்காவின் நிலைமையும் நம் தேச நிலைமையையும் சேர்த்துப் பார்த்து, மனம் கலங்கிச் சோர்ந்து விடாமல், அதையே அக்கப்போர் துணுக்காக எழுதி ரஸிப்பதற்கு, ஒரு நெல்சனுக்கோ நெப்போலியனுக்கோ இருந்த மனோதிடம் வேண்டும்!

நம் நாட்டின் தற்பொழுதைய செல்வ, பொருளாதார நிலைமையைப் பற்றியும், அதன் அபிவிருத்திக்காக எப்படிப் பாடுபட வேண்டும் என்பதைப் பற்றியும் தங்கள் பத்திரிகையிலேயே எவ்வளவோ தடவை எழுதியிருக்கிறீர்கள். "நாட்டின் செல்வம் பல பேரிடத்திலே பரந்து கிடக்கிறது. முன் போல் ஒரு சிலரிடத்திலேயே இருக்கவில்லை. எப்படிப் பரந்த ஆழமில்லாத நீர்ப்பரப்பு பாசனத்திற்குப் பயன்படாதோ அப்படியே தற்பொழுது இருக்கும் நிலைமையில் எந்தக் காரியத்திற்கும் மூலதனம் கிடைப்பது கஷ்டமாயிருக்கிறது." இப்படி ராஜாஜி அவர்கள் சேமிப்பின் அவசியத்தைப் பற்றிய ஒரு ஒலிபரப்பில் சொன்னார்.

பரந்து கிடக்கும் செல்வத்தைத் தனித் தனியாகச் சேகரித்து நாட்டின் அபிவிருத்திக்குப் பயன்படும் காரியங்களுக்கு மூலதனம் உதவப் பல சேமிப்புத் திட்டங்களை வகுத்திருக்கிறார்கள். அதில் மிக முக்கியமானது இன்ஷ்யூரன்ஸ் திட்டம்.

மனிதனுக்கு நல்ல காரியத்தைச் செய்வதற்குத் தூண்டுகோல் வேண்டியிருக்கிறது. பல தடவை நேரில் பார்த்து நினைவு படுத்தி, நடையாக நடந்த பிறகு மாதம் மூன்று ரூபாய் இன்ஷ்யூரன்ஸ் செய்ய ஒத்துக் கொள்கிறார் ஒருவர். இப்படிப் பலரைச் சம்மதிக்க வைப்பதற்குள் இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்டின்பாடு தீர்ந்தே போய் விடுகிறது. ஆனால் ஏதோ மோசடி, புரட்டு செய்து பணம் பறிக்கும் வித்தைகளைக் கையாண்டு வருபவர்களில் இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்டும் ஒரு சாரார் என்பது மாதிரிப் பத்திரிகைகளில் துணுக்குகளும், படங்களும் வெளி வருவது அவர்களுடைய மனதைப் பெரிதும் புண்படுத்துகிறது.

அச்சில் வருவதை ஜனங்கள் முழுதும் நம்புகிறார்கள். இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்டுகளிலும் பலர் தாங்கள் செய்யும் தொழில் கௌரவமானது இல்லை என்று எண்ணும் நிலைக்கு வந்து விடுகிறார்கள்.

தலைவர்கள் சேமிப்பு வேண்டும் என்று கதற, இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்ட் அதை நிறைவேற்றப் பாடுபட முன் வந்தாலும், தப்பபிப்பிராயங்கள் ஏற்படக் கூடிய வகையில் பத்திரிகைகள் அவர்களைப் பற்றிப் பிரசுரித்தால் அவர்கள் எப்படி ஊக்கத்துடன் வேலை செய்ய முடியும்?

இப்படிப்பட்ட துணுக்குகள் தற்பொழுது நாம் இருக்கும் நிலைக்கு ஏற்றதல்ல. நாமும் அமெரிக்காவின் செல்வ நிலைமையை அடைந்த பிறகு வேண்டுமானால் இந்த துணுக்குகளை அனுபவிக்கலாம்.

கடைசியாக ஒரு விஷயம். காய்களைக் கூட இன்ஷ்யூர் செய்யும் மகோன்னத நிலையில் இருக்கும் அமெரிக்காவில் இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்டுகளைப் பற்றி வரும் விளம்பரங்கள் மனதைக் கவருவதாகவும், அவர்களைப் பெருமைப்படுத்துவதாகவும் இருக்கின்றன. "உங்கள் சமூகத்தில் நீங்கள் அவசியம் தெரிந்து வைத்துக் கொள்ள வேண்டியவர்களில் இவர் ஒருவர்", "இன்று அந்த வீட்டில் இருப்பவர்கள் அனாதையாகத் தெருவில் நிற்கவில்லை என்றால் அதற்குக் காரணம், இவர் வற்புறுத்தி நிறைவேற்றி வைத்த ஒரு சிறிய காரியம்தான்." இப்படிப் பல மாதிரிகளில் நல்ல படங்களுடன் பிரசுரிக்கிறார்கள். இந்த விஷயத்தில் அமெரிக்காவை நாமும் பின் பற்றினால் நாடு செழிக்கும். தன தான்யம் கொழிக்கும்.

சென்னை
24—5—50 என். எஸ். மணி



பேரன்:—பாட்டி! 'ரிஸல்ட்' வந்து விட்டது. நான் முதல் கிளாஸிலே தேறி யிருக்கிறேன்!
பாட்டி:—ஏண்டா! இரவும் பகலுமாகப் படிக்கப் படிக்க உனக்கு ஒரு கிளாஸ்தானா பாஸ் ஆச்சு!

வடிக்கை எடுத்து, இனி இத்தகைய விளம்பரங்களில் தலைவர்களைக் காட்டக் கூடாது என்று சட்டம் செய்ய வேண்டும்.

திருநெல்வேலி
18—5—50 ஆ. கோபாலகிருஷ்ணன்

○●○

## * கார்ப்பரேஷன் கவனிக்குமா?

சட்ட சபைகளும், நீதி மன்றங்களும், கல்லூரிகளும், கலாசாலைகளும், ஏராளமான வக்கீல்களும், வாத்தியார்களும், டாக்டர்களும், படிப்பாளிகளும், பத்திரிகைகளும் நிறைந்த இந்தச் சென்னை மா நகரத்தில், மனிதர்கள் ரஸ்தாக்களில் செத்துக் கிடக்க மற்றவர்கள் பார்த்துக்கொண்டு போவது சகிக்க முடியாத காட்சி அல்லவா?

நாலைந்து மாதங்களுக்கு முன்பு ஒருநாள் நான் பஸ் ஏறுவதற்காக வி. பி. ஹால் அருகிலுள்ள பஸ் ஸ்டாண்டுக்குப் போனேன். அங்கு ஒரு பிணத்தை வைத்துக் கொண்டு சில பிச்சைக்காரர்கள் தர்மப் பிணம் என்று சொல்லிப் பணம் வசூலித்துக் கொண்டிருந்தார்கள். இந்தப் பிணம் கார்ப்பரேஷன் கட்டிடத்திலிருந்து ஐம்பது கெஜ தூரத்திற்குள் தானிருந்தது. இதைப் பார்த்தவுடனே நான், மேயரிடம் ரிபோர்ட்டு செய்யலாமென்று கார்ப்பரேஷனுக்குள்ளே சென்றேன். ஆனால் மேயர் 'அவுட்' என்று இருந்தது. டிபுடி மேயரிடம் இதைச் சொன்னேன். அவர் ஹெல்த் ஆபீசரிடம் சொல்லுங்கள் என்று சொன்னார். சரி என்று திரும்பினேன். போர்டைப் பார்த்தேன். அவரும் 'அவுட்' என்று இருந்தது. எப்படியும் இதை விடுவதில்லை என்று அஸிஸ்டெண்டு ஹெல்த் ஆபீசரிடம் சென்றேன். அவர் "நாங்கள் உடனே ஒன்றும் செய்வதற்கில்லை. போலீஸ்காரர்கள் பார்த்து எங்களுக்கு ரிபோர்ட் செய்தால், நாங்கள் பிறகு அதைக் கவனிப்போம்" என்றார். அப்படியானால் நீங்களே இதைப் போலீசுக்குத் தெரிவியுங்கள் என்று சொன்னதின் பேரில் அவர் டெலிபோன் செய்து ஏற்பாடு செய்வதாகச் சொன்னார். சாயங்காலம் மறுபடியும் அங்கு போய்ப் பார்த்தேன். நல்ல காலம்! அந்தப் பிணத்தை அங்கு காணோம்.

போன வாரம், ஜெனரல் ஆஸ்பத்திரிக்கு அருகில் ஒரு பிணம் கிடந்தது. மறுபடியும், "தர்மப் பிணம், காலணா கொடுங்கள்" என்ற பழைய கதையே திரும்பியும் நடந்து கொண்டிருந்தது.

இப்படிச் சாகிறவர்கள் திடீரென்று சாகிறதில்லை. சாகிற இடத்தில், வியாதியினாலும், வயோதிகத்தினாலும் சில நாட்களாவது மருந்து கொடுப்பவர்கள் இல்லாமல், அன்ன ஆகாரமின்றி, குடிக்கத் தண்ணீருமில்லாமல், இருந்த இடத்தை விட்டு நகரவும் முடியாமல், அங்கேயே மலஜலம் கழித்துக் கொண்டு, ஈ, எறும்புகள் மொய்க்க, ஒரு சாண் துணிகூட இல்லாமல், நரக வாழ்வை அனுபவித்துச் சாகிறார்கள். அத்துடன் தங்கள் வியாதியைப் பிறருக்கும் பரவும்படி செய்கிறார்கள்.

ஆஸ்பத்திரிகளை வரிசையாகக் கட்டிக் கொண்டே போனால் மட்டும் போதுமா? வியாதி பரவாமல் தடுக்கவேண்டியது மிகவும் அவசியமல்லவா?

'மனிதர் நோக மனிதர் பார்க்கும் வாழ்க்கை இனியுண்டோ' என்று பாடினார் பாரதியார். ஆனால் இன்று பதினைந்து லட்சம் புண்ணியவான்கள் வசிக்கும் இந்தப் பட்டணத்தில் நடுத்தெருவில் திக்கில்லாமல் மனிதன் சாக மனிதன் பார்க்கும் வாழ்க்கையை என்னவென்று சொல்வது?

பட்சிகளும், மிருகங்களும் கூடத் தங்கள் இனத்தைப் பற்றிக் கவனிக்கின்றன. ஒரு காக்கை செத்துவிட்டால், அதைச் சுற்றிப் பல காகங்கள் கூடி, நம்மைத் தொடவிடாமல் கொத்த வருகின்றன. குரங்கு செத்து விட்டால் அதை நாம் பார்க்கக்கூட விடாமல், மற்றக் குரங்குகள் ஒன்று சேர்ந்து தூக்கிக் கொண்டு போய் உடனே அடக்கம் செய்கின்றன. காட்டு மிராண்டிகள் கூடத் தங்கள் இனத்தாரைத் திக்கில்லாமல் சாக விடுவதில்லை. ஆனால் நாகரிகம் வாய்ந்த சென்னை வாசிகள் நடுத் தெருவில் பிணம் கிடந்தாலும், அதைக் கவனிக்காமல், தங்கள் காரியமே பெரிது என்று நினைத்துப் போய்க் கொண்டே இருக்கிறார்கள். இது மனித குலத்திற்கே அவமானம் இல்லையா?

இப்பொழுது கார்ப்பரேஷன் மேயராக இருப்பவர் ஒரு பெரிய டாக்டர். இவரும் கார்ப்பரேஷன் கவுன்ஸிலர்களும், சுகாதார உத்தியோகஸ்தர்களும், போலீசாரும் எல்லோருமாகச் சேர்ந்து இனியாவது யாரும் பொது ரஸ்தாக்களில் திக்கின்றிச் சாகாமலிருக்கத் தகுந்த ஏற்பாடுகளைச் செய்தால், தங்கள் கடமையைச் சரிவரச் செய்தவர்கள் ஆவார்கள். இதுதான் அவர்கள் சமூகத்திற்குச் செய்யும் நல்ல சேவையும் கூட. இதுவே மனிதன் மனிதனுக்குக் காட்ட வேண்டிய மரியாதையும் ஆகும்.

சென்னை
15—5—50 ஸ்ரீபாத சங்கர்

○●○

## அமெரிக்காவைப் பின்பற்றுங்கள்!

இது வரை இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்டுகளைப் பற்றிப் பலவிதமான ஹாஸ்யத்

* வட்ட மேஜைப் பரிசுத் தொகை ரூ. 25ஐ "ஜமாபந்தி" என்ற கடிதம் எழுதிய கோவை ஸ்ரீ க. ஆதிநாதனுக்கும், "கார்ப்பரேஷன் கவனிக்குமா?" என்ற கடிதம் எழுதிய சென்னை ஸ்ரீபாத சங்கருக்கும் ரூ. 12—8—0 விதம் பிரித்து வழங்கப்பட்டது.

# வட்ட மேஜை

## ★ ஜமாபந்தி

வெள்ளைக்கார அரசாங்கம் நடந்து கொண்டிருந்த பொழுது ஒரு கலெக்டரையோ, அல்லது டிப்டி கலெக்டரையோ, ஒரு சாதாரண ஏழை விவசாயி சாதாரண காலங்களில் பேட்டி கண்டு நேரில் தனது குறைகளை எடுத்துக் கூறிப் பரிகாரம் தேடிக் கொள்ள இயலாதிருந்தது. இந்த உத்தேசம் பண்ணியே பிரிட்டிஷ் சர்க்கார் வருடத்திற்கு ஒருமுறை ஜமாபந்தி என்று ஏற்படுத்தி, குடி மக்கள் தங்கள் நில சம்பந்தமான குறைகளையும், இதர குறைகளையும் நேரில் கூற ஒரு வாய்ப்பை ஏற்படுத்தினார்கள். தற்சமயம் ஜமாபந்திகள் நடக்கும் தோரணையைக் கவனித்தால், பிரிட்டிஷ் சர்க்கார் காலத்திலாவது ஜமாபந்தியில் ஆற அமர விசாரித்து, குடிகளுடைய குறைகள் ஒருவாறு நிவர்த்திக்கப்பட்டன என்று கூறலாம். குடியரசு சர்க்காரில் மக்களுடைய குறைகள் அதைவிட நன்றாகக் கவனிக்கப்படுமென மக்கள் எதிர்பார்ப்பது இயற்கை. ஆனால் நடைமுறையில் இதற்கு நேர்மாறாக இருப்பது குறித்து யார்தான் வருந்தாதிருக்க இயலும்?

எங்கள் உத்தமபாளையம் பிர்க்கா ஜமாபந்தி 11—5—50-ல் நடைபெற்றது. ஜமாபந்தி மாலை மூன்று மணிக்கு என்று விளம்பரப்படுத்தியிருந்தார்கள். எட்டு கிராமங்களைச் சேர்ந்த சுமார் 800 பேர் மத்தியானத்திலிருந்து மனுக்களுடன் காத்திருந்தார்கள். இந்த ஜமாபந்தியிலாவது தமது குறைகள் தீராதா என்ற ஆவலுடன் கடும் வெய்யிலில் பக்கத்துக் கிராமங்களிலிருந்து நடந்தோ, வண்டியிலோ வந்திருந்தார்கள். குறிப்பிடப்பட்டிருந்த நேரம் மாலை மூன்று மணி. ஜமாபந்தி ஆபீசர் வந்து உட்கார்ந்ததோ மாலை 5-15 மணி. நேரம் கழித்து வந்தால் 1-45 மணி நேரத்தில் 800 பேர்களுடைய மனுக்களையும் பைசல் செய்திருந்தால் என்ன ஜரூரான வேலை நடந்திருக்குமென எண்ணிப் பாருங்கள். வந்ததும் மனுக்களை வாங்கச் சொன்னார். ஹெட்கிளார்க் எல்லாவற்றையும் வாங்கினார். பட்டா மாறுதல் மனுக்களை மாத்திரம் தனியாகப் பிரித்து வைத்துக் கொண்டார். இதர தர்க்காஸ்து மனு, வீட்டடி மனு, குளம் மராமத்து மனு, கிஸ்தி உஜா மனு, எல்லா மனுக்களையும் ஒன்றாக வைத்துக் கொண்டு அதில் ஹெட்கிளார்க் குறிப்பெழுதி, டிப்டி கலெக்டரிடம் கையெழுத்துக்களை வாங்கினார். "தாசில்தாரவர்களுக்கு உங்கள் மனுவை அனுப்பியுள்ளது. ரெவின்யூ இன்ஸ்பெக்டர் வந்து பார்ப்பார். பின்னால் ஜாரி செய்வார்கள்." இம்மாதிரி எல்லோருக்கும் பெப்பே என்ற முறையில் எல்லோருக்கும் பதில் கூறி ஜமாபந்தியை முடித்து விட்டார். தர்க்காஸ்து, வீட்டடி மனுக்களுக்கு அந்தப் பதில் சரிதான். குளம் மராமத்து செய்ய வேண்டுமெனக் கொடுக்கப்பட்ட மனுக்களுக்கும் "ரெவின்யூ இன்ஸ்பெக்டர் வந்து பார்ப்பார்; ஜாரி செய்வார்" என்று கூறினால் என்ன அர்த்தம்? குளத்தையே ஜாரி செய்யத் தயாராயிருக்கிறார்களா? குடியரசு நாட்டில் இம்மாதிரி சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் நடந்து கொள்வது முறையல்ல. எவ்வளவோ எதிர்பார்த்து வரும் மக்களுக்குக் காரியத்தில் பிரமாதமாக ஒன்றும் நன்மை செய்யாவிட்டாலும், ஆற அமர விசாரித்து அவர்களுக்கு ஆறுதல் மொழிகளாவது கூறவேண்டாமா? இம்முறையில் ஜமாபந்தி என்ற கண்துடைப்பு நாடகம் நடத்துவதை விட ஜமாபந்தியை ஒழித்துவிட்டால் கூட நல்லது. அநாவசியமாக மக்கள் ஒருநாள் வேலையைக் கெடுத்துக்கொண்டு, காலை முதல் மாலை வரை கச்சேரி வாசலில் கைகட்டிக் காத்துக்கொண்டிருக்கத் தேவையில்லை.

கோம்பை
18—5—50 சு. ஆதிநாதன்

○●○

## பெருந் துரோகம்!

நெல்லை நகரிலுள்ள ஒரு டாக்கீஸில் இடைவேளையின்போது பல விளம்பரங்கள் காட்டினார்கள். அதில் "மணி மார்க் பீடி" விளம்பரமும் ஒன்று. அந்தப் பீடி விளம்பரத்தில் ஒரு யுவதி பீடியைக் கொடுக்க அதைப் புனித மூர்த்தி மகாத்மா வாங்குவது போல் சித்திரம் தீட்டப்பட்டிருக்கிறது. அற்பப் பீடி விளம்பரத்திற்காக அந்த அருளொளி ஜோதி காந்திமகானுக்கு அவமரியாதை! என்ன கொடுமை! கேவலம்! கீழான வாணிப வஸ்து விற்பதற்குக் காந்திஜியின் உருவத்தைக் காட்டுவது. அவருக்கு மட்டுமல்ல; நாட்டுக்கே பெரும் துரோகம் செய்வது போலாகும். பெருந் துரோகம் செய்தவர் எவராயினும் சரி, அவர்மீது பண்பு மிக்க பாரத சர்க்கார் தகுந்த நட

ஓரத்தி லிருந்த ஸ்டேஷன் மாஸ்டர் வீடுதான். அதை விட்டால் பல மைல்களுக்கு ஒன்றும் தென்படாது.

இந்த வழியே செல்லும் ரயில்களில் பிரயாணிகளைவிடப் பிரயாணிகளை ஏற்றிச் செல்லும் பெட்டிகள்தான் அதிகம். காலை ஏழு மணிக்குப் பக்கத்திலிருக்கும் பெரிய ஊரிலிருந்து ஒரு வண்டி வரும். பிறகு புறப்பட்டு, அந்த ரயில்வே லயன் முடிகிற வரை போய் மத்தியானம் ஏதோ ஒரு வேளை வந்து பனங்காட்டில் கொஞ்ச நேரம் நிற்கும். பிறகு, 'குப் குப்' என்று கிளம்பிப் போய் விடும். பிறகு மறுநாள் காலையில்தான் அந்த ஸ்டேஷனில் ரயில் வண்டியைக் காணலாம்.

ரயில்வே அதிகாரிகள் ஒவ்வொரு மார்க்கத்தில் போகும் ரயில் வண்டிகளின் கால அட்டவணையை மாற்றுகிறார்கள். ஆனால் அந்த மார்க்கத்தில் போகும் ரயில் நேரத்தை மாற்றுவதே இல்லை. அதற்கு அவசியமுமில்லை. ஆமாம், ஒரு வண்டி மேலும் கீழும் போய் விட்டு வருவதே, அந்த மார்க்கத்திலிருக்கும் கிராமவாசிகளின் தேவையைப் பிரமாதமாகப் பூர்த்தி செய்திருக்கிறது. இன்னும் பச்சையாகச் சொல்ல வேண்டும் என்றால் அவர்களுக்கு ரயில் போவதும் ஒன்றுதான்; போகாம லிருப்பதும் ஒன்றுதான். ஆம், அவர்கள் எப்போதாகிலும் ஒரு சமயம்தானே ரயில் பிரயாணம் செய்கிறார்கள்!



இரண்டாமவர் :— ரொம்பவும் மோசம் ஸார்!......ஹிந்திப் பரீக்ஷையில் யாராவது 'பெயில்' ஆவார்களா? அநியாயமாகப் 'பெயிலா'க்கி விட்டான் ஸார்!

முதல்வர் :—பெயிலாப் போனால் என்ன? உம்முடைய பிள்ளைக்குப் பதினைந்து வயசுதானே ஆகிறது!

இரண்டாமவர் :—அதில்லை ஐயா! ஹிந்திப் பரீட்சையில் என் பிள்ளை பாஸ் பண்ணி விட்டான். நான் 'பெயிலாகி' விட்டேன், ஸார்!

நம் கதை நடந்த சமயத்தில் பனங்காட்டு ஸ்டேஷன் மாஸ்டராக இருந்தவர் ஒரு இளைஞர். அவருக்கு உறு துணையாகவும் உதவியாளாகவும் இருந்தவன் இந்த வேலை செய்து செய்து தலை நரைத்தவன். இந்த இரண்டு பேரும் சரியாக ஏழு மணிக்கு ஸ்டேஷனுக்கு வந்து விட்டார்கள். ஸ்டேஷன் மாஸ்டர் அறையில் ஒரு பழைய நாற்காலி யிருந்தது. அத்துடன் கவரோடு ஒட்டினாற் போல் கட கடத்துப்போன மேஜை யிருந்தது. அந்த மேஜைமேல் டிக்கட்டுகள் வைக்கும் ஒரு பீரோ இருந்தது. ஸ்டேஷனுக்கு வெளியே பிளாட்பாரத்தில் ஒரு இரும்பு பெஞ்சு இருந்தது. இந்த ஸ்டேஷனுக் கென்று பழைய மோஸ்தர் கடிகாரம் ஒன்று இருந்தது.

ஸ்டேஷனுக்குவந்ததும் வராததுமாகப் போர்ட்டர் கையில் கொடி எடுத்துக் கொண்டு, ரயில்வே தண்டவாளத் தண்டை போய் ரயில் வருகிறதோ என்று பார்த்தான். ஸ்டேஷன்மாஸ்டர் டிக்கெட் வாங்க யாராகிலும் வருகிறார்களோ பிரயாணிகள் என்று பார்க்க ஒரு நிமிஷம் தமது அறையிலேயே காத்திருந்தார். ஒருவரும் வரவில்லை. 'சரி இன்றைக்குக் கூட ஒரு பிரயாணியும் கிடையாது போலிருக்கிறது' என்று எண்ணிக் கொண்டு எழுந்தபோது, ஒரு சிறுவன் ஜன்னலில் தன் முகத்தை நீட்டிக் கொண்டு டிக்கட் கேட்டான். அவர் டிக்கட் கொடுத்தார். அப்படிக் கொடுத்தபோது அவருக்குண்டான சந்தோஷம் கொஞ்ச நஞ்சமல்ல.

டிக்கட் கொடுத்த பிறகு தம் அறையை விட்டு வெளியே வந்து, இரும்புக் கதவைத் திறந்து பையனை பிளாட்பாரத்துக்குப் போக விட்டார். அப்போது அந்தப் பிரயாணியின் பின்னாலேயே ஒரு நரி வருவதைப் பார்த்துத் திடுக்கிட்டார். அடுத்த கணம் 'ஓ' என்று இரைந்து போர்ட்டரைக் கூப்பிட்டுக் கொண்டே கீழே குனிந்து ஒரு கல்லைப் பொறுக்கினார். அப்போது அவர் காலை உராய்ந்து கொண்டு ஏதோ போயிற்று; திரும்பிப் பார்த்தார். இன்னொரு நரி! இவ்விதம் இரண்டு விநாடிகளில் எல்லாத் திசைகளிலுமிருந்து நரிகள் வரத் தொடங்கின. ஒன்றிரண்டல்ல; ஆயிரக்கணக்கில் வந்து பையனைச் சூழ்ந்து நின்று கொண்டன. இல்லை; அவனைச் சுற்றிச் சுற்றி நர்த்தனமாடின; கடைசியில் ஆற்ற முடியாத துயரத்தோடு ஊளையிட்டன. (தொடரும்)

கிறாரே அவரை ரொம்பவும் வெறுக்கிறேன்" என்று கூறினான்.

அவ்விதம் அவன் கூறியபோது அவன் ஆள்காட்டி விரலால் பிச்சைமுத்துவைத் தான் சுட்டிக் காண்பித்தான்.

"உனக்குத்தான் நான் எவ்வளவோ செய்தேன். ஆயினும் எனக்கும் என் தோழர்களுக்கும் ஒரு சில படி அரிசியும் தான்யமும் கொடுக்க அழுதாய். வைத்தியக்காரப் பெண்டாட்டியின் வார்த்தையைக் கேட்டு அதற்குத் தகுந்தபடி ஆடுகிறாய்!"

இதைக் கேட்ட பிச்சைமுத்து கோபங்கொண்டு முன்னே எங்கேயோ போனான். கப்பன் அவன் கையைப்பிடித்து இழுத்து நிறுத்திவிட்டு "அவன் இன்னும் என்னவெல்லாம் சொல்ல விரும்புகிறானோ அத்தனையும் கேட்போம்" என்றான்.

மாது மறுபடியும் இரண்டு இரும்பு ஆணிகளை எறிந்துகொண்டே "உங்களை எல்லாம் நான் வெறுக்கிறேன். இன்னும் ஒரு நிமிஷம்கூட உங்களிடையில் இருக்க மாட்டேன். உங்களை இனி ஏறிட்டுப் பார்க்கமாட்டேன். நாளை நான் இலங்கைக்குப் போகிறேன். அது ரொம்ப நல்ல நாடு என்று கங்காணி சொல்லுகிறான். அங்கே மக்கள் அற்பத்தனமாக நடந்து கொள்வதில்லை. அங்கே அவர்கள் மனைவிமாரும், உங்கள் மனைவிமாரைப் போல் மூடாத்மாக்களாக இருக்க மாட்டார்களாம். அங்கே போய் வேலை செய்து சம்பாதிக்கப் போகிறேன். உங்கள் எல்லோருடைய செல்வத்தையும் சேர்த்தால்கூட, என் செல்வத்துக்கு ஈடாகப் போவதில்லை. அப்படிப்பட்ட பணக்காரனாகப் போகிறேன். நீங்கள் வெறும் சோம்பேறிகள்."

இவ்விதம் கூறிவிட்டுத் தோப்புக்குள் நுழைந்து மறைந்து விட்டான்! கிராமத்தார் அனைவரும் தங்கள் தங்கள் வீட்டுக்குத் திரும்பினர்.

## 13. பனங்காடு ஸ்டேஷன்

நல்ல நரிக்காட்டுக்குச் சுற்று வட்டாரத்திலுள்ள பத்துப் பன்னிரண்டு கிராமங்களுக்குப் 'பனங்காடு'தான் பக்கத்து ரயில்வே ஸ்டேஷன். அது ஒரு பாலைவனத்திலிருக்கும் சிறு ஸ்டேஷன் என்றுதான் சொல்ல வேண்டும். ஏனெனில் ஸ்டேஷனை விட்டு ஐந்து மைல் போனால்தான் மனுஷ வாசனை பிடிக்கலாம். ஐந்தாறு அடி நீளமுள்ள சிமெண்ட் பிளாட்பாரமும் தகரக் கூரை போட்ட இரண்டு அறைகளும் கொண்டது பனங்காடு ஸ்டேஷன். அங்கே பார்க்கக்கூடிய கட்டிடம் அரை பர்லாங்கு



கண்ட ஒரு காட்சி தடுத்தது. அப்போது. அந்தத் தென்னந்தோப்புக்கு அப்பால் வெட்டவெளியில் நிலா வெளிச்சத்தில் மாது உட்கார்ந்திருப்பது தெரிந்தது. மாது தன் இரு கைகளையும் நீட்டிக் கொண்டிருந்ததையும் அவன் கைகளைப் பிணைத்திருந்த ஏதோ ஒன்றை நரிகள் என்னவோ செய்து கொண்டிருந்ததையும் கப்பன் கவனித்தான். அந்த இரண்டு நரிகளில் ஒன்று மூத்தண்ணுதான் என்பதை அதனுடைய பரந்த முதுகிலிருந்தே கப்பன் கண்டு பிடித்து விட்டான்.

நரிகள் கப்பன் இருந்ததைப் பார்த்தனவோ, இல்லையோ! அவனைப் பார்க்காமல் இருந்திருக்க முடியாது. அவனைப் பார்த்தாலும் பார்க்கா விட்டாலும், இரண்டிற்கும் அதிக வித்தியாசமில்லை; ஆயினும் கப்பன், தன்னை நரிகள் கவனிக்கவில்லை என்று நினைத்தான். அதற்கேற்றபடி, பின்னால் நகர்ந்து பனைமர நிழலில் மறைந்து கொண்டான். இந்த இடத்திலிருந்து அவன் மாதுவை நன்றாகப் பார்க்க முடிந்தது. அத்துடன் இரும்பின் மேல் அரம் ராவும் சத்தமும் அவன் காதுகளில் நன்றாக விழுந்தன. தன்னிடமிருந்து திருடிச்சென்ற அரத்தை வைத்துக்கொண்டு, மூத்தண்ணு மாதுவின் கையில் ஏதோ செய்து கொண்டிருப்பதைப் பார்த்ததும் அவனுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை.

தன் மறைவிடத்தை விட்டு ஓடிப் போய்த் தன் பட்டறையைச் சாத்திப் பூட்டுப் போட்டான். தன் மனைவியைத் தட்டி எழுப்பி ஏதோ சொல்பவன்போல் வாயெடுத்து விட்டு ஒன்றும் கூறாமல் வெளியே ஓடினான். பக்கத்து வீட்டுக்காரன் அடுத்த வீட்டுக்காரன் எதிர் வீட்டுக்காரன் ஒவ்வொருவரிடமும் ஏதோ சம்பந்தா சம்பந்தமில்லாமல் கூறினான். அதைக் கேட்டுவிட்டு அவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்று நிர்மானித்தார்கள் அவர்கள். எப்படியோ அவர்களுக்குக் கடைசியில் கப்பன் தான் சொல்ல விரும்பியதைத் தெளிவாகச் சொல்லி, அது ஒன்றும் அர்த்தமற்ற கனவல்ல என்பதை மனதில் பதியவைத்தான்.

கிராமம் முழுவதும் கலவரம் அடைந்தது. ஆண், பெண், குழந்தைகள் யாவரும் கப்பன் முன்னால் அழைத்துச் செல்ல அந்தத் தென்னந்தோப்புக்குக் கூட்டமாகப் போனார்கள். ராமனும் பிச்சைமுத்துவும் இரண்டு மூங்கில் பந்தங்களுக்கு ஏற்பாடு செய்தனர். கிராமத்து இளைஞர்களுக்கு அந்தப் பந்தங்களை ஏந்திச் செல்லும் உரிமை தாராளமாக வழங்கப்பட்டது. மொத்தத்தில் விரோதியைத் தாக்கச் செல்லும் பெரிய படை மாதிரி இருந்தது அந்தக்கூட்டம்.

கப்பன் சொன்னதெல்லாம் உண்மை என்பது புலப்பட்டு விட்டது. ஆனால் ஒரே ஒரு வித்தியாசம். கப்பன் பார்த்த போது மாதுவின் கையில் விலங்கு பூட்டப்பட்டிருந்தது. இப்போது அது இல்லை.

பேர் இரைச்சலுடனும், தீப்பந்தங்களுடனும் கிராம ஜனங்கள் வரவே, நரிகள் நாலா திசையிலும் சிதறி ஓடின. அந்த நரிகளைப் பார்த்த கிராமத்தார் 'நம் கிராமத்திலும் இத்தனை நரிகள் இருக்கின்றனவா? இத்தனை நாள்வரை நமக்குத் தெரியாதே' என்று வியந்தனர்.

இப்போது மாது மெல்ல அந்தத் தோப்பிலிருந்து வெளிப்பட்டுச் சில இரும்புத் துண்டுகளை அவர்கள் மீது வீசி எறிந்தான்.

"போலீஸ்காரர்கள் மாதுவின் கைக்குப் போட்ட விலங்கு அல்லவா இது!" என்று அந்த இரும்புத் துண்டுகளில் சிலவற்றை ஒருவன் எடுத்து எல்லோரிடமும் காட்டினான்.

அந்த இரும்புத் துண்டுகள் ஒருவர் கை மாறி இன்னொருவர் கைக்குப் போய்க் கொண்டிருந்தன.

பிச்சைமுத்து "இவன் எப்படி அவர்களிடமிருந்து தப்பினான்?" என்று ஆச்சரியப்பட்டான்.

"இவன் எப்படி இந்த விலங்குகளை முறித்தான்?" என்று ராமன் வியந்தான்.

"அதைப்பற்றி எனக்கு நன்றாய்த் தெரியும். ஒரு பெரிய நரி என் பட்டறைக்கு வந்து அரம் எடுத்துச் சென்றது. அதைக் கொண்டுதான் இந்த இரும்பு விலங்கை உடைத்திருக்கவேண்டும். ஆகா! இந்த உலகம் விசித்திர உலகம்!" என்று விளக்கம் கூறினான் கருமான் கப்பன்.

மாது அந்தத் தெளிந்த நிலவொளியில் நின்று கொண்டிருந்தான். அந்த பெரிய கூட்டத்தையும் பார்த்துக் கொண்டு. ஆம், அவனைத் துரத்திச் சென்று பிடிக்கவேண்டிய அவசியமிருக்கவில்லை. அந்த நரிகளுடன் ஓடிப் போவதற்குப் பதிலாக, அங்கே நின்று அவர்களைக் கூர்ந்து பார்த்தான்.

"நீங்கள் நன்றிகெட்டவர்கள்!" என்று இரைந்துகொண்டே கப்பனை நோக்கி மாது அரத்தை வீசினான். கப்பன் அதைச் சாமர்த்தியமாகப் பிடித்துக்கொண்டான். மேலும் மாது, "நான் உங்களுக்குச் செய்த உதவியை நீங்கள் தெரிந்து கொள்ளவில்லை. உங்களை எல்லாம் நான் வெறுக்கிறேன். அதிலும் அதோ நிற்



# நரிக்காட்டு ராஜா

எஸ்.கோபாலன்
மொழிபெயர்ப்பு: எஸ்.வி.எஸ்

சீருமான் சுப்பன், முத்தண்ணு ஏதோ அவசர காரியம் ஒன்றைப் பற்றித் தன்னிடம் சொல்ல விரும்புவதாக நினைத்தான். அந்த எண்ணம், முத்தண்ணு ஆயுதப் பெட்டியைத் தானே கவிழ்த்துப் பார்க்கத் தொடங்கியதும், மறைந்து விட்டது. அதற்குப் பதில் முத்தண்ணுவை உள்ளே விட்டிருக்கக் கூடாது என்று தோன்றிற்று. வாஸ்தவம், திடீரென்று நரி புகுவதைப் பார்த்ததும் சுப்பன் அப்படியே திகைத்து விட்டான். அந்தத் திகைப்பில் அவனுக்கு என்ன செய்வது, என்ன செய்யாமலிருப்பது என்பதே தெரியாமற் போய் விட்டது. ஆகவே, அவன் மறுபடியும் சுய உணர்ச்சிக்கு வந்து, ஏதாவதும் செய்ய முயற்சி செய்வதற்குள் முத்தண்ணு அரத்தை வாயில் கவ்விக்கொண்டு போய்விட்டது.

அவன் குடிசையை விட்டு வெளியே வந்து பார்த்தான். நரி காட்டுக்குள் வேகமாக ஓடிக்கொண்டிருந்தது. அவனுக்கு அது என்ன செய்கிறது என்று பார்க்க வேண்டுமென்ற ஆவல் உண்டாகி விட்டது. முத்தண்ணுவின் இந்தச் செய்கை சாதாரண நரிகள் புரியும் செய்கையாக இல்லையே! மற்றச் சாமான்களை எல்லாம் விட்டு விட்டு அரத்தை மட்டும் எடுத்துச் செல்வானேன்? தன்னிடம் அந்தச் சாமான்கள் இருப்பது அதற்கு எப்படித் தெரிந்தது? நினைக்க நினைக்க அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது!

ஆனால் சுப்பன் பயந்து விடவில்லை. அவன் அந்த நிமிஷமே ஓடி அக்கம் பக்கத்தார்களை எழுப்பி விடவில்லை. அவனுக்கு முத்தண்ணுவைத் தொடர்ந்து சென்று, அது என்ன செய்கிறது என்று பார்க்க வேண்டுமென்கிற ஆவல் நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகமாகி வந்தது. அதில், தன் அண்டை வீட்டுக்காரர்களையும் எழுப்பி விஷயம் சொல்வதில் கால தாமதம் செய்ய விரும்பவில்லை. ஆகவே குடிசைக்குள் நுழைந்து தரையில் கிடந்த தன் துண்டைத் தூக்கித் தோள்மேல் போட்டுக் கொண்டு நரியைப் பின் தொடர்ந்து ஓடினான்.

மரங்கள் இங்கொன்றும் அங்கொன்றுமாகக் காட்சியளித்த திறந்த வெளியாகிலும் சுப்பனுக்கு முத்தண்ணு தென்படவே இல்லை. ஆனால் அதை அங்கே எங்கேயாகிலும் நிச்சயமாய்க் கண்டு பிடித்து விடலாம் என்று நம்பினான்.

அரை மணி நேரம் நடந்த பிறகு ஒரு தென்னந்தோப்பை யடைந்தான். அந்தத் தென்னந்தோப்பில், பால் இங்கே கொஞ்சமும் அங்கே கொஞ்சமும் சிந்தினாற் போல், வெண்ணிலவு திட்டுத் திட்டாகத் தெரிந்தது. இதைத் தவிர வேறு ஒன்றும் அவன் கண்ணுக்குப் படவில்லை. அந்த இருண்ட தோப்பில் ஒன்றும் தெரியாமற் போகவே, தட்டுத் தடுமாறிக் கொண்டு போனான். கொஞ்ச தூரம் போனதும் அதற்குள் அவ்வளவு சுலபமாகப் புகுந்து வெளியேறி விடமுடியாது என்பதை உணர்ந்தான். பக்கத்து நகரத்தில் நடக்கும் பெரிய பொதுஜனக் கூட்டங்களில், மக்கள் திரண்டு உட்காருவதுபோல, நரிகள் கூட்டமாக வழியை அடைத்துக் கொண்டு உட்கார்ந்திருப்பதைப் பார்த்தான். அவனுக்கு ஆச்சரியம் உண்டாகி விட்டது. அப்படியே பின்னால் ஒரு அடி எடுத்து வைத்திருப்பான்; ஆனால் அவனை அப்படிச் செய்ய வொட்டாமல் அவன்













## நீங்களும் கிப்ஸ் உபயோகிக்கிறீர்களா?

சாம்பல், கரி, இவைபோன்ற இதர கரகரப்பான பல்துலக்கும் வஸ்துக்கள் பற்களுக்கும் ஈறுகளுக்கும் ஹானி விளைவிக்கக்கூடும். நுரைபோல் மிருதுவான கிப்ஸ் டென்டிபிரிஸ் பற்களுக்கோ அல்லது ஈறுகளின் மிருதுவான பாகங்களுக்கோ ஒருபொழுதும் கெடுதல் செய்வதில்லை. கிப்ஸ் நீங்கள் எப்பொழுதும் ஒழுங்கான பற்களைப்பெற உதவுகிறது. வாய்க்கும் சுவாசத்திற்கும் புதுமணத்தை அளிக்கின்றது. மேலும் அதன் 3 கவர்ச்சிகரமான வர்ணங்களிலுள்ள டப்பிகளில் எதை தேர்ந்தெடுத்தாலும் உபயோகிக்க மிகவும் சௌகரியமாயிருக்கும்.




# கிப்ஸ் டென்டிபிரிஸ்

ஒழுங்கான முறையில் பற்களை வெண்மையாக சுத்தம் செய்கிறது







# Jasmine

TOILET SOAP

## பாஸ்வா - ஜாஸ்மின்

ஸ்னான சோப்பு

NAS 446

### பொன்னான மேனியும் குன்றாத குதூகலமும்......

முகம் கழுவினாலும், கைகளை அலம்பினாலும் வழக்கமாக ஸ்னானம் செய்தாலும் பாஸ்வா ஜாஸ்மின் சோப்பை உபயோகியுங்கள். வெண்மையான நுரை சருமத்தை மிருதுவாகவும் பளபளப்பாகவும் ஆக்குவதுடன் அதன் நறு மணம் நாள் முழுதும் உங்களை உற்சாகமுடன் இருக்கச் செய்யும்.

**இன்றே ஒரு சோப் வாங்குங்கள்**

பம்பாய் சோப் பாக்டரி
பம்பாய்
(ஸ்தாபிதம்: 1904)

ஏஜண்டுகள்
ஜெய் ஹிந்த் ஏஜன்ஸிஸ்
2/8, பந்தர் தெரு, ஜி. டி., மதராஸ்

---

மிகவும் அபூர்வமான

# PEPS

## இருமல், ஜலதோஷம், குளிர் ஜுரம், இன்ப்ளுவென்ஸா ஆகியவற்றைக் கண்டிக்கிறது

பெப்ஸ் மாத்திரை வாயில் கரையும்போதே அதன் மருந்து சத்துக்கள் சுவாஸப் பைக்கும் மார்புக்கும் செல்கின்றன. பெப்ஸில் உள்ள அபூர்வ சத்துக்கள் வெகு விரைவில் அபாயகரமான கிருமிகளை அழித்து, தொண்டை கரகரப்பை அகற்றி, கமைச்சலைப் போக்கி, ஓயாத இருமலையும் நிறுத்தி விடுகிறது. சாப்பிட இனிமையானது.

**PEPS** மார்பு, சுவாஸப்பை உபத்திரவங்களுக்கு மிகவும் இன்றியமையாத கிருமி நாசன மாத்திரைகள்

No. 4

# மகாத்மா காந்தி ஸ்தூபி நிதி

| | | | |
|---|---|---|---|
| தஞ்சை ஜில்லா போர்டு | 2,500 | 0 | 0 |
| மதுரை நகரசபை | 1,001 | 0 | 0 |
| வேலூர் நகரசபை | 1,001 | 0 | 0 |
| திருச்சி ஜில்லா போர்டு | 1,000 | 0 | 0 |
| கோயமுத்தூர் நகரசபை | 1,000 | 0 | 0 |
| ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் அவர்கள், திருப்பனந்தாள் மடம் | 1,000 | 0 | 0 |
| திருச்சிராப்பள்ளி நகரசபை | 501 | 0 | 0 |
| ஸ்ரீ ஆர். கோவிந்தசாமி மூப்பனார், சுந்தரப் பெருமாள் கோயில் | 500 | 0 | 0 |
| விருதுநகர் நகரசபை | 250 | 0 | 0 |
| மதுரை கள்ளழகர் கோயில் தேவஸ்தானம் | 250 | 0 | 0 |
| திருநெல்வேலி நகரசபை | 250 | 0 | 0 |
| காஞ்சீவரம் நகரசபை | 250 | 0 | 0 |
| ஸ்ரீவில்லிபுத்தூர் நகரசபை | 250 | 0 | 0 |
| மெஸ்ஸர்ஸ் பி. ஆர். நாதம் அண்டு கம்பெனி, சுபாஷ் சந்திர போஸ் ரோட், சென்னை | 116 | 0 | 0 |
| திருவண்ணாமலை நகரசபை | 111 | 0 | 0 |
| தஞ்சாவூர் நகரசபை | 101 | 0 | 0 |
| வழுவூர் ஸ்ரீ வீரட்டேஸ்வரர் கோயில் தேவஸ்தானம் | 100 | 0 | 0 |
| மன்னார்குடி ஸ்ரீ ராஜகோபால சுவாமி தேவஸ்தானம் | 100 | 0 | 0 |
| மேட்டுப்பாளையம் நகரசபை | 100 | 0 | 0 |
| திருச்சி ஸ்ரீ தாயுமானசுவாமி தேவஸ்தானம் | 100 | 0 | 0 |
| குடியாத்தம் நகரசபை | 100 | 0 | 0 |
| ஸ்ரீ வி. கே. சுப்பிரமணிய ஐயர், பாரதி லஞ்ச் ஹோம், மயிலாப்பூர் | 63 | 0 | 0 |
| பெரியகுளம் நகரசபை | 51 | 0 | 0 |
| ராசிபுரம் நகரசபை | 50 | 0 | 0 |
| மூவலூர் மார்க்கசகாயம் தேவஸ்தானம் | 50 | 0 | 0 |
| ஸ்ரீமதி கிருஷ்ணவேணி அம்மாள் பாரதி சங்கீத வித்யாலயம், தியாகராய நகரம், சென்னை | 50 | 0 | 0 |
| பாமணி, ஸ்ரீ நாகநாத சுவாமி தேவஸ்தானம் | 50 | 0 | 0 |
| தேவூர் தேவபுரீஸ்வரர் தேவஸ்தானம் | 40 | 0 | 0 |
| மாயவரம் பெரம்பூர், சுப்பிரமணிய சுவாமி தேவஸ்தானம் | 25 | 0 | 0 |
| ஆழ்வார்திருநகரி எம்பெருமானார் தேவஸ்தானம் | 25 | 0 | 0 |
| கரண்டை பஞ்சாயத்து போர்டு | 25 | 0 | 0 |
| திண்டுக்கல் காளஹஸ்தீஸ்வர சுவாமி தேவஸ்தானம் | 25 | 0 | 0 |
| பர்மா மெயின்ஸ் மதுரை சமாஜம், பர்மா மெயின்ஸ் | 25 | 0 | 0 |
| உத்தமசோழபுரம் ஸ்ரீ கரப்பிரிய ரத்னசாமி தேவஸ்தானம் | 20 | 0 | 0 |
| உடையார்பாளையம் ஸ்ரீ கைலாச நாதஸ்வாமி தேவஸ்தானம் | 20 | 0 | 0 |
| மணப்பாறை குமாரவடி ஐயன் தேவஸ்தானம் | 15 | 0 | 0 |
| சென்னை ஸ்டாண்டர்டு வாக்குவம் ஆயில் கம்பெனி ரிக்ரியேஷன் கிளப் நன்கொடை | 13 | 12 | 0 |
| குருங்களி முத்துமாரியம்மன் கோயில் தேவஸ்தானம் | 11 | 0 | 0 |
| ஸ்ரீ கலி.சுப.த. நடேசப் பிள்ளை, குன்னக்குடி | 11 | 0 | 0 |

ரூ. 10—0—0: ஸ்ரீமான்கள் வீரபாண்டி கன்னீஸ்வர உடையார் கோயில் தேவஸ்தானம்; சத்தியகுடி வேதபுரீஸ்வர ஸ்வாமி கோயில்; என். அய்யப்பச் செட்டியார், கோயில் டிரஸ்டி, ஜெயமங்கலம்.

ரூ. 5—0—0: ஸ்ரீமதி லக்ஷ்மி தண்டபாணி, சோழமங்கலம்; ஸ்ரீமான்கள் கே. வி. சுந்தரராமன், கோபிச்செட்டிப்பாளையம்; கி. நடராஜன், வல்லூர்; கா. கி. ஆ. முகம்மது இப்ராஹிம், திருமங்கலக்குடி; ஸ்ரீமதி என். நித்தியமாலா, திருக்கோகர்ணம்; பேட்டை ஸ்ரீ சக்கரவிநாயகர் கோயில்.

ரூ. 3—3—0: கிராம முன்னேற்ற சேவா சங்கம், தண்டலம் கிராமம். ரூ. 3—0—0: ஸ்ரீ டி. கோவிந்தராஜுலு, ஆடுதுறை. ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் நீ. சுப. சுப. சுப்பிரமணியம் செட்டியார், வெந்திரூர்; வி. கணேசப் பிள்ளை, நாகர்கோயில்; ஸ்ரீமதி சாரதாம்பாள், கீழ்ப்பாக்கம், சென்னை.

ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் வி. ராஜாராமன், சென்னை; க. ஆறுமுகம், கோட்டையூர்; செ. கூத்தபெருமாள், பெரியகோட்டை; கே. நாராயணன் நாடார், கோட்டையூர்; வீர. இன்னையா சேர்வை, கடுமலை; கே. ருக்குமணி பாமா, மாப்பிள்ளைகுப்பம்; டி. எஸ். மணியம், மாப்பிள்ளைகுப்பம்; என். டி. அனந்தநாராயணன், திருச்சி; என். பாலசுப்பிரமணியன், திருச்சி; என். டி. வைகுநாதன், திருச்சி; ஆர். சீனிவாச ராகவன், திருச்சி; கே. எஸ். சுப்பிரமணியன், திருச்சி; எஸ். செந்திலபதி செட்டியார், அரந்தாங்கி; ஸ்ரீமதி ராமா பிச்சுமணி அம்மாள், அனவரதநல்லூர்; கே. துரைசாமி அய்யர், மயிலாப்பூர், சென்னை; ஏ. கே. கோஷ், கேபின் கம்பெனி, கோல்முரி.

சென்னை "குண்டூசி"ப் பத்திரிகை மூலமாக ரூ. 794—4—6 க்கு விவரம்:—

| | | | |
|---|---|---|---|
| ஹாஸ்ய நடிகர் ஸ்ரீ டி. ஆர். ராமச்சந்திரன், சென்னை | 501 | 0 | 0 |
| ஸ்ரீமதி எம். லக்ஷ்மி பிரபா, சினிமா நடிகை, தியாகராயநகர் | 101 | 0 | 0 |
| பேபி சரோஜா, கும்பகோணம் | 51 | 0 | 0 |
| ஸ்ரீ பி. சிவகுரு, 'குண்டூசி' ஏஜண்டு, கோலாலம்பூர் | 50 | 0 | 0 |
| ஸ்ரீ என். எஸ். மணியம் அண்டு சன்ஸ், சென்னை | 11 | 0 | 0 |

ரூ. 10—0—0: ஸ்ரீ அ. ச. கிருஷ்ணமூர்த்தி, சென்னை; ஸ்ரீமதி பி. ஏ. பெரியநாயகி, சினிமா நடிகை, சென்னை.

ரூ. 5—0—0: ஸ்ரீமதி பேபி ராஜாமணி, நாட்டிய நக்ஷத்திரம், சென்னை; ஸ்ரீமான்கள் எஸ். சுவாமிநாதன், சென்னை; வி. கோபால்.

ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் கே. நிஸார் அஹமது, கோவை; கே. பாலகிருஷ்ணன், மலாயா; டி. மகாலிங்கம், மலாயா; பர்னிச்சர் பீபிள், சென்னை; எம். சோமசுந்தரம் செட்டியார், சென்னை; எஸ். எம். எச். அக்பர், சென்னை; எஸ். ஆர். ஸ்ரீனிவாச ராவ், சென்னை; வி. சந்திரசேகர், கோயமுத்தூர்; கே. எம். துரைசாமி; கே. ஸ்ரீநிவாசன்.

ரூ. 1—8—0: ஸ்ரீ வி. எம். தர்மராஜன்; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் வி. ஜி. வைத்தி

கமலா! என்னைக் கல்யாணம் செய்து கொள்ள உனக்கு இஷ்டம்தானே?" என்றார் 'இவர்'.

"இல்லாவிட்டால் இங்கேயே உயிரை விட்டு விடுவீர்கள் போலிருக்கிறதே!" என்று வாய்விட்டுச் சிரித்தேன் நான்.

"போக்கிரிப் பெண்ணே!" என்று என் கன்னத்தில் லேசாகத் தட்டினார் 'இவர்'.

"ஊம், கல்யாணமாவதற்கு முன் பேயா?" என்று அதட்டினேன் நான்.

அப்புறம் எங்களுடைய அபிலாஷை எளிதில் ஈடேறுவதற்கான வழியைச் சொன்னார் 'இவர்'. நானும் அதற்கு ஒப்புக் கொண்டேன்......

## மூர்த்தி சொல்லுகிறான்:

அத்தை எப்பொழுதும் ஆறு மணிக்குத்தான் தண்ணீர் எடுக்க ஆற்றுக்குச் செல்லுவது வழக்கம். பெரும்பாலான சமயங்களில் கமலாவும் கூட இருப்பாள். அதைத்தான் நாங்கள் பயன் படுத்திக் கொள்ள எண்ணியிருந்தோம்.

யாவும் முன்னேற்பாட்டின் படியே நடந்தன...

'மோகினி' அடித்து மயக்க மடைந்தவன்போல் நான் அலங்கோலமாகத் தரையில் கிடந்தேன். திட்டப்படியே அத்தையை அழைத்துக் கொண்டு வந்த கமலா மாந்தோப்பு வழியாகத் திரும்பினாள். என்னையும் அத்தையின் கவனத்திற்கு இலக்காக்கினாள்......

"விளக்கு வைக்கிற நேரத்தில் யாரோ படுத்துக் கொண்டிருப்பதைப் பார்த்தீர்களா, மாமி?" என்று கேட்டாள் கமலா அத்தையிடம்.

"யாரோ வெளியூர் போலிருக்கிறது!" என்று அத்தை சமாதானம் சொன்னாள்.

"போய்த்தான் பார்ப்போமே!"

"நம் மூர்த்தி போல் இல்லை? அட, மூர்த்தியேதான்!" என்று அலறிப் புடைத்துக் கொண்டாள் அத்தை. என் உடம்பைப் பிடித்துக் குலுக்கி மூர்ச்சையைத் தெளிவிக்க முயன்றாள்.

ஆனால் நானா எழுந்திருப்பேன்?

அதற்குள் கமலா, "நான் போய் யாரையாவது அழைத்து வரட்டுமா, மாமி?" என்று கேட்டாள்.

"வேண்டாம், நான் மட்டும் தனியாக இருக்கமாட்டேன். இரண்டு பேருமாகச் சேர்ந்து தூக்கிக் கொண்டு போய்விடலாம். கொஞ்ச தூரம்தானே!" என்று அத்தை கமலாவிடம் கெஞ்சினாள்.

"என்னால் முடியாது. 'இவ'ரைப் பிடித்து நான்......"

"ஆபத்து வேளையில் தோஷமில்லை, கமலா! கொஞ்சம் தண்ணீரை எடுத்து வாயில் ஊற்று......"

"ஊஹூம், நான் மாட்டேன். யாராவது பார்த்துவிட்டால் நன்றாயிராது!" என்று அழுத்திச் சொன்னாள் கமலா.

"உன்னைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று பிடிவாதமாக இவன் இங்கே வந்திருக்கிறான். நான் இருந்து முடித்து வைக்கிறேன். வா கமலா; சீக்கிரம் போய்விடலாம்."

"போங்கள், மாமி! உங்களுக்கு எப்பொழுது பார்த்தாலும் பரிகாசம்தான்!"

கமலா தன் முன்றானையை நனைத்துக் கொண்டு வந்ததும் என் அத்தை துடைத்துவிட்டாள். என் காரியம் பலனளித்துவிட்டது; நானும் விழித்துக் கொண்டேன்.

அத்தையைப் பார்த்து, "என்ன அத்தை நடந்தது! யார் இந்தப் பெண்?" என்று கேட்டேன்.

"யாரா! உனக்கு ஒன்றுமே தெரியாதோ?"

கமலா ஒதுங்கிச் சென்றுவிட்டாள்.

•  •  •

"நான் இங்கே இல்லாமல் உங்கள் உடம்பு அரும்பாய் இளைத்துவிட்டதே! வேளா வேளைக்குச் சாப்பிட்டால் தானே?" என்று கமலா அன்பாகக் கடிந்து கொண்டு வந்தாள்.

"வேளா வேளைக்குச் சாப்பிட்டுக் கொண்டு இருந்து விடுவதனால் மட்டும் குதிரைப் பருத்து விடுவேனா? என் 'மோகினி'யைக் காணாமல் நான் தவித்துப் போனதை நீ பார்த்திருக்க வேண்டுமே!"

"விளையாடினது போதும். 'மோகினியாம், மோகினி!' என்னைக் கண்டால் பிசாசுமாதிரித் தெரிகிறதா, உங்களுக்கு?" என்று கமலா தன் முகத்தைச் சொடுக்கிக் கொண்டாள்.

"நீதான் 'மாந்தோப்பு மோகினி' இல்லையே!"

"ஆரம்பித்து விட்டீர்களல்லவா? எப்பொழுது பார்த்தாலுமா 'மோகினி, மோகினி' என்று கச்சரிக்க வேண்டும்? நேரமாகிறது; உங்கள் மாமியார் கொடுத்தனுப்பியிருக்கிற பட்சணத்தைச் சாப்பிட வாருங்கள்!" என்று கமலா உள்ளே சென்றாள்.

"பட்சணம் உன் கையால் செய்தது தானே கமலா?" என்று கேட்டேன் நான்.

போய்க் கொண்டிருந்தவள் கொஞ்சம் நின்று அழகாகச் சிரித்தாள். கமலாவினுடைய மோகனத் தோற்றம் என்னை அவளுடன் இழுத்துச் சென்றது.

விரும்பவில்லை. ஆகையால்தான் தந்திரமான வழியைக் கையாள வேண்டி வந்தது......

**கமலா சொல்லுகிருள்:**

'இவர்' ஊருக்குத் திரும்பிப் போன ஒரு வாரத்திற்குள்ளாக மறுபடியும் மாந்தோப்பில் பார்க்கும்படி நேர்ந்தால் ஆச்சரியமாக இராதா? அடுத்த விடுமுறையின் போதுதான் வரலாம் என்று 'கோடியாத்து மாமி' சந்தோஷப்தமாகச் சொன்னதை எண்ணி வேதனைப் பட்டுக் கொண்டிருந்த என்னுல் நம்பவே முடியவில்லை. அன்றைக்குப் போலவே புஸ்தகத்தை மார்பின்மீது போட்டுக்கொண்டு கண்களை மூடிய வண்ணம் படுத்திருந்தார்.

அருகில் போவதற்கு எனக்கு வெட்கமாக இருந்தது. மெதுவாகப் பின்னுல் நின்று கொண்டு ஒரு சிறு கல்லை விட்டெறிந்தேன். நான் பத்துத் தப்படிகள் எடுத்து வைப்பதற்குள்ளாக 'இவர்' அழைத்து விட்டார்.

"இந்தா, உன்னைத்தானே!"

நின்று திரும்பிப் பார்த்தேன். 'இவர்' என்னை நெருங்கி வந்து விட்டதைக் கண்ணுற்றதும் எனக்குப் புளகாங்கிதம் எல்லை மீறி விட்டது.

"புஸ்தகம் படிக்கிற லட்சணம் நன்ருக இருக்கிறதே!" என்று 'இவ'ரைப் பார்த்தேன்.

"அதற்காகக் கல்லை விட்டெறிகிறதாக்கும்?" என்று சிரித்தார் இவர்.

"தூங்குவதாகப் பாசாங்கு செய்கிறீர்களோ என்று பார்த்தேன். நன்ருக வேஷம் போடுகிறீர்களே!"

"அதெல்லாம் கிடக்கட்டும். நான் மறுபடியும் இங்கே வருவேன் என்று எதிர் பார்த்தாயோ?" என்று கேட்டுக் கொண்டே என்னைத் தொட்டு விடுகிறாப் போல் சமீபித்து விட்டார்.

இவ்வளவு லேசிலா 'இவ'ரைக் காரிய சித்தி பெற விட்டு விடுவேன்?

"எனக்கு வேறு வேலை......" என்று பல்லைக் கடித்து நிறுத்திக் கொண்டேன்.

"உனக்கு வேலை யிருக்குமாளுல் போய் வா; இரவு நான் ஊருக்குத் திரும்புகிறேன்." என்று நாத் தழுதழுக்கச் சொன்னுர் 'இவர்'. ஐயோ, அந்தப் பரிதாபத்தை என்னவென்று கூறுவேன்!

"அதனுல் எனக்கென்ன வந்ததாம்?" என்று வழக்கமான பாணியில் கழுத்தை ஒடித்துத் திருப்பிக் கொண்டேன். அதே சமயம் என் இருதயத்திலும் ஒரு முறிவு ஏற்பட்டதை உணர்ந்தேன். பாவம், வெகுளி! என்மேல்தான் எவ்வளவு நம்பிக்கை 'இவ'ருக்கு!......நல்ல மனுஷர்; நான் போய் விடுவேன் என்று 'இவ'ரால் எதிர்பார்க்க முடியவில்லையோ, என்னவோ!

புஸ்தகத்தை எடுத்துக்கொண்ட வண்ணம் "இதுதான் நீ என்னைக் கடைசியாகப் பார்ப்பதாக இருக்கட்டும்" என்ருர் 'இவர்'.

"நீங்கள் என்னைப் பார்க்காவிட்டால் பரவாயில்லை. நான் உங்களைப் பார்த்துக் கொண்டே இருந்தால் என்ன செய்து விடுவீர்களாம்?"

வயதுப் பொருத்தமுள்ள புருஷர்களைக் கண்டால் பெண்களுக்கு இல்லாத குணங்களும், சாதுரியமும் தாளுக வந்து விடுமோ? எனக்கு அப்படித்தான் இருந்தது. 'என் பெண்ணுக்குப் பேசவே தெரியாதே!' என்று பெருமையடித்துக் கொள்ளும் என் தாயார் பார்த்திருந்தால் நிச்சயம் ஸ்தம்பித்து விட்டிருப்பாள்!

நான் சொன்னதைக் கேட்டதும் 'இவ'ருக்கும் என் மனம் புரிந்து விட்டது. கெஞ்சும் குரலில், "நிஜமாகச் சொல்,



பாகவதர்:—என்ன ஸார்! நேற்றைய தினம் என் கச்சேரிக்கு உங்களை வரச் சொன்னேனே, நீங்கள் வரவில்லை போலிருக்கிறது.

ரஸிகர்:—நன்ருய்ச் சொன்னீர்! சபையில் ஒருவர் கைதட்டினுரே, அவர் யார் என்று நினைத்தீர்? நான்தான், ஐயா!

பாகவதர்:—அது நீங்களா? நான் சிவராமனை யல்லவா கை தட்டச் சொல்லியிருந்தேன்!—அப்பொழுது அந்தப் பயல் கை தட்டவில்லையா?

பட்ட வலியாக இருந்தாலும் அந்த மாத்திரையைச் சாப்பிட்டவுடன் பஞ்சாய்ப் பறந்துவிடுகிறதாம். போகலாம், உனக்கு ஒன்றை வாங்கிக் கொடுக்கிறேன்."

மாந்தோப்பு நிகழ்ச்சியைப் பற்றிய பிரஸ்தாபம் எழாமற் போகவே எனக்குத் துணிவு வலுத்து விட்டது. அம்மாவும் அர்த்தம் நிறைந்த திருஷ்டியுடன் நோக்கவே கிளம்பிவிட்டேன்.

'இவர்' ரேழி அறைக்குள் எதையோ வெகு கவனமாகப் படித்துக் கொண்டிருந்தார். நான் வேண்டுமென்றே கனைத்துக் காண்பித்தும் அவர் அசைந்து கொடுக்கவில்லை......

## மூர்த்தி சொல்லுகிறான் :

எப்படியோ கிராமத்துப் பெண்களைக் குறித்து என் மனதில் அலட்சிய மனோபாவம் ஏற்பட்டு விட்டிருந்தது. ஆகையால்தான் அத்தை திரும்பி வந்தபோது வேறு யாரோ கூட இருந்ததைப் பற்றி நான் சிரத்தை கொள்ளவில்லை; வாசித்துக் கொண்டிருந்த புஸ்தகத்திலேயே கருத்தாய் இருந்து விட்டேன்.

உள்ளே இருந்து கொண்டு அத்தை, "மூர்த்தி!" என்று என்னைக் கூப்பிட்டாள். அவளுடைய குரலில் புதுப் பாசம் பெருக்கெடுத்திருந்தது போலிருந்தது.

"நீ தூங்கவில்லையே?......என்னவோ மாத்திரை கொண்டு வந்திருந்தாயல்லவா? அதில் ஒன்று இருந்தால் கொடு!"

"மாத்திரை என்றவுடன் எனக்குப் படிப்பதற்கு மேலே ஓடவில்லை. காலையில்தான் அத்தை அந்த மாத்திரையைச் சாப்பிடக் கூடாது என்று எனக்கு உபதேசித்திருந்தாள். ஆகையால் மாத்திரை அத்தைக்காக இல்லையென்பது நிதரிசனமாக எனக்கு விளங்கிற்று. பதில் எதுவும் பேசாமல் மாத்திரையை எடுத்துக் கொடுத்துவிட்டுச் சாப்பிடும் விதத்தையும் விவரித்தேன்.

சில விநாடிக் கெல்லாம் உள்ளேயிருந்து பேச்சுக் குரல் கேட்டது.

"மாமி, பட்டணத்துப் பிள்ளைகளுக்குக் கொஞ்சம் அசட்டுத்தனம் அதிகமோ?"

"என்ன சொல்லுகிறாயடி, கமலா?"

"சொன்னால் கோபித்துக் கொள்ள மாட்டீர்களே? சுக்கை அரைத்துப் போட்டுக் கொள்ளுகிறதை விட்டுவிட்டு 'மருந்து' என்று இதை யாராகிலும் சாப்பிடுவார்களோ? கசப்பு, அடிவயிற்றைக் குமட்டிக்கொண்டு வருகிறது!"

"கசப்பாக இருந்தால் என்ன? குணம் தெரிகிறதோ இல்லையோ, பாரேன்!"

"மூக்கைச் சுற்றி வளைத்துத் தொடுகிறாப்போல......"

அந்தப் பேச்சில் தொனித்த துடுக்குத்தனம் என் உணர்ச்சிகளைத் தூண்டிவிட்டது.

"நான் போய் வரட்டுமா, மாமி?"

நான் நிமிர்ந்து உட்கார்ந்தேன். கரங்களின் வளைகள் அசாதாரணமாக உராய்ந்து சப்தித்தன. காணிக் கோணி விழிக்கோணத்தால் என்னை விழுங்கிவிட்டு ஓடிய இந்தக் கமலாவை இப்போது நினைத்தால்கூடச் சந்தேகமில்லாமல் இவள் மோகினியேதான் என்று தோன்றுகிறது!

கமலா போய்விட்ட பிறகு அத்தையிடம் விசாரித்தேன். அத்தையின் முகம் ஒருமாதிரியாக மாறிவிட்டது. ஆகையால் கல்யாணம் செய்து கொள்ளுவதைப் பற்றி அதுவரை சிந்தனை ஏற்படாமலிருந்த எனக்குக் கமலாவின் சகவாசத்தில் பலமான ஆசை உண்டாகிவிட்டது!

'கண்டதும் காதல்' என்று சொல்லுவதற்கும் இதற்கும் துளிக்கூடச் சம்பந்தமில்லை. நான் கமலாவைப் பார்த்திருந்ததெல்லாம் அரைகுறையாக இரண்டே தடவைகள்தான்! அவளுடைய குறும்புப் பேச்சும், விஷமத்தனமும், அத்தையின் சுபாவமும் என்னுடைய பிடிவாதத்திற்குத் தூண்டுகோலாக உதவின. கல்யாணம் செய்து கொண்டால் கமலாவைத்தான் கல்யாணம் செய்து கொள்வது என்ற முடிவிற்கு வந்துவிட்டேன்.

ஊருக்குத் திரும்பியதும் விஷயத்தை என் தாயாரின் காதிற்கு மெல்ல எட்டவிட்டேன். கேட்டவுடன் என் தாயாருக்கு மகிழ்ச்சி கரை புரண்டோடியது. அத்தையின் 'விசாரணை அறிக்கை' சமர்ப்பிக்கப்பட்டதும் அம்மாவின் மனமும் துவண்டுவிட்டது.

"அந்தப் பெண்ணின் ஜாதகம்........." என்று அம்மா எதையோ சொல்ல வந்தாள். அவளுடைய வீண் மழுப்பலை நான் ஏற்றுக் கொள்ளச் சம்மதிக்கவில்லை. ஜாதகம் மனம் ஒத்துச் சந்தோஷமாக வாழ்க்கையை நடத்துவதற்குத் தடை விதிக்கிறதோ?

"அதெல்லாம் எனக்குத் தெரியாது, அம்மா! இனிமேல் என்னுடைய கல்யாண விஷயமாகப் பேசக் கூடாது; சொல்லி விட்டேன்!" என்று ஒரு போடு போட்டேன்.

அம்மாவின் நிலைமை தர்ம சங்கடமாகிவிட்டது. அப்பாவிடம் எவ்வளவோ சிபாரிசுகள் செய்து பார்த்தாள். ஜாதகக் குறையைச் சகித்துக் கொள்ள அவர்

கவனத்தைக் கவர எவ்வளவோ முயற்சிகள் செய்து பார்த்தேன்...

வேண்டுமென்றே பாத்திரங்களை ஓசைப்படுத்துவேன்; குரலை உயர்த்தி உயர்த்திப் பேசுவேன்; 'இவர்' படுத்துக்கொண்டிருக்கும் கூடத்துப் பக்கம் நூறு தடவைகளாவது போய் வந்திருப்பேன்! ஒன்றும் 'இவர்' காதுகளுக்குக் கேட்காதோ? கடைசியில்தான் அந்த விசித்திரமான எண்ணம் என் உள்ளத்தில் உதயமாயிற்று...



வீட்டிற்கு வந்தபிறகும் படபடப்பு அடங்கவில்லை. ஒருவேளை என்னை அடையாளம் தெரிந்திருக்குமானால்? வந்தது வரட்டும் என்று ஒன்றும் அறியாதவள் போல் சுண்ணும்புக் கட்டியொன்றை எடுத்துக்கொண்டு கோலம் போடுகிற பாவனையாகத் தரையில் இருக்கலானேன்......

முதலில் ஒரு தோல்வி ஏற்பட்டதிலிருந்து என் மனம் அம்மாதிரியான விளையாட்டுக்களில் அதிகப் பற்றுக் கொண்டு விட்டது. அப்பொழுது சந்திரசேகரன் என்னைத் தன் 'கிரகலக்ஷ்மி' யாக்கிக் கொண்டுவிடப் போகிறார் என்று கனவு கண்டேன். ஆனால், நல்லவேளை; விதியின் போக்கு வேறு விதமாக இருந்தது.

எனக்கும் சந்திரசேகரனுக்கும் என்று எல்லாம் முடிவாகி விட்டன. நிச்சயதார்த்தத்திற்கு இரண்டு நாட்கள் இருக்கும் போது அவர்மீது வழக்குத் தொடரப்பட்டு விட்டது. அவர் வேலையில் அமர்ந்திருந்த 'பாங்'கில் ஏதோ 'தாறுமாறாக' நடந்து கொண்டதின் காரணமாக அவரை 'வாரண்'டில் பிடித்துச் சென்று விட்டார்கள்; கல்யாண ஏற்பாடுகளும் அத்துடன் தடைப்பட்டு விட்டன. நிச்சயதார்த்தத்திற்கு முன்பாக விஷயம் வெளிப்பட்டதே, அதுவரை நான் பாக்கியசாலி யல்லவா? ஆனால் அப்பாவுக்கு என்மேல் காரணமில்லாத அதிருப்தி உண்டாகி விட்டது. அவர் தேடிப் பிடித்த 'சரக்கு' சொத்தையாக இருந்ததற்கு நானா பொறுப்பாளி?

அதிலிருந்து ஊரில்கூட நல்ல அபிப்பிராயமில்லை என்று சொல்லிவிடலாம். 'இவ'ருடைய அத்தைக்குக்கூட என்மேல் எவ்வளவோ அநுதாபமிருந்தும் இட்ட நெருங்கும்போது கையை விரித்து விட்டார். 'இவர்'தான் ஒரே பிடிவாதமாக இருந்து.........

மாந்தோட்பில் அசட்டுத்தனமாகக் காரியம் செய்துவிட்ட பின்னர் நான்கைந்து நாட்கள் வரை வெளியில் எங்குமே செல்ல மனம் வரவில்லை. அதைக் கண்டு என் தாயாருக்குக் கூட அதிசயமாகப் போய்விட்டது. 'மாமி, மாமி!' என்று எடுத்ததற்கெல்லாம் கோடியாத்துக்குப் போய் வலிய உறவாடிக் கொண்டிருந்த நான் கொஞ்ச நாளாக அடங்கி யிருப்பதை யாரால்தான் நம்பமுடியும்?

அன்று 'இவ'ருடைய அத்தை எங்கள் வீட்டிற்கு வந்திருந்தார். என் இருதயம் 'படபட' வென்று அடித்துக் கொண்டது. 'இவர்' ஏதாவது உளறி வைத்திருப்பாரோ என்று எனக்குள் சந்தேகம். ஆனால் அப்படியொன்றும் நேர்ந்திருக்கவில்லை......

நான் ஊஞ்சலில் படுத்துக் கொண்டிருந்தேன். 'கோடியாத்து மாமி' என் பக்கத்தில் வந்து நின்று, "தூங்குகிறாயா, கமலா?" என்று அழைத்தவுடன்தான் தைரியமாக எழுந்து உட்கார்ந்தேன் நான்.

"காலையிலிருந்து உடம்பு ஒரு மாதிரியாக இருந்தது. அதுதான் படுத்துக் கொண்டேன். உங்களை இந்தப் பக்கம் பார்க்கவே முடியவில்லையே!" என்றேன் நான் பாதித் தயக்கத்துடன்.

"கும்பகோணத்திலிருந்து மூர்த்தி வந்திருக்கிறானல்லவா? அவன் பெரிய இடத்துப் பையன்; வராத இடத்திற்கு வந்திருக்கிறான். அவனைக் கவனிப்பதற்குள் எனக்குப் பொழுதே இல்லாமற் போய் விடுகிறது!" என்று சொல்லிக் கொண்டே பெருமையுடன் என்னைப் பார்த்தார் 'இவருடைய' அத்தை.

ஒரு கணம் என்னுடைய உள்ளமும் பொங்கி வழிந்தது. ஆனாலும் அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல் நான் மறைத்துக்கொண்டு "வலி பிராணன் போகிறது, மாமி!" என்றேன்.

"உடம்பு வலிக்கிறதா, கமலா? என்னோடு வா! மூர்த்தி ஒரு மாத்திரை கொண்டு வந்திருக்கிறானாம். எப்பேர்ப்

கொண்ட வண்ணம் கண்களை மூடி 'மோகினி'யைப் பற்றிய கற்பனைகளில் ஆழ்ந்தேன்.

கற்பனைகள் கனவாக விரிந்தன...

என் எதிரில் மோகினி தோன்றுகிறாள். காவியங்களில் வர்ணித்திருப்பார்களே, அம்மாதிரியான ஸௌந்தர்ய ஆகிருதி. அவளுடைய எழிலுருவைக் கண்டு நடுங்கும்படியாக அவளிடம் எனக்குக் குறைகள் எவையும் தென்படவில்லை. அதற்குப் பதிலாக எவரையும் மயக்கி விடும் மோகனப் புன்னகை அவளுடைய முகார விந்தத்தில் வளருகிறது.

நான் அவளிடம் பேசத்தயங்குகிறேன். அதை அறிந்தவள் போல் அவள் தானாகவே பேச்சைத் தொடங்குகிறாள்:

"என்னைக் கண்டு நீங்களும் பயந்து ஓடி விடப் போகிறீர்களோ என்று எதிர் பார்த்தேன். மற்றவர்களை விட உங்களுக்கு நெஞ்சழுத்தம் அதிகம்தான்!" என்று மோகினி எனக்குப் புகழ்மாலை சூட்டி மகிழ்விக்கிறாள்.

மோகினியின் அழகு என் கண்களைப் பறிக்கின்றன. நான் கண்கொட்ட மனம் வராமல் தவிக்கிறேன்....

அவளுடன் பழக நான் விரும்புவதைக் காட்டிக்கொள்ளுவதற்காக, "உன்னைச் சந்திப்பதற்காகவென்றே ஒருவார காலமாக நான் இங்கு வந்து கொண்டிருக்கிறேன். இன்றுதான் என் ஆசை பூர்த்தியாயிற்று" என்று பெருமையுடன் சொல்லிக் கொள்ளுகிறேன்.

"நானும் கூட அப்படித்தான்! உங்களைப் பார்க்க வேண்டுமென்பதற்காக உங்கள் எதிரில் தோன்றாமலிருந்தேன், ஒருவேளை எல்லோரையும் போல் நீங்களும்......" என்று சொல்லிக் கொண்டே உடலைக் குலுக்கிச் சாகசமாகச் சிரிக்கிறாள் மோகினி. அவளை, "இப்படித்தான் உட்காரேன்!" என்று உபசரணை செய்கிறேன் நான்.

"உங்கள் சகவாசம் கிடைப்பதற்கு நான் கொடுத்து வைத்திருக்க வேண்டுமே!" என்று கூறிக் கொண்டே அவளும் என்னருகில் அமர்ந்து விடுகிறாள்.

உட்கார்ந்தவள் என் மார்பின்மேல் கிடந்த புஸ்தகத்தை எடுக்கிறாள்......

திடீரென்று கனவு கலைந்தது; திடுக்கிட்டுக் கண் விழித்தேன். என் எதிரில் உண்மையாகவே ஒரு பெண் நின்று கொண்டிருந்தாள். அவள்தான் என் மார்பின்மேலிருந்த புஸ்தகத்தை இழுத்திருக்கிறாள்!

அழகில் 'மோகினி'யைப் போலவே இருந்த அந்தப்பெண் 'கல கல'வென்று சிரித்துக் கொண்டே, "நன்றா யிருக்கிறது! செவ்வாய்க் கிழமையும் அதுவுமாகத் தோப்பிற்குள் வந்து படுத்துக் கொள்ளுகிறதா? அங்கே உங்கள் அத்தை கவலைப்படுகிறதைப் பார்க்கச் சகிக்கவில்லை!" என்று மறுபடியும் என்னை ஆச்சரியத்தில் மூழ்க வைத்தாள்.

தூக்கக் கலக்கத்தில், "நீ...?" என்று தயங்கிக் கொண்டே கேட்டேன் நான்.

"நான் 'மோகினிப் பிசாசு' இல்லை" என்று சொல்லிக் கொண்டே ஓடி விட்டாள் அவள்.

'யார் இந்த அழகான பெண்?' என்று மனதிற்குள்ளாக யோசித்துக் கொண்டே வீட்டிற்குப் போக எழுந்தேன். அவளுடைய 'பல கோணத் தோற்றங்கள்' என் இதயப் பூங்காவில் அரும்பி மணம் வீசின. அத்தைக்குப் பழக்கமானவளாக இருக்கலாம் என்று சமாதானப் படுத்திக் கொண்டேன்......

### கமலா சொல்லுகிறாள்:

என்ன இருந்தாலும் எனக்கு இந்த அசட்டுத்தனம் வந்திருக்க வேண்டாம். 'இவ'ருடைய அத்தை தேடுவதைப் பற்றி எனக்கு என்ன அவ்வளவு அக்கறை? சே, சே! என்னையும் அறியாமல் நான் பெரிய பிசகுதான் செய்து விட்டேன்......

பிசகா!...... அதைப் பிசகு என்று எப்படிச் சொல்ல முடியும்? 'இவர்' கிராமத்திற்கு வந்ததிலிருந்து நானும் பார்த்து விட்டேன். என் பக்கம் தப்பித் தவறியாகிலும் திருஷ்டியைத் திருப்ப வேண்டுமே; ஊஹூம்...... இல்லை! கும்பகர்ணனுக்குப் பரம்பரை பாத்தியதையோ, என்னவோ! எப்பொழுது பார்த்தாலும் தூக்கம், தூக்கம்தானா? கோடியாத்துக்குப் போகும் ஒவ்வொரு தடவையும் நான் 'இவ'ருடைய



# மாந்தோப்பு மோகினி

டி. ஜி. பத்ருஸ்வாமி

**மூர்த்தி சொல்லுகிறான்:**

சரியாக ஒன்றரை மாதங்களுக்கப்புறம் அன்றுதான் கமலா தன் பிறந்தகத்திலிருந்து திரும்பி வந்திருந்தாள். அவள் வந்த சமயத்தில் நான் வீட்டில் இல்லை. வருஷக் கடைசி ஆனபடியால் கணக்கு வேலைகள் தலைக்கு மேல் கிடந்தன. கடமையைச் செய்து தீர வேண்டிய நிர்ப்பந்தத்தில் நான் வழக்கம் போல் ஆபீஸுக்குச் சென்று விட்டிருந்தேன்.

கமலா வந்திருப்பாள் என்ற நினைவில் ஆபீஸ் வேலைகளைக்கூட என்னால் அலுப்பின்றிச் செய்ய முடிந்தது. சீக்கிரம் வேலைகள் முடிந்து விட்டால் அவளைப் பார்க்கச் சென்று விடலாம் என்ற ஆர்வம்!...அப்பா! மனைவியின் பிரிவு வேதனைதான் எவ்வளவு கொடூரம் வாய்ந்ததாயிருக்கிறது......!

• • •

நான்கு வருஷங்களுக்கு முன்பு......

கும்பகோணம் அரசாங்கக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த நான் கோடை விடுமுறையைக் கழித்து விட்டு வருவதற்காக என்னுடைய அத்தையின் கிராமத்திற்குச் சென்றிருந்தேன்.

பெரிய பட்டண வர்க்கத்தில் கும்பகோணத்தைச் சேர்க்க முடியாது என்பது உண்மைதான். ஆனால் அங்கே இஷ்டப்படி அலைந்து திரிந்து பொழுதைப் போக்கி விட்டுக் கிராமத்தில் அடைபட்டுக் கிடக்க வேண்டுமென்றால் யாரால் முடியும்? பகல் வேளைகளில் வெய்யிலுக்குப் பயந்து படுத்திருந்து விட்டாலும் சாயங்கால நேரங்களில் கூட அப்படி இருக்க முடிவதில்லை. ஆகையால் வயற்பக்கமாக நடந்து போவதென்று தீர்மானித்தேன்.

முதல் நாள் நான் புறப்படும்போதே அத்தை ஒரு புதிரைப் போட்டு விட்டாள்!

நான் கால்களில் செருப்பை மாட்டிக் கொண்டவுடன் அத்தை, "மூர்த்தி! இருட்டுகிறவரையில் வெளியில் திரியாதே! ஊர் நிலவரம் சரியாக இல்லை. நேற்றைக்குக்கூட அந்த 'மாந்தோப்பு மோகினி' எவனையோ அடித்து விட்டதாம். மூர்ச்சையாகி விழுந்தவனை எழுப்ப மிகவும் கஷ்டப்பட வேண்டியிருந்ததாம்!" என்று எச்சரிக்கை செய்தாள்.

'மாந்தோப்பு மோகினி' என்று அத்தை சொன்னவுடன் அது வரை கேள்விப்பட்டிராத புது வார்த்தையைப் புரிந்து கொண்டாற் போலிருந்தது எனக்கு.

"மாந்தோப்பு மோகினியா!" என்று கேட்டுக் கொண்டே நின்றேன் நான்.

"ஆமாம், 'மோகினிப் பிசாசு' என்று கேள்விப் பட்டதில்லையா? மாந்தோப்பிற்கு அகாலத்தில் செல்லுகிறவர்களை அது அடித்துப் போட்டு விடுகிறதாம். நீ அங்கே போகாதே; ஒரு சமயம் போல் இருக்காது!"

"அத்தை, என்னைப் 'பயங்கொள்ளி' என்று சொல்ல உனக்கு ஆசையாக இருந்தால் நேரடியாக......"

"இந்தப் பட்டணத்துப் பிள்ளைகளுக்கே அலாதி மூளை! உன் மாதிரி வக்கணையாகப் பேச எனக்குத் தெரியாது. போய்ச் சீக்கிரமாகத் திரும்பி வந்து விடு" என்று அவள் தன்னுடைய வேலையைக் கவனிக்கச் சென்று விட்டாள்.

கட்டாயம் அந்த மாந்தோப்பிற்குப் போய் 'மோகினி'யைப் பார்த்து விட்டுத்தான் வேறு காரியங்களில் ஈடுபடுவது என்று தீர்மானித்தேன்.

ஐந்தாறு நாட்கள் வரை எனக்கு 'மோகினி'யின் தரிசனம் கிடைக்கவில்லை. இரவு எட்டு மணி வரையில் கூடக் காத்திருந்து பார்த்தேன். அப்பொழுதும் என் எண்ணம் ஈடேறும் வழியாக இல்லை. எனக்கும் உற்சாகம் குறைய ஆரம்பித்து விட்டது. ஒரு வேளை என்னைக் கண்டு 'மோகினி' பயந்து விட்டிருப்பாளோ? சவுக்கு மரங்களின் 'உ...ய்...ய்...' என்ற ஓசையைத் தவிர, பீதியை விளைவிப்பதற்கு அங்கு ஒன்றும் கிடையாது.

ஒரு வாரத்திற்குப் பின்னர் என்னுடைய அன்றாடத் திட்டங்களின் பிரகாரம் மாந்தோப்பிற்குச் சென்றிருந்தேன். கிளம்பும்போதே கையுடன் ஒரு புஸ்தகத்தையும் எடுத்துக் கொண்டேன். படித்துக் கொண்டிருக்கும்போது இடையில் எதனாலோ எனக்கு 'மோகினி'யின் ஞாபகம் வந்தது. பிறகு வெகுவாக முயன்றும் என் கவனம் புஸ்தகத்தில் நிலைக்கவில்லை. ஆகையால் புஸ்தகத்தை மார்பின் மீது வைத்து அழுத்திக்




டாக்டர் (மருந்துச் சீட்டை நோயாளியிடம் கொடுத்து):—இந்தா, இதை மூன்று நாளைக்குச் சாப்பிடு; உடம்பு குணமாகிவிடும்.

நோயாளி (கிராமவாசி):—என்னங்க டாக்டர், இந்தச் சின்னக் காகிதத்தை மூணு நாளைக்கு நான் எப்படிச் சாப்பிடறதுங்க?

★

ஒருவர்:—என்ன ஐயா, கடைக்காரரே! போன மாசம் நம்ம வீட்டுக்குப் பருப்பு கொடுத்தீர்களே, அந்தப் பருப்பு இருக்கிறதா?

கடைக்காரர்:—ஆகா! வேண்டியது இருக்கிறதுங்க; உங்களுக்கு எவ்வளவு வேண்டுங்க?

ஒருவர்:—எனக்கு வேண்டாம்; அந்தப் பருப்பு முழுவதும் தீர்ந்து போனதும் வருகிறேன்!

★

மானேஜர் (தூங்கிவழிந்த குமாஸ்தா குப்புசாமியைப் பார்த்து):— என்ன ஐயா, இப்படித் தூங்கி வழிகிறீர்?

குப்புசாமி:—மன்னிக்க வேண்டும். வீட்டிலே குழந்தை ராத்திரி தூங்க விடாமல் உபத்திரவம் செய்தது. அதனாலே இப்பொழுது கொஞ்சம் கண்ணயர்ந்து விட்டேன்.

மானேஜர்:—ஒன்று செய்யுமே! நாளைய தினத்திலிருந்து உம்முடைய குழந்தையை இங்கே அழைத்துக் கொண்டு வந்து விடும்!

★

அப்பா:—ஏண்டா ராமு, வண்ணான் தொலைத்த வேஷ்டிக்கும் சேர்த்துக் காசு வாங்கியிருக்கிறானே! எப்படி நீ கொடுத்தாய்?

ராமு:—இல்லை, அப்பா! நான் அவனோடு சண்டை போட்டுப் பார்த்தேன். அந்த வேஷ்டி தொலைந்து போவதற்கு முன்னாலேயே அவன் அதைச் சலவை செய்து விட்டானாம்!

வித்தைக்காரன் (கூட்டத்தில் இருந்த ஒரு பையனை அழைத்து):—டேய் பையா, என்னை இதற்கு முன்னால் நீ பார்த்திருக்கிறாயா? உனக்கு என்னைத் தெரியவே தெரியாதே?

பையன்:—தெரியவே தெரியாது, அப்பா!

★

பெண்:—அம்மா, ருக்மணி மாமியின் வீட்டுக்குப் போயிருந்தேன். அவர்கள் வீட்டுச் சல்லடையை நாம் பிய்த்து விட்டோமாம். அதற்காகத் திட்டினாள். இனிமேல் கொடுக்கமாட்டாளாம்.

அம்மா:—அந்தத் தரித்திரத்தின் வீட்டுக்கு இனிமேல் போகாதே; பக்கத்துத் தெரு வாத்தியார் அம்மாமி வீட்டுக்குப் போய்க் கேளு!

★

"அந்த வக்கீல் ஐயாயிரம் ரூபாய் பீஸ் கேட்கிறாராமே! அந்தத் தொகை யிருந்தால் ஒரு வீடு கட்டி விடலாமே!"

"ஆமாம், அவரும் வீடுதான் கட்டப் போகிறார்!"

---

## நல்ல தீர்மானம்!



மனைவி:—நான் இனி பிறந்தகத்துக்குப் போகப் போவதில்லை......!

கணவன்:—பேஷ், நல்ல தீர்மானம் செய்தாய்!

மனைவி:—ஏனென்றால் அப்பா ரிடயர் ஆகிவிட்டார். அவரும், அம்மாவும் குழந்தைகளோடு இங்கேயே வந்துவிடப் போகிறார்கள்!



கல்யாண வீட்டுக்காரர் (குமாஸ்தாவிடம்):—ஏன் சும்மா போய்க் கச்சேரியின் முன்னால் நிற்கிறீர்? உட்கார்ந்து கொள்ளும்.

குமாஸ்தா:—இதோ, அப்படியே செய்கிறேனுங்க!

செட்டியார்:—சும்மா உட்கார்ந்திருக்காதீர்! தலையை அடிக்கடி ஆட்டிக் கொண்டிரும்!

குமாஸ்தா:—யார் தலையை ஆட்ட வேணுங்க?

---

கண்ணபிரானுக்கு அவனுடைய பிடிவாதம் புரியாத புதிராக இருந்தது. ஆயினும் அவன் தாய் தந்தையரிடம் விஷயத்தைச் சொன்னான். "ரொம்ப நன்னாயிருக்கிறது! இன்னார் வீட்டு நாட்டுப் பெண் டாக்டருக்கு ஏன் படிக்கிறாள் என்று எல்லோரும் கேட்க மாட்டார்களா? உங்களுக்கு வீட்டில் சும்மா இருந்து கொண்டு சாப்பிடக் கசக்கிறது போலிருக்கிறது!" என்று அவர்கள் சரமாரியாகப் பொழிந்து தள்ளினார்கள்.

இதனால் ஏற்பட்ட அதிர்ச்சி கண்ணபிரானுக்கு எமனாயிற்று. சில நாட்களுக்கெல்லாம் "பங்கஜம், டாக்டர்!" என்று அவன் பலவாறாக உளறிக் கொண்டே இந்த உலக வாழ்க்கையை நீத்தான். பங்கஜம் அழுதாள்; ஓய்ந்தாள்.

லட்சக் கணக்கில் பணம் சேர்த்து வைத்திருந்த வக்கீல் தன் நாட்டுப் பெண்ணுக்காக ஓர் ஆயிரம் ரூபாய் கூட முழுசாகக் கொடுக்க விரும்பவில்லை. அவருக்கு ஏற்றாற் போல் ரகுவும், சாரதாவும் "பங்கஜத்திற்கு எதற்காகப் பணம் கொடுப்பது? அவளுடைய நகைகளைத் திருப்பிக் கொடுத்திருக்கிறோமே, அதுவே போதாதா?" என்று கொண்டி வாதம் செய்தனர். ஏழையின் சொல் எங்கேயாவது அம்பலம் ஏறுமா?

வேறு வழியின்றி, பங்கஜம் பிறந்தகம் வந்து சேர்ந்தாள். முன் வைத்த காலைப் பின் வைக்காமல் டாக்டருக்குப் படித்தாள். அதனால் தன்னுடைய நகைகள் யாவும் கரைந்து போனதைப் பற்றி அவள் சிறிதும் வருத்தப்படவில்லை. கடைசியில் டாக்டர் பட்டமும் பெற்றாள். தொழில் தொடங்கி ஒரு வருஷமாயிற்று. தன்னுடைய தன்னலமற்ற சேவையால் கண்ணபிரானின் ஆத்மா திருப்தி அடையும் என்ற தூய நம்பிக்கையில், அவள் தன் தொழிலை இடைவிடாது செய்து வந்தாள்.

*   *   *

இந்தச் சமயத்தில்தான் யாரோ ஒரு சிறுவன் காருடன் வந்து அவளை எங்கோ அழைத்துக் கொண்டு சென்றான். கார் ஒரு வீட்டு வாசலில் வந்து நின்றது. பங்கஜம் நடித்தது எல்லாம் உண்மையாகவே போயிற்று. அவளை எளிதில் அடையாளம் கண்டு கொண்ட சாரதா, தன்னுடைய நோயையும் மறந்து 'ஹோ' வென்று கதறிவிட்டாள்.

"அந்த நாளில் உனக்கு நான் செய்த துரோகத்தின் வினைவு இன்று வரை என்னைவிட்டு அகலவில்லை. பத்து வருஷங்களாய் நான் படும் கஷ்டத்தைச் சொல்லி முடியாது. ஓரே நோயாகப் போய் விட்டது. என்னை மன்னித்து விடு, பங்கஜம்! மைத்துனருக்கென்று வைத்திருந்த ஒரு லட்ச ரூபாயை உன்னிடம் ஒப்படைக்க வேண்டுமென்று உன்னைத் தேடி அலைந்தோம். என்னை மன்னித்ததின் அடையாளமாக, நீ இப்பொழுது அதைப் பெற்றுக் கொள்ள வேண்டும். நடைப் பிணமாக உயிர் வாழ்வதில் எனக்கு இஷ்டமில்லை. இனிமேல் நீதான் இந்தப் பையனைப் பார்த்துக்கொள்ள வேண்டும்" என்று உணர்ச்சியுடன் சொன்னாள்.

"சாரதா, தக்க சிகிச்சை செய்து கொண்டால் நீ பிழைத்து விடுவாய். நீ கொடுக்கும் லட்ச ரூபாயைக் கொண்டு நான் ஒரு தரும ஆஸ்பத்திரி கட்டலாமென்று நினைக்கிறேன். அப்போது எனக்குப் பக்கத்திலிருந்து உதவி செய்வதற்காகவாவது நீ உயிரோடு இருக்க வேண்டாமா?" என்று கேட்டுப் புன்னகை பூத்தாள் பங்கஜம்.

சாரதாவின் முகம் மலர்ந்தது. பங்கஜத்தின் சிகிச்சையில் கூடிய சீக்கிரமே அவள் நோயிலிருந்து விடுபட்டாள்.

"கண்ணபிரான் தரும ஆஸ்பத்திரி"யில் இப்பொழுது அவர்கள் இருவரும் சேர்ந்து தொண்டு புரிகின்றனர்.

மாலே பிடிக்காது. நீ வேண்டுமானால் ரகு, சாரதாவுடன் போய்விட்டு வா!" என்று சொல்லிவிட்டான். இதிலிருந்து பங்கஜத்திற்குப் படம் பார்க்கும் ஆவல் போயே போய்விட்டது.

பல மாதங்கள் கழிந்தன. ஒரு நாள் பிற்பகல் கணவனுக்குக் காப்பி எடுத்துக் கொண்டு சென்றாள் பங்கஜம். மாடியறையில் அவள் கண்ட காட்சி அவளைத் திடுக்கிட வைத்தது. கண்ணன் தரையில் அலங்கோலமாக விழுந்து கிடந்தான். அவன் தேகம் துடித்துக் கொண்டிருந்தது. வாயில் நுரை தள்ளி இருந்தது. அதைக் கண்டு பதை பதைத்த பங்கஜம், "அம்மா!" என்ற அலறலுடன் கீழே ஓடி வந்தாள். அப்பொழுது மாமியாருடன் பேசிக் கொண்டிருந்த சாரதா, "சரிதான்; இத்தனை நாள் இல்லாமலிருந்த மயக்கம் திரும்பவும் வந்து விட்டதாக்கும்! இதோ இருக்கும் இந்த மருந்தை எடுத்துக் கொண்டு போய் அவருடைய மூக்கில் காட்டு. வலிப்பு நின்றதும், சிறிது நேரம் பொறுத்துக் காப்பி கொடு!" என்றாள்.

மாமியாரிடமோ எந்தவிதமான பரபரப்பையும் காணவில்லை. பங்கஜம் மருந்து சீசாவுடன் மாடிக்கு ஓடினாள். "மறுபடியும் வந்து விட்டதா?" என்ற வார்த்தைகள் அவள் காதில் ஒலித்துக் கொண்டே இருந்தன.

சுமார் ஒரு மணி நேரத்துக்குப் பிறகு தான் கண்ணபிரானின் வலிப்பு நின்றது. அந்த ஒரு மணி நேரம் எத்தனை எத்தனையோ யுகங்களாகத் தோன்றிற்று பங்கஜத்திற்கு. காப்பி குடித்து முடித்ததும் கண்ணபிரான், "பங்கஜம், நீயும் காப்பி குடித்து விட்டு வா; நான் உன்னுடன் சாவகாசமாகப் பேசவேண்டும்" என்றான். பங்கஜம் அவ்வாறே செய்தாள்.

"பங்கஜம், நீ என்னை மன்னிப்பாயா? உன் வாழ்க்கையைப் பாழாக்கிய என்னை நீ மன்னித்தால்தான் என் மனக் கொந்தளிப்பு சிறிதாவது அடங்கும். நான் ஒருவருடனும் கலகலப்பாகப் பேசுவதில்லை என்பது உனக்குத் தெரியும். இதற்குக் காரணம் உண்டு. இதே காரணம்தான் உன்னுடன் படம் பார்க்க வராமலிருந்ததற்கும். நான் ஒரு காக்கை வலிக்காரன். மாதத்திற்கு ஒரு தடவையாவது இந்த வலிப்பு வந்துவிடும். ஆறுவது பாரம் வரை எப்படியோ சமாளித்துக்கொண்டு படித்து விட்டேன். என் தாய் தந்தையருக்கு என்னைப் பற்றிக் கவலைதான். ஆனாலும் பணம் வியாதியைக் குணப்படுத்திவிடும் என்ற நம்பிக்கை அவர்களுக்கு இருந்தது. கடைசியில் எத்தனையோ சிகிச்சை செய்தும் ஒரு பலனுமில்லை. இந்த வலி என் உயிரையே வாங்கி விட்டுத்தான் போகும் போலிருக்கிறது. நான் கல்யாணம் செய்து கொள்வதில்லை என்று உறுதியுடன்தானிருந்தேன். ஆனால் அம்மாவின் கண்ணீர் அந்த உறுதியைக் குலைத்து விட்டது. "நீ வேலை பார்த்துச் சம்பாதித்துக் குடும்பத்தைப் போஷிக்க வேண்டுமென்பதில்லை. பணம் தான் கொட்டிக் கிடக்கிறது. தம்பி ரகுவுக்கு எத்தனையோ ஜாதகங்கள் வருகின்றன. உனக்குக் கல்யாணம் செய்யாமல் அவனுக்கு எப்படிச் செய்வது? இதைவிடக் கொடுமையான வியாதி உள்ளவர்களெல்லாம் கல்யாணம் செய்து கொள்ளவில்லையா?" என்றெல்லாம் சொன்னாள். நான் அதற்கு இணங்கி விட்டேன். உன் வாழ்வையும் கெடுத்து விட்டேன். நீ என்னை மன்னிப்பாயா?" என்றான் கண்ணபிரான்.

பங்கஜம் வாயடைத்து நின்றாள். பிறவியிலேயே சாத்விகக் குணம் படைத்திருந்த பங்கஜம், கண்ணபிரான் மீது கோபம் கொள்வதற்குப் பதிலாக இரக்கமே கொண்டாள். அவளுடைய கனிவு கண்ணபிரானுக்கே வியப்பாக இருந்தது. "பங்கஜம், நீ ஒரு தெய்வம்!" என்று கூறி, அவளுடைய மலர்க் கரங்களைத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டான் அவன்.

## 3

தம்பதிகளுக்கிடையே இருந்த திரை நீங்கியது. இருவரும் எதிர்காலத்துக்காகப் பல திட்டங்கள் போட்டனர். வைத்தியத் தொழிலுக்குப் படிக்கப் பங்கஜத்திற்கு ஆசை தோன்றிற்று.

நாட்கள் கடந்தன. ரகுராமனின் மேல் படிப்பு முடிந்தது. ஆனால் அவனுடைய படிப்புக்கும், செல்வாக்குக்கும் தகுந்த வேலை விரைவில் கிடைக்கவில்லை. இதனால் சாரதா பங்கஜத்தின் மீது பொறாமை கொண்டாள். "விழுந்து விழுந்து படித்து என்ன பிரயோஜனம்? வேலைக்காக ஊர் ஊராக அலைய வேண்டியிருக்கிறது. அடுத்தாற் போல் மற்றவர்கள் இல்லையா? அவர்கள் நோயைச் சாக்கிட்டுக் கொண்டு இருந்த இடத்திலேயே எல்லாச் சௌகரியங்களையும் அடையவில்லையா?" என்றெல்லாம் அவள் நேருக்கு நேராகவே பொருமினாள். இது பங்கஜத்தின் மனதில் சுருக்கென்று தைத்தது. அத்துடன் நில்லாமல் அவள் டாக்டருக்குப் படிக்க வேண்டுமென்ற ஆசையை வைராக்கியமாக வேறு மாற்றிக்கொண்டு விட்டாள்.

குறைவு? வக்கீல் வீட்டில் பணம் துருப் பிடிக்கிறது. கல்யாணச் செலவுகூடத் தாமே ஏற்றுக் கொள்வதாகச் சொல்லுகிறார். என்ன, ஐயா! வலிய வரும் ஸ்ரீதேவியை விரட்டிவிடுவீர் போலிருக்கிறதே?" என்றெல்லாம் பேசி, இறுதியில் ஐயரின் சம்மதத்தைப் பெற்றுவிட்டார். விவாகம் ஆடம்பரம் சிறிதுமின்றி நடக்கவேண்டும் என்று பிள்ளை வீட்டார் விரும்பியபடியே நடந்தேறியது.

அடுத்த மாதம் தன் மைத்துனனுக்கும் தோழி சாரதாவுக்கும் கல்யாணம் என்று கேள்விப் பட்டதும் பங்கஜம் அடைந்த மகிழ்ச்சிக்கு ஓர் அளவேயில்லை. அந்த மகிழ்ச்சியில் அவள் பின்னால் வரப்போகும் ஏமாற்றத்தைப் பற்றிக் கனவில்கூட நினைக்கவில்லை.



## 2

சாரதாவின் கல்யாணம் வெகு விமரிசையாக நடந்தது. பங்கஜத்திற்கு இது ஒரு புதிராக இருந்தது. சாரதாவின் தந்தை பணக்காரராதலால் தம் ஒரே பெண்ணுக்கு அவர் சிறப்பாக மணம் செய்வித்தது இயற்கையே என்று அவள் தன்னைத் தானே சமாதானம் செய்துகொண்டாள். ஆனால் தன் கல்யாணத்தின்போது கூட்டம் கூட்டுவதென்பது தனக்கு அறவே பிடிக்காது என்று சொன்ன வக்கீல், இரண்டாம் பிள்ளையின் கல்யாணத்திற்கு மட்டும் அவ்வளவு பெரிய கூட்டம் கூட்டி விருந்து வைத்ததேன்? திடீரென்று வக்கீல் ஆடம்பரப் பிரியராக மாறிவிட்டாரா?

கல்யாணத்தின் போது பங்கஜத்தின் கணவன் ஆறாவது பாரத்துடன் படிப்பை நிறுத்திக் கொண்டு விட்டதாகச் சொன்னார்கள். காரணம், மூன்று தலைமுறைகள் உட்கார்ந்தபடி தின்றாலும் குறையாத பணமிருக்கையில் கஷ்டப்பட்டு எதற்காகப் படிக்க வேண்டும் என்பதேயாம். ஆனால் மைத்துனன் ரகுராமன் மட்டும் ஏன் மேலும் மேலும் விழுந்து விழுந்து படிக்க வேண்டும்?

எல்லாவற்றுக்கும் மேலாக அவளை வாட்டியது இன்னொரு பெரிய பிரச்னை! ஆம், இவர் ஏன் தன் தம்பி கல்யாணத்திற்கு வரவில்லை? பாவம், தம்பி பெரிய பரீக்ஷைகளில் எல்லாம் தேறும்போது, தான் மட்டும் போதிய படிப்பு இல்லாமல் சமூகத்தில் எப்படித் தலைகாட்டுவது என்று வெட்கினாரோ?

இவ்வாறு எண்ணுகையில் பங்கஜத்தின் உள்ளம் உருகும். தானும் அவருக்கு ஈடாகப் படியாதிருந்த போதிலும் அதைக் காட்டிக்கொள்ளக் கூடாதென்று உறுதி கொண்டாள். சமூகம் என்ன நினைத்தால் என்ன? அவள் தன் அன்பு அனைத்தையும் கணவன்மீது சொரிவதைத் தடுக்க முடியாதே, அதனால்?

கடைசி கடைசியாக, ஆறு மாதங்கள் கழித்துப் பங்கஜம் புக்ககம் சென்றபோது, அவளுடைய சந்தேகங்கள் எல்லாம் தெளிந்தன. அதன் விளைவாக அவள் மனம் நிம்மதி யடைந்ததா? அது தானில்லை; அவளுடைய கேள்விகளுக்குக் கிடைத்த பதில் ஒரு பயங்கரமான உண்மை!

* * *

புக்ககம் போன புதிதில் மாமியார் பங்கஜத்தைப் பரிவுடனேயே நடத்தினாள். "அந்த விரதத்தை எடுத்துக்கொள், இந்த நோன்பைச் செய்து வா!" என்ற ரீதியில் இருந்தது மாமியாரின் புத்திமதி. கணவன் கண்ணபிரான் தன் மேல் அன்பு செலுத்திய போதிலும், அவர் ஏதோ ஒன்றைத் தன்னிடமிருந்து மறைப்பதுபோலிருந்தது பங்கஜத்துக்கு. அதற்கேற்றாற்போல் அவன் யாருடனும் கலகலப்பாகப் பேசியே அவள் அறியாள். எப்பொழுதும் அவன் மாடி அறையே கதியென்று இருந்ததும் அவளுக்கு ஏனென்று விளங்கவில்லை.

சில நாட்கள் இப்படியே கழிந்தன. சாரதாவும் புக்ககம் வந்து சேர்ந்தாள். அவள் தன் கணவனான ரகுவுடன் சதா சல்லாபித்துக் கொண்டும், மாலை நேரங்களில் அவனுடன் உலாவச் சென்றுகொண்டும், சில சமயங்களில் ஏதாவது ஒரு சினிமாவுக்குப் போய்க்கொண்டும் இருந்தாள்.

பங்கஜத்திற்கும் படம் பார்க்க வேண்டுமென்ற ஆசைதான். ஆனால் அவள் கணவன், "பங்கஜம், எனக்குச் சினி

# மன்னிப்பு

அருணா

அன்று மாலை லேடி டாக்டர் பங்கஜம் களைப்புடன் வீட்டிற்குள் நுழைவதற்கும் டெலிபோன் மணி அடிப்பதற்கும் சரியாக இருந்தது. சலிப்புடன் 'ரிஸீவ'ரைக் கையில் எடுத்துக் கொண்டாள் பங்கஜம். எதிர்பார்த்தபடியே ஓர் அபாயகரமான 'கேஸ்'க்காகத் தாமதமின்றி வரவேண்டுமென்று ஒரு குரல் கெஞ்சிக் கேட்டது. அதைத் தட்டமுடியாமல் சிறிது நேரத்தில் வருவதாகச் சொல்லிவிட்டுச் சாய்வு நாற்காலியில் சாய்ந்தாள். வாசலில் ஒரு கார் வந்து நின்றது. அதிலிருந்து எழெட்டு வயதுள்ள ஒரு சிறுவன் இறங்கி உள்ளே வந்தான்.

"அப்பா டெலிபோன் பண்ணி நீங்கள் அரைமணி நேரத்தில் வருவீர்களென்று சொன்னார். ஊரிலே வேறு ஒரு டாக்டரும் கிடைக்கவில்லை; நீங்களாவது அவசியம் வரவேண்டும். அம்மா ரொம்ப அழுகிறாள், டாக்டர்! நிச்சயம் வருகிறீர்களா?" என்று அவன் தழுதழுத்த குரலில் கேட்டான்.

சிறுவன் பேசி முடிக்கும் முன்பே, பங்கஜத்தின் மனம் ஏனோ பரபரப்புற்றது. அவனுடைய துயரம் படர்ந்திருந்த முகம், அக்கறை ததும்பிய பேச்சு—இவற்றுக்கும் மேலாக அவனிடமிருந்த ஏதோ ஒன்று தன்னைக் கவர்ந்ததை அவள் உணர்ந்தாள்.

ஆம், அவனுடைய முகச்சாயல் அவள் கணவனை நினைவூட்டியது. தனக்கு ஒரு குழந்தை இருந்திருந்தால் இச்சிறுவன் போல்தான் அவனும் இருந்திருப்பான். ஒருவேளை அந்தச் சிறுவன் தன் மைத்துனனுடைய பிள்ளையாக இருந்து, தான் பார்க்கவேண்டிய 'கேஸ்' சாரதாவாக இருந்தால்...?

பங்ஜம் ஒரு கணம் பின் வாங்கினாள். ஆனால் கடமையே கடைசியில் வென்றது. மறுகணம் எதற்கும் முன் ஜாக்கிரதையாகத் தன்னை யாரும் எளிதில் கண்டுகொள்ள முடியாதவாறு, அவள் கறுப்புக் கண்ணாடி ஒன்றை அணிந்து கொண்டு சிறுவனோடு புறப்பட்டாள்.

• • •

பங்கஜம் ஒரு பள்ளிக்கூட ஆசிரியரின் மூன்றாவது பெண். முதல் இரண்டு பெண்களுக்குக் கஷ்டப்பட்டுப் பணம் தேடி மணம் செய்வித்தும், அதில் சந்தோஷம் ஒன்றையும் காணவில்லை பலராமய்யர். எப்பொழுது பார்த்தாலும் சீர் போதாது, செய்தது போதாது என்ற பல்லவியையே மாப்பிள்ளை வீட்டார் திருப்பித் திருப்பிப் பாடிக் கொண்டிருந்தார்கள். இதைக் கேட்டுக் கேட்டு அலுத்துப்போன பலராமய்யர் பங்கஜத்தின் விவாகத்திற்காக மாப்பிள்ளையைத் தேடி அலைவதில்லை என்று தீர்மானித்து விட்டார். ஏற்கனவே சூடிகையாகப் படித்த பெண் பங்கஜம். அவளுக்கு இலவசப் படிப்பு வசதியும் கிடைத்தது. ஆறாவது பாரத்தில் அவள் மிகவும் நன்றாகத் தேறியதில் ஐயருக்கு மட்டிலா மகிழ்ச்சி. ஆனால் அதே சமயம் ஐயரின் உறுதி சிறிது தளர ஆரம்பித்தது. அதற்குக் காரணம் உள்ளூரில் இருந்த கல்லூரி எடுபட்டுப் போய் விட்டதுதான். தாயில்லாப் பெண்ணைப் படிப்பதற்காக வெளியூருக்கு அனுப்புவதென்றால் அவருக்குக் கொஞ்சம் யோசனையாயிராதா?

இந்தச் சமயத்தில் பங்கஜத்தின் பள்ளித் தோழியான சாரதாவின் தகப்பனார், பலராமய்யருக்கு ஒரு செய்தி கொண்டு வந்தார். அந்தச் செய்தி ஒரு பிரபல வக்கீல் தம் பிள்ளைக்குப் பங்கஜத்தைக் கல்யாணம் செய்துகொள்ள விரும்புகிறார் என்பதுதான். பிள்ளை வீட்டார்—அதுவும் பணம் படைத்த ஒருவர்—தாமே கல்யாணப் பேச்சை ஆரம்பிப்பதைக் கண்டு ஐயர் சிறிது சந்தேகப்பட்டார். ஆனால் சாரதாவின் தந்தை அவரை விடவில்லை. "வக்கீல் பணக்காரராக இருந்தாலும் எளிய வாழ்க்கையையே விரும்புபவர். உங்களுக்கு மாத்திரம் என்ன? இப்பொழுது கை சளைத்திருக்கிறதே தவிர குலம், கோத்திரத்தில் என்ன





பக் கூடாது என்ற மேலான நோக்கத்துடன். ஆனால் பிரேமாவிடம் மஞ்சள், குங்குமத்துடன் புடவையை வைத்துக் கொடுத்தபோது விசாலத்துக்கு ஏற்பட்ட ஏமாற்றம்! சொல்லிலடங்காது அது.

“விசாலம்! இதெல்லாம் எதற்கு? உன் கணவரை எதற்காக வீணாகச் சிரமப்படுத்தி யிருக்கிறாய்? இந்த நூல் புடவையை நான் என்ன செய்ய? நூல் புடவை உடுத்திக் கொள்ளுவது அவருக்குப் பிடிக்கவே பிடிக்காது. சென்ற வருஷம் தீபாவளியின்போது இதே வர்ணத்தில் இதே மாதிரிப் புடவைதான் ஒன்று எங்கள் வீட்டு வேலைக்காரிக்கு வாங்கிக் கொடுத்தேன். இதை எடுத்துக் கொண்டு போனால் ‘அவர்’ என்ன நினைப்பார்? நீயே இதை வைத்துக் கொண்டு விடேன்! என்னிடம் நிறையப் புடவைகள் இருக்கின்றன” என்று சொல்லி அதை நிராகரித்து விட்டாள்.

தங்கையிடம் புடவையில்லை என்பதற்காகவா அவள் அதைப் பரிசளித்தாள்? ஒரு தாயின் தூய்மையான அன்பையும் ஆதரவையுமே யல்லவா அந்தப் புடவையின் மூலம் அளித்தாள், அவள்? தன் முகத்திலடித்தாற் போல அதை மறுத்து விட்டாளே தன் சகோதரி? ப்ரேமாவின் இழிவான நடத்தை விசாலத்தின் நெஞ்சை ரம்பம் போட்டு அறுத்தது. பிரேமாவின் இந்தக் கேவலமான செய்கையை அவளால் மறக்கவே முடியவில்லை.

“அக்கா!” என்ற குரல் கேட்டுத் திரும்பிய விசாலம் ஒரு கணம் பிரமித்து விட்டாள். தன் கண்களையே நம்ப முடியவில்லை அவளால். என்ன? பிரேமாவா இப்படி உருமாறி யிருக்கிறாள்? அவள் உடலை அலங்கரித்த விலை மதிப்புள்ள நகைகள் எங்கே? பட்டுப் புடவையைக் கூடக் காணோமே?

“என்ன அக்கா, யோசனை பலமாயிருக்கே? பிரேமா வந்துவிட்டாளே, எப்படி அவளை வைத்துக் கொண்டு சமாளிப்பது என்று யோசிக்கிறாயா?” என்று மீண்டும் அவள் கேட்டபோதுதான் சுயநிலைமையை அடைந்தாள் விசாலம்.

“வா, அம்மா, பிரேமா! நீ வந்ததையே நான் கவனிக்கவில்லை. இவ்வளவு நேரமாகியும் நீ வந்து சேரவில்லையே என்றுதான் கவலைப்பட்டுக் கொண்டிருக்கேன். இப்போதெல்லாந்தான் நீண்ட தூரம் ரயில் பிரயாணம் செய்வதென்றால் மடியில் நெருப்பைக் கட்டிக் கொண்டிருப்பதைப் போலிருக்கிறதே? அதிருக்கட்டும்; ஏன் இப்படி இளைத்துப் போய் விட்டாய்? உன் உடம்புக்கு என்ன? நகைகள் ஒன்றையும் காணோமே? விவரமாகச் சொல்லு எனக்கு!” என்று சரமாரியாகக் கேள்விகளை அடுக்கினாள் விசாலம். தங்கையின் மீது அதுவரையிருந்த கோபம், இப்போது அவளை நேரில் கண்டதும் எங்கோ மறைந்து விட்டது. காரணம், பிரேமாவின் எளிய தோற்றமும் மனமாற்றமும்தானோ?

“அக்கா! என் விதியே என்னை அழித்துவிட்டது. ஆபீஸிலிருந்து திரும்பும்போது அவருடைய மோட்டார் சைக்கிள் ஒரு காரோடு மோதிக் கொண்டு விட்டது. அதனால் அவருக்குப் பலத்த காயம். ‘ஒரு காலையே வெட்டி எடுத்து விட வேண்டும்’ என்றார் டாக்டர். நல்ல காலமாக அவ்விதம் நேரவில்லை. என் நகை நட்டுக்கள் எல்லாவற்றையும் விற்று, அந்தப் பணத்தைத்தான் வைத்தியச் செலவுக்குக் கொடுத்தேன். அவருக்கு இடது கால் சுவாதீனமற்றுப்போய் விட்டது. வேலையும் போய்விட்டது.”

மேலே பேச முடியாமல் அவள் தொண்டை அடைத்துக் கொண்டது.

“நீ ஏன் எனக்கு ஒன்றுமே எழுதவில்லை? அசடே! நல்லகாலமாக இந்த மட்டோடு போயிற்றே? அழாதே!” என்று தங்கையை அணைத்துக் கொண்டாள் விசாலம்.

“அக்கா! நீதான் வாழத் தெரிந்தவள். அகம்பாவமற்ற ஓர் சீரான வாழ்க்கைதான் நிலையானது என்பது எனக்குப் புரிந்து விட்டது” என்று சொல்லும்போது, பிரேமாவின் உள்ளத்தில் ஒரு அதிசய மாறுதல் தோன்றியது

பாவம் குடிகொண்டு விட்டது அந்தத் தம்பதிகளிடம்.

புதுப் பணம் படைத்தவுடன் அந்தப் பெருமையைத் தன் அக்காவுக்குக் காண்பித்துவிட்டுச் செல்லவேண்டு மென்று தோன்றியதோ என்னவோ, ஒரு முறை தன் கணவனோடு சென்னைக்குக் கிளம்பி வந்தாள் பிரேமா.

ரயிலை விட்டு இறங்கியதுமே தன் அந்தஸ்தை வெளியிட ஆரம்பித்தாள் மறைமுகமாக. சென்ட்ரலிலிருந்து மூன்று பர்லாங்கு தூரமுள்ள தன் அக்காள் வீட்டுக்குச் செல்ல 'டாக்ஸி' அமர்த்த வேண்டுமென்று வற்புறுத்தினள். தன் தங்கை வந்து சேர்ந்த ஒன்றிரண்டு தினங்களுக்குள்ளாகவே அவள் அடியோடு மாறிவிட்டாள் என்பது விசாலத்துக்குப் புரிந்துவிட்டது. ஒரு நாளைக்கு மூன்று தடவைகள் பிரேமா உடை மாற்றிக் கொள்வதும், மணிக்கு ஒரு தரம் பவுடர் போட்டுக்கொள்வதும், அவளது உதட்டுச் சாயமும், நகத்துக்குப் பாலிஷும் விசாலத்துக்கு அருவருப்பை யூட்டின. ஆயினும் இவையனைத்தையும் பொருட்படுத்தவில்லை விசாலம். தங்கையாயிற்றே! மேலும், தாயில்லாப் பெண்ணல்லவா?

"ஏண்டி, விசாலம்! ஒரு ரேடியோ வாங்கி வைத்துக் கொள்ளக் கூடாதோ? போன மாதம்தான் பத்து வால்வ் ஸெட் ஒன்று எழுநூறு ரூபாய் கொடுத்து நாங்கள் வாங்கியிருக்கிறோம். ரேடியோ இல்லாமல் எப்படித்தான் உனக்குப் பொழுது போகிறதோ?" என்று ஆரம்பித்தாள், பிரேமா.

"குழந்தைகளைக் கவனித்துக் கொள்ளவும் வீட்டு வேலைகளுக்கும்தான் பொழுதே போதவில்லையே! ரேடியோ கேட்கப் பிறகு தினமும் எனக்கு அவகாசம் ஏது, அம்மா? மேலும் ரேடியோ வாங்குகிற பணத்துக்கு ஒரு மாட்டை வாங்கிக் கட்டினுல் குழந்தைகளுக்கு நல்ல பாலும், தயிருமாவது கிடைக்கும்" என்று அடக்கமாகக் கூறினள் விசாலம்.

"ஆமாம்; அதுவும் சரிதான்! நூறு, நூற்றிருபது ரூபாய் சம்பளத்தில் அதற்கெல்லாம் எப்படிக் கட்டுபடியாகும்?" என்று தங்கை குத்தலாகக் கேட்டது, விசாலத்துக்கு நாராசம்போல் ஒலித்தது. 'தன் தங்கையா இப்படிப் பேசுகிறுள்? புகுந்த வீட்டு வரிசையை உடன் பிறந்தவளிடமே காட்டுகிறுளே? நேற்று அடித்த ஒரு யோகம் இவளை இத்தனை தூரம் கர்வியாகச் செய்து விட்டதே!' என்று தாங்க முடியாத வருத்தமும் ஆச்சரியமும் அடைந்தாள், அவள்.

ஒரே செடியில் அரும்பி மலர்ந்த இரு புஷ்பங்களுக் கிடையேதான் எவ்வளவு தாரதம்மியம்! ஒன்று தெய்வ வழிபாட்டுக்குப் பாத்திரமாகிப் பல்லாயிரக்கணக்கான மக்களின் மனத்தைக் களிக்கச் செய்கிறது. இன்னென்று செடியிலேயே வாடி, வதங்கிச் சருகாகி உதிர்ந்து விடுகிறது. அதற்கு மதிப்பேது?

மறுநாள் ஸினிமா பார்க்கச் சென்ற போது நிகழ்ந்த ஒரு சம்பவம் விசாலத்துக்கு மேலும் மனக் கசப்பை யளித்தது. தியேட்டரில் இடம் நிறைய இருந்தபடியால் ஒன்றேகால் ரூபாய் டிக்கெட்டுகள் மூன்று வாங்கி விட்டான், சாம்பசிவம். அது பிரேமாவுக்குப் பிடிக்கவில்லை.

"ஒன்றேகால் ரூபாய் ஸீட்டிலா போய் உட்காருவது? இது 'அவர்' காதுக்கு எட்டினுல் எவ்வளவு கேவலமாயிருக்கும் தெரியுமோ? இரண்டரை ரூபாய் ஸீட்டுக்கே போகலாம்" என்று சொல்லியவாறு தன் கையிலிருந்த அழகுப் பையைத் திறந்து ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்து நீட்டினுள், பிரேமா.

ஆயிரம் தேள்கள் ஒரே சமயத்தில் கொட்டி விட்டதைப் போன்ற உணர்ச்சி தோன்றியது, விசாலத்துக்கு. தன்னையும் தன் கணவனையும் வேண்டுமென்று அவமானப் படுத்தவே அவள் அவ்விதம் செய்தாள் என்று அறிந்து அவள் உள்ளம் புழுங்கினள். பாவம், சாம்பசிவமும் வெட்கத்தால் குன்றிப் போனுன்.

எல்லாவற்றிற்கும் சிகரம் வைப்பது போலிருந்தது. அவள் திரும்பிச் செல்லும் தினத்தன்று நடந்து கொண்டது. எவ்வளவோ சிரமத்துக் கிடையில் எப்படியோ பணம் சேகரித்து முப்பத்தைந்து ரூபாயில் ஒரு அழகிய புடவையை வாங்கி வந்திருந்தான், சாம்பசிவம். மைத்துனியை வெறுங்கையோடு திருப்பியனுப்



# வாழத் தெரிந்தவள்

ரா. பாலகிருஷ்ணன்

"விசாலம்! காப்பி போட்டு விட்டாயா?" என்று கேட்டவாறே உள்ளே நுழைந்த சாம்பசிவம் அவசர அவசரமாகக் கோட்டைக் கழற்றினான்.

"ஏன், என்ன விசேஷம் இன்று? வரும்போதே இத்தனை அவசரம்?" என்று சமயலறையிலிருந்த வண்ணம் கேட்டாள், அவன் மனைவி.

"இன்று பம்பாய் எக்ஸ்பிரஸில் பிரேமா வருவதாக எழுதியிருக்கிறாளே, அதற்குள் மறந்து விட்டாயா?" என்று கேட்ட சாம்பசிவத்தின் முகத்தில் வழக்கம் போல் புன்னகை தவழ்ந்தது.

"உம், வரட்டுமே! பம்பாயிலிருந்து பட்டணம் வருகிறவளுக்கு ஸ்டேஷனிலிருந்து வீட்டுக்கு வர வழி தெரியாதா, என்ன? நீங்கள் அழைக்கப் போக வேண்டுமாக்கும்! தானே வந்து சேரட்டும்!" என்று அசுவாரஸ்யமாகப் பதிலிறுத்தாள், விசாலம்.

"நன்றாயிருக்கிறதே, உன் பேச்சு! நீயும் என்னோடு ஸ்டேஷனுக்கு வருவாய் என்றல்லவா எதிர்பார்த்தேன்!"

"ஏன், பம்பாய்க்கே சென்று அழைத்து வந்திருப்பேன் என்றுகூட நீங்கள் எதிர்பார்ப்பீர்கள்! உம், செய்ததெல்லாம் போதாதாக்கும்? ஒரு நாயை வளர்த்திருந்தால் அதுகூட எவ்வளவோ விசுவாசத்துடன் இருந்திருக்கும்."

அவளுடைய பதிலைச் சாம்பசிவம் ரசிக்கவில்லை. "சீ, அசடே! இன்னுமா அந்தச் சம்பவங்களை மறக்காமலிருக்கிறாய்? பெண்களின் மனம் நீர் மேல் எழும் அலைகளை யொத்தது என்றல்லவா எண்ணிக் கொண்டிருந்தேன் இதுவரை? எவ்வளவு வைராக்கியம்! எத்தனை கடின சித்தம் உனக்கு!" என்று வியந்து கூறினவன், காப்பியை ஒரே மூச்சில் குடித்துவிட்டு ஸ்டேஷனை நோக்கிப் புறப்பட்டான்.

அவன் சென்றதைக் கவனிக்காமலில்லை விசாலம். அடியோடு மறந்து போகாமல் தன் இதய அந்தரங்கத்தின் ஒரு மூலையிலே அமுங்கிக் கிடந்த நினைவுகள் அவனால் ஞாபக மூட்டப்பட்டதும், நெய் வார்க்கப்பட்ட ஹோமத் தீ போல் அவை பீறிக் கொண்டு கிளம்பின.

'பிரேமா எதற்காக வரவேண்டும் இப்போது? அவள் வருவதை விட வராமலிருப்பதே மேல் அல்லவா?' என்று கூட நினைக்கத் தோன்றியது அவளுக்கு. ஆம்; களங்கமற்ற அந்த நெஞ்சிலே, பிரேமா கடைசியாகச் சில வருஷங்களுக்கு முன்பு ஒரு தடவை வந்திருந்த போது ஒரு மாறாத கசப்பை உண்டு பண்ணி விட்டுச் சென்றாள். அந்த நினைவுகளின் சுழற்சியிலே வயிந்த விசாலத்தின் மனம் மிகுந்த வேதனைக்குள்ளாகியது.

* * *

பிரேமாவும் விசாலமும் உடன் பிறந்த சகோதரிகள். விசாலம்தான் மூத்தவள். பிரேமாவின் கல்யாணம் நடந்த மறு வருடமே பெற்றோர்களிருவரும் காலமாகிவிடவே, விசாலம்தான் அவளுக்கு ஆதரவாயிருந்தாள். முதல் பிரசவத்தின்போது பிரேமாவைப் பம்பாய்க்குச் சென்று அழைத்து வந்து தன்னிடம் வைத்துக் கொண்டாள். பிரேமாவின் பிரசவம் முடிந்து அவள் திரும்பிச் செல்லும் வரையில் அவளுக்கு யாதொரு குறையும் இல்லாமல் உதவி செய்தாள். தன் கஷ்ட நிஷ்டூரங்களைக் கூடப் பொருட்படுத்தாமல் தங்கைக்கு அவள் செய்த பண உதவியும், சரீர ஒத்தாசையும் கொஞ்ச நஞ்சமல்ல. "விசாலம்! நீ என் அக்காவல்ல; பெற்ற தாய்க்கும் மேலானவள்" என்று உள்ளம் மகிழ்ந்து பிரேமாவே கூறியிருக்கிறாள்.

விசாலம் செய்தது மட்டும் என்ன? அவள் கணவன் சாம்பசிவம்கூட எவ்வளவு அன்புடன் அவளுக்கு உதவினான்? 'இவ்வளவு செலவு செய்கிறாயே!' என்று ஒரு வார்த்தை கேட்டவனல்ல அவன்.

ஆனால், அதெல்லாம் பழங்கதை யாகிவிட்டதே? பிரேமாவின் கணவனுக்கு அடித்த ஒரு குருட்டு அதிர்ஷ்டம் அவனது செல்வ நிலையை வெகுவாக உயர்த்தி விட்டது. பெரிய உத்தியோகம், மோட்டார் சைக்கிள், பங்களா வாசம் முதலிய சௌகர்யங்கள் ஏற்பட்டவுடன், ஆடம்பரத்தின் பிரகிருதி குணமான அகம்

## சொல்லித் தராதே!




காத்திருந்தாள். ஆனால் அவளுடைய ஆசையெல்லாம் நிராசையாயிற்று. பிறகு மனதைச் சிறிது திடப்படுத்திக் கொண்டு அவருக்கு இரண்டொரு கடிதங்களும் எழுதினாள். ஆனால் அதற்கு வந்த பதிலை அவளால் படிக்கக்கூட முடியவில்லை.

இன்னும் எவ்வளவோ அவரைப்பற்றிச் சொல்லலாம். அந்தப் பட்டாபிதான் நீ மணக்கப் போகும் மனிதர். மனச் சாட்சி, மானம், சுயமரியாதை எல்லாம் அற்ற மனிதருடன் நீ சந்தோஷமாக வாழ முடியும் என்று என்னால் நம்ப முடியவில்லை.

என் அருமைச் சந்திரா, நீ சௌக்கியமாக இருக்க வேண்டும் என்பதே என் ஆசை. இந்தக் கல்யாணத்தை ரத்து செய்து விட்டு வேறு கௌரவமான ஒருவரை மணந்து கொள். வெளிப் பகட்டைக் காட்டிலும் உள்ளன்புதான் முக்கியம். உண்மையில் உன்மேலிருக்கும் அன்பால்தான் நான் இந்தக் கடிதம் எழுதுகிறேன்.

உன் பிரியமுள்ள தோழி,

ருக்மணி.

கடிதத்தை மடித்துக் கவரில் போட்டு விலாசம் எழுதி அவளே அதை எடுத்துக் கொண்டு தபால் பெட்டியில் போடுவதற்காகப் புறப்பட்டாள். பல தடவை அவள் மனச் சாட்சி அவளை பின்னுக் கிழுத்தது. அவள் தான் செய்யும் காரியம் சரியல்லவோ என்றுகூட நினைத்தாள். எப்படியோ கை கால்கள் நடுங்கக் கடிதத்தைப் பெட்டியில் போட்டு விட்டு வீடு திரும்பினாள். பிறகு தான் அவள் மனம் நிம்மதி அடைந்தது.

இரண்டு தினங்கள் சென்றன. ருக்மணியின் வீட்டு வாசலில் ஒரு மோட்டார் கார் வந்து நின்றது. அதிலிருந்து சந்திரா இறங்கி உள்ளே வந்தாள். அவள் முகம் ஒரு பரபரப்பையும் வருத்தத்தையும் காட்டியது. கூடத்தில் உட்கார்ந்திருந்த ருக்மணி சந்திராவைக் கண்டதும் ஓடி வந்து அவளைக் கட்டிக் கொண்டாள்.

"ருக்கு! இதென்ன இது? விளையாட்டா, விஷமமா?"

"இல்லை சந்திரா! விளையாட்டுமல்ல, விஷமமுமல்ல!"

"இந்த மாதிரி ஏதாவது நடக்கும் என்று முன்னமேயே அவர் என்னிடம் சொல்லியிருந்தார். அவருடைய புகழையும் அதிர்ஷ்டத்தையும் கண்டு பலர் பொறாமைப் பட்டு அவர்மேல் அபாண்டமான பொய்களையும் கட்டுக் கதைகளையும் சொல்லிக் கொண்டு திரிவதாகவும் அவற்றில் ஒன்றையும் நான் நம்பக் கூடாதென்றும் சொன்னார். நீ எழுதியிருப்பதெல்லாம் உண்மைதானா, ருக்கு?" என்று மிகவும் பதட்டத்துடன் கேட்டாள் சந்திரா.

"உனக்கு ஏன் சந்தேகம் தோன்றுகிறது?" என்று கேட்டாள் ருக்மணி.

"இதுவரை அவருடன் பழகிப் பார்த்ததில் அவரிடம் எவ்விதக் குறையும் இருப்பதாகத் தோன்றவில்லை. ஆனாலும் நீ உன்னுடைய கடிதத்தில் விவரித்திருக்கும் அதே காதல் மொழிகளை அப்படியே என்னிடமும் சொன்னார். அதிலிருந்து என் மனம் ஒரு நிலையில் இல்லாமல் தவிக்கிறது. இதைப்பற்றி நான் அவரிடம் இன்னும் ஒன்றுமே சொல்லவில்லை. முதலில் உன்னிடம் நேரே கேட்பதென்றும் பிறகு அவரிடம் பேசிக் கொள்வது என்றும் எண்ணி வந்து விட்டேன். உனக்கு இவ்வளவு நிச்சயமாக எப்படித் தெரியும்? அவர் மனைவி உனக்குத் தெரிந்தவளா? நானே அவளைப் பார்த்துப் பேச முடியுமா?" என்று ஆத்திரத்துடனும் பரபரப்புடனும் சந்திரா கேட்டாள்.

ருக்மணியின் கண்களில் கண்ணீர் வழிந்தோடியது. சந்திராவின் கழுத்தைக் கட்டிக் கொண்டு விம்மி விம்மி அழலானாள். சந்திராவுக்கு ஒன்றுமே தோன்றவில்லை.

"ருக்கு! நீ எதற்காக அழவேண்டும்?" என்று கேட்டாள் அன்புடன்.

"சந்திரா! கணவனையும் குழந்தையையும் ஒரே யடியாகப் பறிகொடுத்த நான் வேறு என்னதான் செய்ய முடியும்?" என்று கேட்டாள் ருக்மணி.

னை நம்பிப் பெருமை அடைந்திருந்தேன்!" என்றான்.

அந்தப் பெண் அதைக் கேட்டதும் பட்டாபியை அப்படியே விழுங்கி விடுபவள்போல் ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தாள். அடுத்த கணம் பித்தம் தலைக்கேறியவள் போல அவ்விடத்தை விட்டு ஓட்டம் பிடித்தாள். அதனால் ஆத்திரமும் அவமானமும் அடைந்த பட்டாபி தன் மனைவியை அடிப்பதற்காகக் கையை ஓங்கினார்.

"இரும்! இதெல்லாம் போதாதென்று மனைவியை அடிக்கவும் துணிந்து விட்டீரா? இன்னும் இரண்டொரு மாதங்களில் தாயாகப்போகும் என்னை அடிப்பதற்கு உமக்கு என்ன தைரியம்?" என்று கேட்டாள் அவருடைய மனைவி.

"ஆம்! உன் அழகை நீயே பார்த்துக் கொள். இந்த லக்ஷணத்திற்கு உன்னைக் காதலிக்கவில்லை என்ற பழி வேறு?" என்று கூறி அவளுடைய தோளில் கையை வைத்து மூர்க்கத்தனமாக ஒரு தள்ளுத் தள்ளினார். தள்ளிய வேகத்தில் அவளுடைய தலை, அருகேயிருந்த கட்டிலில் மோதி விட்டது. அவள் அப்படியே ஸ்மரணையற்றுக் கீழே விழுந்துவிட்டாள்.

பிறகு அவளுக்கு நினைவு வந்தபோது எங்கும் ஒரே நிசப்தமாகவும் இருட்டாகவுமிருந்தது. நடந்த விஷயங்களெல்லாம் ஒவ்வொன்றாக நினைவுக்கு வந்தன. எப்படியோ தட்டுத் தடுமாறிய வண்ணம் ஜன்னலருகே சென்று பக்கத்து வீட்டுக் கிழவியைக் கூப்பிட்டாள். கிழவி அப் பெண்ணின் நிலைமையைக் கண்டு பயந்து போய் ஓடோடி வந்தாள். அவளைக் கட்டிலில் படுக்க வைத்து விட்டு உடனே டாக்டருக்குச் சொல்லி அனுப்பினாள். அன்றிரவே அவளுக்குக் குழந்தையும் பிறந்து விட்டது. ஆனால் அவளுக்கு நேர்ந்த அதிர்ச்சியினால் குழந்தை வயிற்றிலேயே இறந்து விட்டது.

பட்டாபி அன்று போனவர் அப்புறம் திரும்பி வரவேயில்லை. கடைசியில் வேறு வழியின்றி அந்தப் பெண் தன் தந்தையிடம் வந்து சேர்ந்தாள்.

இரண்டொரு வருடங்களில் பட்டாபியின் புகழ் எங்கும் பரவியது. பத்திரிகையில் அவருடைய வித விதமான புகைப் படங்களும் வெளியாயின. அதை எல்லாம் பார்த்த அவருடைய மனைவி என்றாவது ஒரு நாள் மனம் மாறி அவர் தன்னிடம் திரும்பி வருவார் என்று



சாமனும் அந்தக் குடும்பத்தில் நம்பிக்கைக்குப் பாத்திரமானவராக ஆகிவிட்டபடியால் அவருடன் போய்ப் படத்தைப் பார்த்துவரத் தன் பெண்ணுக்கு அநுமதி அளித்தார்.

படம் படுமோசமாகவும் கேலிக் கூத்தாகவுமிருந்தது. அதை அவளால் ரசிக்கவே முடியவில்லை என்பதை உணர்ந்த பட்டாபி அவளைக் கடற்கரைக்கு அழைத்துப் போவதாகச் சொன்னார்.

கடற்கரை அந்த மாலை வேளையில் வெகு அழகாகத்தானிருந்தது. அந்த நிம்மதியான இடத்தில் பட்டாபியுடன் தனியாக இருந்து பேசிக்கொண்டிருந்தது அப்பெண்ணுக்கும் ஒரு தனியான உணர்ச்சியைக் கொடுத்தது. அவளுக்கு வெகு சமீபமாக உட்கார்ந்திருந்த பட்டாபி அவள் முக மாறுதலைக் கண்டு "ஆஹா! என்ன அழகான முகம்! இதுவரை இப்படிப்பட்ட இன்ப உணர்ச்சியை நான் அனுபவித்ததே கிடையாது. உன்னுடைய அழகும் குணமும் என்னை அப்படிக் கவர்ந்து விட்டது. இதுவரை எவ்வளவோ பேர்கள் என்னை மணக்க விரும்பினார்கள். ஆனால் அவர்களை எல்லாம் என் மனம் நாடவில்லை. முதன் முதலாக உன்னைப் பார்த்ததிலிருந்து என் உள்ளம் உன்னையே அடையவேண்டும் என்று துடிக்கிறது! என்னைக் கல்யாணம் செய்து கொள்வாயா?" என்று கேட்டார்.

அவளுக்கு என்ன சொல்வதென்றே புரியவில்லை. அதுவரை யாரும் அவளிடம் அந்தமாதிரிப் பேசியது கிடையாது. ஒவ்வொரு பெண்ணும் தங்கள் காதலரிடம் என்னென்னவோ சொல்ல விரும்புவார்கள். ஆனால் சமயம் வரும்போது அவர்கள் வாயடைத்து விடும். பட்டாபியின் பேச்சைக் கேட்ட அவள் முகமும் நாணத்தால் சிவந்தது. ஏதோ ஒரு சொப்பன உலகத்தில் இருப்பதாக எண்ணினாள். வாயால் ஒன்றும் சொல்லாவிட்டாலும் அவளுக்குச் சம்மதந்தான் என்பதை ஒரு நொடியில் பட்டாபி தெரிந்து கொண்டு விட்டார்.

"என் உயிர் இன்று உன்னால் காப்பாற்றப் பட்டது. நீ மறுத்திருந்தால் இதோ இப்படியே போய் இந்தச் சமுத்திரத்தில் விழுந்து உயிரை மாய்த்துக் கொண்டிருப்பேன். நீ இல்லாத வாழ்வை நான் விரும்பவில்லை!" என்று சொன்னார்.

சில நாட்கள் சென்ற பிறகு பட்டாபி அவள் தந்தையிடம் மெதுவாக விஷயத்தை எடுத்தார். தனக்குச் சினிமாவில் கூடிய சீக்கிரம் முக்கியமான பாகங்கள் கொடுக்கப்படும் என்றும் அதன் மூலம் தனக்குப் பணமும் பதவியும் வரப்போகிறதென்றும், அவர் மகளை ரொம்ப சௌகரியமாகவும் சந்தோஷமாகவும் வைத்துக் கொள்வதாகவும் உறுதி கூறினார். பெண்ணுக்குப் பட்டாபியின் மேல் அதிகப் பற்றுதல் இருப்பதைக் கண்ட தந்தையும் கல்யாணத்துக்கு இணங்கி விட்டார்.

பார்ப்பவர்களெல்லாம் பொறாமைப் படும்படியாக உல்லாச வாழ்க்கை நடத்தினார்கள் பட்டாபியும் அவர் மனைவியும். பட்டாபிக்கு மேலும் மேலும் ஒப்பந்தங்கள் வந்து குவிந்த வண்ணம் இருந்தன. ஒவ்வொரு நாளும் ஸ்டுடியோவில் நடந்த விஷயங்களையும், 'எக்ஸ்டிரா' வேஷம் எடுத்துக் கொள்ளும் பெண்கள் தம்மைச் சுற்றிச் சுற்றி வருவதையும் பட்டாபி பெருமையுடன் தம் மனைவியிடம் கூறுவார். அவளும் மற்றப் பெண்களுக்குக் கிட்டாத அதிர்ஷ்டம் தனக்குக் கிட்டியதாக எண்ணிப் பெருமிதம் அடைவாள்.

இப்படியாகச் சில மாதங்கள் கழிந்தன. ஒரு நாள் பக்கத்துத் தெருவுக்குப் போய் விட்டு வீடு திரும்பிய மனைவி, உள்ளே யாரோ பேசும் அரவம் கேட்டு ஓசைப் படாமல் கூடத்துக்கு வந்தாள். உள்ளறையில் அவள் கணவனும் இன்னொரு பெண்ணுமாகச் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள். அதை அறிந்த அவள் அவர்களுக்குத் தெரியாமல் மறைந்து நின்று அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்று ஒளிந்து கேட்டாள்.

கடற்கரையில் முன்னொருநாள் அவளிடம் உரைத்த அதே காதல் மொழிகளை அப்படியே அப்பெண்ணிடமும் பட்டாபி ஒப்பித்துக் கொண்டிருந்தார். அவள் தலை சுழன்றது. கர்ப்பிணியாக இருந்த அவள் அப்படியே அடியற்ற மரம் போல் கீழே விழுந்து விட்டாள்.

அந்தச் சத்தத்தைக்கேட்ட பட்டாபியும் அப்பெண்ணும் வெளியில் ஓடி வந்தார்கள். அந்நிலையில் மனைவியைக் கண்ட பட்டாபிக்குக் கோபம் பொங்கி எழுந்தது.

"யார் இவள்?" என்றாள் அந்தப் பெண், அதிசயத்துடன்!

அதற்குள் சிறிது சிறிதாக மயக்கம் தெளிந்த மனைவி, அவர் பதில் சொல்வதற்குள்ளாகத் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு எழுந்து உட்கார்ந்தாள்.

"நான் இந்த மனுஷ்யரின் மனைவி. ஒரு காலத்தில் இவருடைய இதே காதல் மொழிகளுக்கு வசப்பட்டு ஏமாந்தேன். என் ஒருத்தியைத்தான் இவ்வுலகில் காதலிப்பதாக இவர் சொன்ன உறுதி மொழி

# அருமைச் சந்திராவுக்கு....



ராஜேந்திர சங்கர்

காலையில் வந்த பத்திரிகையை ருக்மணி அலட்சியமாகத் திருப்பிக் கொண்டிருந்தாள். ஏதோ மேலெழுந்த வாரியாகப் பார்த்துக் கொண்டு வந்தவள் ஒரு விஷயத்தை உன்னிப்பாகப் படிக்க ஆரம்பித்தாள். அதைப் படிக்கப் படிக்க அவள் முகம் கோபத்தினால் சிவந்தது.

"பிரபல சினிமா நட்சத்திரமாகிய ஸ்ரீ கே. பட்டாபிராமனுக்கும் ராவ்பகதூர் கிருஷ்ணஸ்வாமி ஐயரின் குமாரி சந்திராவுக்கும் கல்யாணம் நிச்சயமாகியிருக்கிறது. ஸ்ரீ பட்டாபி கடைசியாகக் கல்யாணம் செய்து கொள்ளத் தீர்மானித்து விட்டதை அறிய, அவருடைய 'விசிறி'களுக்கெல்லாம் சந்தோஷமாயிருக்கும்."

இதை மறுபடியும் ஒரு முறை படித்த ருக்மணிக்குக் கோபமும் துக்கமும் பொங்கி வந்தன. கையிலிருந்த பேப்பரைக் கீழே வீசி எறிந்து விட்டு, அவள் அருகிலிருந்த ஜன்னலருகே போய் நின்றாள்.

"நினைக்க முடியவில்லையே? சந்திராவாவது, இவரைக் கல்யாணம் செய்து கொள்ளவாவது! அவளுடைய உயர்ந்த குணத்திற்கும் இந்த சினிமாக்காரருடைய வாழ்க்கைக்கும் எப்படிப் பொருந்தும்? சந்திரா என் சிறு வயதுத் தோழி. இந்த மனிதரோடு சேர்ந்து அவள் வாழ்க்கை பாழாகக் கூடாது!" என்ற எண்ணம் அவள் உள்ளத்தில் எழுந்தது. உடனே எழுந்து உள்ளே சென்று மேஜையில் உட்கார்ந்து ஒரு கடிதம் எழுதலானாள்.

மதுரை

........................

என் அருமைத் தோழி சந்திராவுக்கு,

பல வருஷங்களுக்குப் பிறகு நான் எழுதும் இந்தக் கடிதம் உனக்கு ஆச்சரியத்தைக் கொடுக்கலாம். இன்று காலைப் பத்திரிகையில் உன்னுடைய கல்யாணத்தைப் பற்றிய சமாசாரத்தைப் படித்ததும் பழைய நாளைச் சம்பவங்கள் எல்லாம் ஒருங்கே நினைவுக்கு வந்தன.

உனக்கு நிச்சயமாகியிருக்கும் இந்தக் கல்யாண விஷயத்தில் என்னுடைய மனப்பூர்வமான சந்தோஷத்தைத் தெரிவிக்க முடியவில்லை. நீயும் நானும் குழந்தைப் பருவத்தில் ஒன்றாக வளர்ந்து ஒன்றாகப் பள்ளிக் கூடத்திலும் படித்தோம். அந்த பாசம்தான் உனக்கு இக்கல்யாணம் எவ்விதத்திலும் சந்தோஷத்தை அளிக்காது என்று சொல்லத் தூண்டுகிறது. அதோடு நீ தேர்ந்தெடுத்திருக்கும் கணவர் உன்னுடைய அன்புக்குச் சிறிதும் பாத்திரமானவரல்ல. இந்த விஷயத்தை எவ்வளவோ வருத்தத்துடன்தான் எழுதுகிறேன். இருந்தாலும் நீ இந்த விபத்திலிருந்து காப்பாற்றப்பட வேண்டுமென்ற ஆசைதான் என்னை இந்தக் கடிதம் எழுதுமாறு தூண்டுகிறது. அநாவசியமாக வெளி வதந்தியை வைத்துக் கொண்டு ஒருவரை அவதூறு செய்வது சரியல்ல. ஆனாலும் இந்த மனிதரைப் பற்றி நான் அறிந்துள்ள உண்மையான சில விஷயங்களை உனக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். அதைக் கொண்டு நீயே தீர்மானித்துக் கொள்.

* * *

சில வருஷங்களுக்கு முன்னால் ஒரு பெண்ணுக்கு அவள் தந்தை வரன் தேடிக் கொண்டிருந்தார். அவர் கொடுப்பதாகச் சொன்ன வரதக்ஷிணைக்காக அநேகர் அப் பெண்ணை மணந்து கொள்ள முன் வந்தனர். அதில் இந்தப் பட்டாபிராமனும் ஒருவர். அப்பொழுது அவர் வெகு சாதாரண நிலையில் இருந்தார். ஆனாலும் அவருடைய அழகும் சாதுர்யமும் எல்லோரையும் கவரக் கூடியதாயிருந்தது. ஆகவே, அவர் அந்தப் பெண்ணின் தகப்பனாரைத் தன் கைக்குள் போட்டுக்கொண்டு வந்த வரன்களையெல்லாம் தட்டிக் கழித்து வந்தார். நாளாவட்டத்தில் சிறிது சிறிதாக அவர் அந்தப் பெண்ணின் உள்ளத்தையும் கவர்ந்து விட்டார்.

ஒரு நாள் மூன்று சினிமா டிக்கட்டுகளுடன் வந்து தகப்பனாரையும் பெண்ணையும் சினிமாவுக்கு அழைத்தார். அதில் தனக்கு வேஷம் இருப்பதாகவும், அதை அவர்கள் அவசியம் பார்க்கவேண்டுமென்றும் சொன்னார். பெண்ணின் தகப்பனாருக்கு இரண்டு நாட்களாகவே உடம்பு சரியாயில்லை. ஆகவே அவர் சினிமாவுக்கு வர மறுத்துவிட்டார். ஆனால் தன் பெண்ணுக்கு அந்தப் படத்தைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை இருப்பதை உணர்ந்தார். பட்டாபி

இருந்தால், நீ இவ்வளவு சொல்லுவதற்கு இடம் கொடுத்திருப்பேனா? என்னை அதிகமாக நிர்ப்பந்தப் படுத்தாதே! இன்னொரு நாள் நான் கட்டாயம் வருகிறேன்" என்று சொல்லித் திரும்பவும் சுவேதாங்கனைச் சமாதானப்படுத்த முயன்றாள் சித்திரலேகா.

"சரி, இதற்கு மேல் நான் என்ன சொல்ல முடியும்? அப்புறம் தங்கள் உசிதம் போலச் செய்யுங்கள்!" என்று சொல்லிச் சுவேதாங்கன் அந்த விஷயத்துக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டான்.

அடுத்தகணம் அங்கே மௌனம் நிலவி விட்டது. மேலே என்ன பேசுவது என்று சித்திரலேகாவுக்கும் புரியவில்லை; சுவேதாங்கனுக்கும் விளங்கவில்லை. சித்திரலேகா சிந்தனையில் ஆழ்ந்தாள். கடந்த காலச் சம்பவங்கள் ஒவ்வொன்றாக அவளுடைய நினைவுத் திரையில் தோன்றி மறைந்த வண்ணம் இருந்தன.

வெகு நேரம்வரை வாய் திறவாமல் உட்கார்ந்திருந்த சுவேதாங்கன் திடீரென்று ஏதோ நினைவு வந்தவன் போல, "ஆமாம், இன்னொரு விஷயம் நான் தங்களுக்குச் சொல்ல மறந்து விட்டேனே! அதை இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லி விடுவது தான் உசிதம் என்று தோன்றுகிறது. அதாவது திங்கள்கிழமை இரவே விருந்து முடிந்தவுடன் பீஜகுப்தர் தேச யாத்திரைக்காக புறப்பட்டு விடப்போகிறார். ஆகவே தாங்கள் மறுபடியும் ஒரு முறை யோசித்து முடிவு செய்தால் நலமாயிருக்குமோ என்று எனக்குத் தோன்றுகிறது" என்றான்.

"என்ன? அன்று இரவே பீஜகுப்தன் புறப்பட்டு விடப் போகிறாரா?" என்று கேட்ட சித்திரலேகா சற்றுத் தயங்கினாள். ஆனால் அடுத்த கணமே ஒரு திட்டமான முடிவுக்கு வந்து தீர்மானமான குரலில், "போனால் போகட்டுமே! அவர் போனால் எனக்கு என்ன? நான் ஒரு தடவை தீர்மானித்துவிட்டால் தீர்மானித்தது தான். அதை எந்த விதத்திலும் அழிக்கவும் முடியாது; மாற்றவும் முடியாது. தெரிந்ததா?" என்று மிகவும் கண்டிப்பான குரலில் சொன்னாள்.

சுவேதாங்கன் அதற்கு மேல் அதிகமாகப் பேச்சுக் கொடுக்க வில்லை. சிறிது நேரத்துக்கெல்லாம் எழுந்து நின்று, "அப்புறம் தங்கள் இஷ்டம், நான் வருகிறேன்!" என்று சொல்லிச் சித்திரலேகாவிடம் விடைபெற்றுக் கொண்டான். (தொடரும்)

## பேஷான யோசனை!



"ஏன் ஐயா! அனாவசியமாக இந்தச் சமயத்தில் கெட்டி மேளம் கொட்டச் சொல்லுகிறீர்கள்?"

"அடே! சும்மா இரும் ஐயா! மாப்பிள்ளைப் பையனுடைய பரீட்சை ரிஸல்டு பேப்பரில் வந்திருக்கிறது. யாரோ அபசகுனம் போல அந்த ரிஸல்டை இரைந்து வாசிக்கிறார்கள். அது யாருடைய காதிலும் விழாமல் இருப்பதற்காகத்தான் கெட்டி மேளம் கொட்டச் சொன்னேன்!"



"அதிருக்கட்டும், சுவேதாங்கா! பீஜகுப்தன் செய்த இந்த மாபெரும் தியாகத்திற்கெல்லாம் மூல காரணம், யார் தெரியுமா? நான்தான்! இருந்தாலும் சுவேதாங்கா! உனக்கு என் மனமார்ந்த நல்வாழ்த்துக்கள்! ஆமாம், உனக்குக் கல்யாணம் எப்பொழுது?" என்று சித்திரலேகா விசாரித்தாள்.

"அடுத்த ஞாயிற்றுக் கிழமை நடக்கப் போகிறது" என்றான் சுவேதாங்கன்.

"அப்படியா? ரொம்ப சந்தோஷம்!" என்றாள் சித்திரலேகா.

"மறு நாள், திங்கட் கிழமை அன்று விருந்து. அந்த விருந்துக்குச் சக்கரவர்த்தி, அரசாங்க அதிகாரிகள் மற்றும் சிற்றரசர்கள் முதலியவர்கள் வரப் போகிறார்கள். அம்மணி! அந்த விருந்துக்குத் தாங்களும் அவசியம் விஜயம் செய்து என்னைக் கௌரவிக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான் சுவேதாங்கன்.

"சுவேதாங்கா! மன்னிக்கணும். விருந்து நடக்கும் தினத்தன்று வர என்னால் இயலாது. நான் இன்னொரு நாள் வருகிறேன். நான் என் வாழ்க்கையையே அடியோடு வேறு விதமாக மாற்றிக் கொண்டு விட்டேன். ஆகவே நான் அந்த விருந்துக்கு வருவது அவ்வளவு உசிதமாயிராது" என்று சொன்னாள் சித்திரலேகா.

"தேவி சித்திரலேகா! தாங்கள் ஒரு தடவை என்னைச் சகோதரனாகப் பாவிப்பதாகச் சொல்லியிருக்கிறீர்கள். நான் வேண்டிக் கொள்கிறேன்; கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். தாங்கள் அவசியம் வந்து தான் ஆகவேண்டும். என் வேண்டுகோளுக்குத் தாங்கள் கட்டாயம் செவி சாய்ப்பீர்கள் என்றும் நம்புகிறேன்" என்று மிகவும் பிடிவாதமாகச் சொன்னான் சுவேதாங்கன்.

"என்ன இருந்தாலும் அன்றைய தினம் நான் வருவதற்கில்லை, சுவேதாங்கா! நான் தீர்மானம் செய்தால் செய்தது தான். இந்த விஷயம் உனக்குத் தெரியாததல்ல. நான் சகோதரி போலவே உன் மேல் அன்பு வைத்திருக்கிறேன். ஆனால் என்னுடைய அன்பு தமக்கையின் அன்பைப் போன்றது. இதை நான் எதற்காக சொல்ல வந்தேன் என்றால், என் சொல்லுக்கு நீ மாறு சொல் சொல்லக் கூடாது என்பதற்காகத்தான். நான் சொல்லுவதைக் கேள். இன்னொரு நாள் நான் கட்டாயம் வருகிறேன்" என்றாள் சித்திரலேகா.

"சரி, ஏதோ நான் சொல்வதைச் சொல்லிவிட்டேன். அப்புறம் தங்கள் இஷ்டம். விருந்து அன்றைக்குத் தாங்கள் வந்தால் தான் என் மனதுக்குத் திருப்தியாயிருக்கும்" என்றான் சுவேதாங்கன்.

"நீ எதிர்பார்ப்பது நியாயம் தான். இல்லையென்று சொல்லவில்லை. ஆயினும் நான் வரக் கூடிய நிலைமையில் இல்லை.



எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். சித்திரலேகா சிறிது நேரத்துக்கெல்லாம் அவன் இருக்கும் அறைக்குள் நுழைந்தாள். அவளைக் கண்டதும் சுவேதாங்கனுக்கு ஒரே வியப்பாகப் போய்விட்டது. அவளுடைய உடம்பு ஒரேயடியாக வெளுத்துப் போய்க் கிடந்தது. அவளுடைய அழகிய தேகம் இவ்வளவு விகாரமடைந்தா காணப்பட வேண்டும்? அவனால் அவளைச் சட்டென்று அடையாளம் கண்டு கொள்ளவே முடியவில்லை. "உங்களுக்கு உடம்புக்கு என்ன? ஒரேயடியாக இளைத்துப் போய் விட்டீர்களே?" என்று கேட்டான்.

"உடம்புக்கு ஒன்றும் இல்லையே! நன்றாகத் தானே இருக்கிறேன்!" என்று சொல்லியவாறே சித்திரலேகா பக்கத்தில் இருந்த ஆசனம் ஒன்றில் உட்கார்ந்தாள்.

இருவரும் சிறிது நேரம்வரை பேசாமலே உட்கார்ந்திருந்தனர். சிறிது நேரத்துக்கெல்லாம் சித்திரலேகா, "என், சுவேதாங்கா? பீஜகுப்தன் சௌக்கியமாக இருக்கிறாரா?" என்று கேட்டாள்.

சுவேதாங்கனுடைய முகத்தில் இலேசாகச் சோகத்தின் சாயை படர்ந்தது. "உம்! பீஜகுப்த மன்னர் சௌக்கியமாகத்தான் இருக்கிறார். ஆனால் அவரிடத்திலே மிகப் பெரிய மாறுதல் ஒன்று ஏற்பட்டு விட்டது!" என்றான்.

"என்ன? மாறுதல் ஏற்பட்டு விட்டதா?" என்று கேட்டாள் சித்திரலேகா.

அந்தக் கேள்வி கேட்கும் பொழுது அவளால் தன்னுடைய ஆவலை அடக்கிக் கொள்ள முடியவில்லை என்பது நன்கு தெரிந்தது. "என்ன? மாறுதலா? என்ன மாறுதல்? அவர் ஏதாவது கல்யாணம்—கில்யாணம் செய்து கொண்டு விட்டாரா, என்ன?" என்று மேலும் கேள்விக்கு மேல் கேள்வி கேட்டாள்.

சுவேதாங்கன் வறண்ட சிரிப்பு ஒன்று சிரித்துவிட்டு, "இல்லை, இல்லை! அவர் கல்யாணம் செய்து கொள்ளவில்லை. நான் தான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன். மதிப்புக்குரிய மிருத்யுஞ்ஜயருடைய பெண் யசோதராவுக்கும் எனக்கும் கல்யாணம் நடக்கப் போகிறது. அதற்குத் தங்களை அழைத்துப் போவதற்காகத் தான் வந்திருக்கிறேன். நான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்பதற்காக பீஜகுப்தர் மகத்தான தியாகம் ஒன்று செய்திருக்கிறார். அவரைத் தெய்வம் என்று தான் சொல்லவேண்டும். நான் ஏழை என்ற காரணத்தினால் மதிப்புக் குரிய மிருத்யுஞ்ஜயர் தன் பெண்ணை எனக்குக் கல்யாணம் செய்து வைக்கச் சிறிதும் சம்மதிக்கவில்லை. பீஜகுப்த மன்னருக்கு எப்படியாவது யசோதராவை எனக்குக் கல்யாணம் செய்து வைத்துவிட வேண்டும் என்ற எண்ணம். ஆகவே அவர் தன்னுடைய பதவியையும் சொத்தையும் என் பெயருக்குத் தானம் செய்துவிட்டார். அவர் பாடலிபுத்திரத்தை விட்டு வெளியே போவதாக இருக்கிறார். என் கல்யாணத்துக்காகத்தான் காத்திருக்கிறார்" என்றான்.

அதைக் கேட்டதும் சித்திரலேகாவின் இதயம் 'படபட' வென்று அடித்துக் கொண்டது. அவளுடைய கண்களில் நீர் சுரந்து வந்தது. "என்ன, பீஜகுப்தன் தன்னுடைய பதவியையும் சொத்தையும் உனக்குத் தானம் செய்து விட்டாரா? சுவேதாங்கா! அவர் செய்தது எவ்வளவு பெரிய மகத்தான தியாகம் தெரியுமா?" என்று கேட்டாள்.

"தேவி, சித்திரலேகா! அவருடைய பெருமையை நான் எப்படிப் புகழ்வேன்? அவருடைய அந்த மாபெரும் தியாகத்தையும் என் அற்பத்தனத்தையும் நினைத்தால் என் மனம் குன்றி விடுகிறது. நான் எவ்வளவோ முடியாது என்று மறுத்துச் சொல்லியும் அவர் அதைக் கேட்க முடியாது என்று மிகவும் பிடிவாதமாகச் சொல்லி விட்டார்!" என்றான் சுவேதாங்கன்.

சிறிதும் சம்மதம் இல்லை; ஆமாம், சம்மதமே இல்லை" என்று கதறியவாறே அவன் பீஜகுப்தனின் காலடிகளில் விழுந்து விட்டான்.

பீஜகுப்தன் சுவேதாங்கனைத் தூக்கி நிறுத்தினான். "சுவேதாங்கா! நடக்க வேண்டியது நடந்து விட்டது. உனக்கு என்னிடத்தில் ஏதேனுமாவது அன்பு என்று ஒன்று இருக்குமானால், நான் சொல்வதை நீ கேட்டுத்தான் ஆக வேண்டும். உலகத்தின் கண்களிலே என்னைப் பொய்யனாக ஆக்காதே! நான் இந்தச் சுகபோக வைபவங்களை வேண்டியமட்டிலும் அநுபவித்து விட்டேன். எனக்கு இது நிறைந்து விட்டது; அலுத்தும் விட்டது. இந்தச் சுகபோக வைபவங்களை இனிமேல் நீ அநுபவி. நான் சொல்லுவதைக் கேள். மறக்காதே! எழுந்திரு. நான் சாஸனத்துக்கும் பதவி மாற்றத்துக்கும் அரசர் அநுமதி பெற ஏற்பாடு செய்ய வேண்டும். வா, போவோம்!" என்று கூப்பிட்டான்.

## முப்பத்தாறாம் அத்தியாயம்

# அழைப்புக்கு மறுப்பு

சித்திரலேகா திரும்பி வந்து விட்டாள். ஆனால் அவள் பீஜகுப்தனைச் சந்திக்கவில்லை. பீஜகுப்தனைச் சந்திப்பதற்கு அவளுக்குச் சிறிதும் துணிவு உண்டாகவில்லை. தான் பீஜகுப்தனுக்குப் பெரிதும் தீங்கு இழைத்து விட்டதாக அவள் எண்ணினாள். அம்மாதிரி நிலையில் அவனைப் போய்ப் பார்ப்பது என்றால் அவளுக்குச் சற்று அச்சமாகத் தானே இருக்கும்? ஆகவே அவள் நேரே தன் மாளிகைக்குச் சென்று விட்டாள்.

சித்திரலேகா தன்னுடைய இன்ப மாளிகைக்குச் சென்றதும் ஆடம்பர வாழ்க்கையை மேற்கொள்ளவில்லை; சாதனை வாழ்க்கையைத்தான் மேற்கொண்டாள். அந்த வாழ்க்கையில் அவளுக்கு அலாதி அமைதி கிட்டுவதாகத் தோன்றியது. அவள் பச்சாத்தாபம் என்னும் தீயில் மகிழ்ச்சியுடன் தன்னை எரித்துக் கொள்ளுவதற்குத் தயாராகிவிட்டாள். அவளுக்குத் தன் மீதே அலாதி வெறுப்பு ஏற்பட்டு விட்டது. அவளுக்கு எதைக் கண்டாலும் பிடிக்கவேயில்லை. இரவு பகல் எந்நேரமும் ஓயாமல் அழுவதுதான் அவளுடைய வேலை.

அவள் பீஜகுப்தனைக் காதலித்தாள்; உயிருக்குயிராக நேசித்தாள். பீஜகுப்தனிடம் தான் அவளுக்கு எவ்வளவு அன்பு! நீண்ட நாட்கள் பிரிந்து வாழ்ந்த பின்னர் தான் அவளுக்குத் தன் உள்ளத்தின் உண்மை நிலை தெளிவாகப் புலனாகியது. ஆனால் இனி என்ன பயன்? அவள் தான் நெறி தவறி விட்டாளே! கடைசியில் குமாரகிரியின் காம வெறிக்கும் முட்டாள் தனத்துக்கும் அடிபணிந்து, அவனுக்குத் தன்னை ஆத்ம சமர்ப்பணம் செய்து, கண நேர இன்பத்தில் மெய்ம் மறந்து தன்னையே அல்லவா அவள் கெடுத்துக் கொண்டு விட்டாள்! ஆமாம், அதற்காக என்ன? மனோபலவீனம் மனித இயல்புதானே? இருந்தாலும் அவள் பீஜகுப்தனை அத்தாங்க சக்தியுடன் காதலித்தாள். ஆகவே அவனை ஏமாற்ற அவளுக்குச் சிறிதும் துணிவு உண்டாகவில்லை. அவள் செய்தது என்னவோ குற்றம்தான். அந்தக் குற்றத்திற்குப் பிராயச்சித்தமாக ஏமாற்றமே உருவெடுத்த வேதனைத் தீயில் குளிப்பதுதான் அவளுக்குச் சரியாகப்பட்டது. அதற்காக அவள் சிறிதும் வருந்தவில்லை. எத்தனைக் கெத்தனை அதிக வேதனைப் பட்டாளோ, அத்தனைக் கத்தனை அதிக இன்பம் கிட்டுவதாக அவளுக்குத் தோன்றியது. எத்தனைக் கெத்தனை அவள் அதிகமாக அழுதாளோ, அத்தனைக் கத்தனை அவளுக்கு மனச்சாந்தி கிட்டியது; ஆறுதல் கிட்டியது.

சித்திரலேகா தன் மாளிகைக்கு வந்து ஒரு மாதத்துக்கு மேல் ஆகிவிட்டது. ஒரு நாள் அவள் கடந்ததை நினைத்து மனம் புழுங்கி அழுது கொண்டிருந்தாள். அப்பொழுது ஒரு பணிப் பெண் அவளுடைய அறைக்குள் நுழைந்து, "அம்மணி! சுவேதாங்கன் தங்களைப் பார்க்க வந்திருக்கிறார்" என்னும் செய்தியைச் சொன்னாள்.

சித்திரலேகா திடுக்கிட்டு எழுந்து நின்றாள். என்ன? ஒரு வேளை பீஜகுப்தன் அவனைக் கூப்பிட்டு அனுப்பியிருப்பானோ? "எங்கே யிருக்கிறான்? இதோ வந்து விட்டேன்!" என்று பரபரப்புடன் சொல்லியவாறே புறப்பட்டாள்.

* * *

சுவேதாங்கன் விருந்தினர் விடுதியில் உட்கார்ந்து சித்திரலேகாவின் வரவை

# சித்ர லேகா

ஸ்ரீ பகவதீ சரண் வர்மா
மொழி பெயர்ப்பு: ரா.வீ.

பீஜகுப்தனின் உத்தரவைக் கேட்டதும் சாரதி தன் கையிலிருந்த சவுக்கை ஒரு சொடுக்குச் சொடுக்கினான். உடனே குதிரைகள் காற்றுடன் உறவாடத் தொடங்கின. அவற்றின் குளம்புச் சத்தம் 'டடக், டடக்' என்று துரித கதியில் கேட்டது. அதற்கேற்றாற்போலவே பீஜகுப்தனுடைய இதயமும் 'படக், படக்' என்று வெகு வேகமாக அடித்துக் கொண்டது. பீஜகுப்தனுக்கு மூளை குழம்பிற்று. உடல் எல்லாம் 'வெட, வெட' வென்று நடுங்கியது. "ஓட்டு, ஓட்டு!" என்று அவன் அடிக்கடி உரக்கக் கூவினான்.

'எப்பொழுது மாளிகைக்குப் போகப் போகிறோம், சுவேதாங்கனைக் காணப் போகிறோம்?' என்ற உள் நினைவு மட்டும் வேலை செய்து கொண்டேயிருந்தது.

சில விநாடிக்கெல்லாம் ரதம் பீஜகுப்தனின் மாளிகை வாசலில் வந்து நின்றது.

* * *

பீஜகுப்தன் அவசர அவசரமாக ரதத்திலிருந்து குதித்து நேரே சுவேதாங்கன் இருக்கும் அறைக்கு ஓடினான். நல்ல வேளையாகச் சுவேதாங்கன் எங்கும் ஓடிப் போய் விடவும் இல்லை. பீஜகுப்தன் நினைத்தது போல ஒன்றுக் கொன்று செய்து கொண்டு விடவும் இல்லை; அவன் தன் படுக்கையில் படுத்துத் தூங்கிக்கொண் டிருந்தான். அதைக் கண்ட பின்தான் பீஜகுப்தனுக்குப் போன உயிர் திரும்பி வந்தது. 'அப்பாடா!' என்று நீண்ட பெருமூச்சு விட்டான். பிறகு சற்று ஆசுவாசப்படுத்திக் கொண்டு அவன் சுவேதாங்கனை ஊன்றிக் கவனித்தான். சுவேதாங்கனுடைய போர்வை கண்ணீரில் நனைந்திருந்தது. அவனுடைய கண்களின் ஓரத்தில் முட்டி நின்ற நீர் காயவில்லை. பீஜகுப்தன் கட்டிலின் அருகில் சென்று சுவேதாங்கனைத் தொட்டு எழுப்பினான். சுவேதாங்கன் சட்டென்று எழுந்து உட்கார்ந்து, "ஸ்வாமி! என்ன உத்தரவு?" என்று மிகவும் பரபரப்புடன் கேட்டான்.

"சுவேதாங்கா! நீ இனி என்னை 'எஜமானர், ஸ்வாமி!' என்றெல்லாம் அழைக்கக் கூடாது. இனிமேல் நீ ஒரு சிற்றரசன், தெரியுமா?" என்றான் பீஜகுப்தன்.

அகல விரித்த கண்களுடன் பீஜகுப்தனைப் பார்த்தவாறே, "ஸ்வாமி! தாங்கள் என்ன சொல்லுகிறீர்கள்? தாங்கள் சொல்லுவது எனக்கு ஒன்றுமே புரியவில்லையே!" என்றான் சுவேதாங்கன்.

"நான் சொல்லுவது அவ்வளவும் உண்மை. கேள், இன்று நான் மதிப்புக்குரிய மிருத்யுஞ்ஜயரிடம் உன் கல்யாணத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்தேன். அவர் சில ஆட்சேபணைகளைச் சொன்னார். அந்த ஆட்சேபணைகளைப் போக்கும் பொருட்டு, நான் என் சொத்தையும் பதவியையும் அவருக்கெதிரிலேயே உனக்குத் தானம் செய்து விட்டேன். யசோதராவை உனக்குக் கல்யாணம் செய்து வைக்க இப்பொழுது அவருக்கு எவ்விதமான ஆட்சேபணையும் இல்லை" என்றான் பீஜகுப்தன்.

சுவேதாங்கன் சிறிது நேரம் அப்படியே திகைத்துத் திக்பிரமை பிடித்தவன் போலாகி, வாய் திறந்து ஒன்றும் பேசாமல் பீஜகுப்தனையே பார்த்தவாறு நின்றான். அதற்குப் பின் சிறிது நேரத்துக்கெல்லாம் அவன் விசித்து விசித்து அழ ஆரம்பித்து விட்டான். "வேண்டாம், ஸ்வாமி! வேண்டாம்! எனக்குக் கொஞ்சமும் சம்மதமில்லை. நான் மாபெரும் பாவி! என்னைப் போன்ற பாவி இந்த உலகத்தில் வேறு யாருமே கிடையாது. ஸ்வாமி! என்னை மன்னித்து விடுங்கள். நான் இங்கிருந்து இப்பொழுதே போய்விடுகிறேன். என்னை மன்னித்தருளுங்கள். நான் தங்கள் வாழ்க்கையைக் கெடுத்துக் குட்டிச்சுவராக்கி விட்டேன். கேட்டிலும் கேடுகெட்ட மனிதனான என் மீது எதற்காக இவ்வளவு இரக்கம் காட்டுகிறீர்கள்? எதற்காக இவ்வளவு கருணை புரிகிறீர்கள்? வேண்டாம், ஸ்வாமி! எனக்கு இந்தத் திருமண விஷயத்தில்

அதைப் பார்த்தால் நீ விடவே மாட்டாய். குண்டு மல்லிகை, நித்திய மல்லிகை, முல்லை முதலிய பூக்களெல்லாம் நம் தோட்டத்தில் பூத்துக் குலுங்கும். நீ அங்கே போய் விளையாடலாம்!'' என்று கிழவி அன்போடு சொன்னாள். முத்துவும் குதித்துக் கொண்டு தோட்டத்துக்குப் போய்ச் சேர்ந்தான். தோட்டத்தைப் பார்த்ததும் முத்துவுக்குத் தன் வீட்டைப் பற்றிய நினைவு, அம்மா அப்பாவைப் பற்றிய நினைவு எல்லாம் அடியோடு மறந்து போய்விட்டது. முக்கியமாக பாலாவைப் பற்றிய நினைவு கொஞ்சங்கூட இல்லாமற் போய் விட்டது.

## இரண்டு விடுகதைகள்

1. முதுகதனில் பொதி சுமக்கும் ஒட்டகம் அல்ல; முளையான கொம்பு உண்டு எருதும் அல்ல; விதி வசத்தால் ஓடு எடுக்கும் சிவனும் அல்ல; வெற்றிச் சங்கு நாரணனும் புலவனும் அல்ல!

2. அந்தரத்தில் தொங்குகிறது செம்பும் தண்ணீரும்.

இவை இரண்டும் என்ன?

சென்ற வாரக் கணக்குக்கு விடை: முதலில் எடுத்துச் சென்ற பூக்கள் 7. முதல் கோவிலில் அர்ச்சனை செய்த பூக்கள் 4.

21-5-50 இதழில் வெளியான விடுகதைகளுக்கு விடை: 1. செக்கு. 2. வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு.

இதற்கெல்லாம் காரணம் அந்தத் தோட்டம் மாயத் தோட்டமாக இருந்ததுதான். கிழவிக்கு மந்திரம் தெரியும். முத்துவைப் பார்த்ததும் அவனைத் தன்னிடமே வைத்துக் கொள்ள வேண்டும் என்னும் ஆசை அவளுக்கு உண்டாகி விட்டது. ஏனென்றால் அவளுக்குக் குழந்தை இல்லை. பாலாவின் ஞாபகம் அவனுக்கு இருந்தால் முத்து கிழவியிடம் தங்கமாட்டான் அல்லவா? அதற்காகத்தான் அவனுடைய ஞாபக சக்தியை மயக்கி விட்டாள் கிழவி. ஆகவே, முத்து எல்லாரையும் மறந்து கிழவியின் வீட்டில் ஆனந்தமாக வசிக்கலானான். (தொடரும்)

# இது என்ன பிரமாதம்!

எலிஸபெத் மகாராணியாரின் அந்தரங்கக் காரியதரிசிகளில் ஸர் வால்டர் ராலே என்பவரும் ஒருவர். அவர் தெனாலிராமன், பீரபல் முதலியவர்களைப் போலக் கேட்ட கேள்விகள் எவ்வளவு கரடு முரடாயிருந்தாலும் 'டக்' என்று பதில் சொல்லி விடுவார்.

ஒருநாள் அவர் சுங்கானில் புகை பிடித்துக் கொண்டே எலிஸபெத் மகாராணியிடம் சென்றார். அதைப் பார்த்த மகாராணிக்கு அவரை ஒரு கேள்வி கேட்டுத் திக்குமுக்காட வைத்துவிட வேண்டுமென்று தோன்றிற்று. "என் மிஸ்டர் ராலே, நீங்கள் புகை குடிக்கிறீர்களே, அந்தப் புகையின் நிறையை உங்களால் அளவிட்டுச் சொல்ல முடியுமா?'' என்று கேட்டாள்.

ராலே சிறிது நேரம் யோசித்தார். அடுத்த கணமே அவருக்கு ஒரு யுக்தி தோன்றி விட்டது. "இதென்ன பிரமாதம்? ஒரு நொடியில் சொல்லி விடுகிறேன்!'' என்றார்.

"எங்கே? சொல்லுங்கள், பார்ப்போம்!'' என்றாள் மகாராணி.

வால்டர் ராலே ஒரு தராசு கொண்டு வருமாறு தன் வேலையாளுக்கு உத்தரவிட்டார். தராசு வந்ததும் புகையிலைத் தூளை நிறுத்துச் சுங்கானில் திணித்துக் கொண்டு புகை குடிக்க ஆரம்பித்தார்.

அதைக் கண்ட மகாராணி, "புகையின் அளவைச் சொல்லுவதாகச் சொல்லிப் புகை குடிக்க ஆரம்பித்து விட்டீர்களே!'' என்று கேலி செய்தாள்.

அதற்குள் அவர் புகை குடித்து முடித்து விட்டார்.

சுங்கானில் உள்ள சாம்பலைக் கொட்டி நிறுத்து, புகையிலையின் நிறையிலிருந்து கழித்தார். மீதி வந்ததை ஒரு தாளில் எழுதி, "இதுதான் நான் குடித்த புகையின் நிறை!'' என்று சொல்லிக் கொடுத்தார்.



அதைக் கண்ணுற்ற மகாராணி அவருடைய புத்திக் கூர்மையை மிகவும் வியந்தாள்.—அருயம்

# சித்திராங்கன் விசித்திரம்

6

சித்திராங்கனுக்கு ஒரு அதிசயக் கரிக்கட்டி கிடைத்தது. அந்தக் கரிக்கட்டியால் அவன் சுவரில் எழுதிய சித்திரங்கள் உயிர்பெற்று வந்தன.



ஒரு பால்காரர் "என் மாடு கறக்கவில்லையே! விலைக்கு எப்படிப்பால் ஊற்றுவேன்" என்று தவித்தார். சித்திராங்கன் உடனே சுவரில் ஒரு பசுவை எழுதினான்.



பசு உயிர் பெற்று வந்து நின்றது. சித்திராங்கன் பாலைக் கறந்து, பால்காரரிடம் கொடுத்துதவினான். சந்தோஷம் கொண்ட பால்காரர்....




"பால்கொடுத்தீர்களே, தண்ணீரும் கொடுங்கள்" என்றார். அவருக்குப் பாடம் கற்பிக்க, சித்திராங்கன் ஒரு யானை முகம் எழுதினான். யானை பால்காரருக்கு வேண்டும் அளவு தண்ணீர் கொடுத்தது.

ஆரம்பித்தன. சைக்கிள் தானாகவே அவனை ஏற்றிக் கொண்டு மைதானத்துக்கு வந்தது. வர வர, சைக்கிளின் வேகம் அதிகமாகிக் கொண்டே போயிற்று. என்னுடைய சைக்கிளை எவ்வளவு வேகமாக விட்டும் கூட அந்த சைக்கிளை என்னால் தொடர முடியவில்லை. கடைசியில் பாலாவும் மாயமாக மறைந்து போய் விட்டான். நான் சிரமத்தைப் பாராமல் சைக்கிளில் அதே வழியாக வந்தேன். கடைசியில் இந்த ஆறு குறுக்கே வந்தது: ஆற்றங்கரையில் விளையாடிக் கொண்டிருந்த பையன்கள் பாலா ஒரு படகில் ஆற்றைக் கடந்து போனதைப் பார்த்ததாகச் சொன்னார்கள். எனக்குக் கரையில் இந்தப் படகு கிடைத்தது. பாட்டி, உன்னால் அவனைக் கண்டு பிடித்துத் தர முடியுமா?" என்று முத்து கேட்டான்.

"நீ கவலைப் படாதே. என்னோடு வா. என் வீடு அதோ தெரியும் மாந்தோப்புக்குள் இருக்கிறது. உன்னைப் பார்த்தால் மிகவும் களைப்படைந்தவன் மாதிரி இருக்கிறது. சாதம் போடுகிறேன், முதலில் சாப்பிடு!" என்று சொல்லி, முத்துவை அந்தக் கிழவி கையைப் பிடித்துத் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்றான்.

முத்துவுக்கு அங்கே பிரமாதமான சாப்பாடு கிடைத்தது. ஜாங்கிரி, ஸோமாஸ், மைசூர்ப்பாகு முதலிய பக்ஷணங்களெல்லாம் கிடைத்தன. பிறகு கிழவி, முத்துவுக்குப் புதிய நிஜார், சட்டை எல்லாம் கொடுத்தான். கலைந்திருந்த அவன் தலையை நன்றாக எண்ணெய் தடவி வாரிவிட்டான்.

"முத்து, நம் வீட்டுப் பின் பக்கத்தில் அற்புதமான பூந்தோட்டம் இருக்கிறது.

டாயா? அவள் எங்கே போனுள்? உனக்கு நான் என் சைக்கிளைப் பரிசாக அளித்தும் நீ பதிலுக்கு என் பாலாவைக் கண்டு பிடித்துக் கொடுக்கமாட்டாயா?" என்று மிகவும் உருக்கமாகக் கேட்டான்.

சின்னப் பையனுன முத்துவின் வார்த்தைகளை அந்த ஆறு கொஞ்சமும் பொருட்படுத்தியதாகவே தெரியவில்லை. அது தன் பாட்டுக்கு எப்பொழுதும் போல் 'சல சல' என்று ஒலித்துக் கொண்டு படுவேகமாய்ப் போய்க் கொண்டிருந்தது. வரவரப் படகின் வேகமும் அதிகமாயிற்று.

'சரிதான். ஆறு நம்மை பாலாவிடம்தான் அழைத்துச் செல்லுகிறது. அவள் போயிருக்கும் இடம் அதற்குத் தெரிந்துதான் இருக்கிறது. தனக்குத் தெரியவில்லை என்ருல் நம்மிடம் சொல்லிவிடும் அல்லவா?' என்று நினைத்துக்கொண்டே படகில் போய்க் கொண்டிருந்தான் முத்து. பாலாவைப் பார்க்கப் போகிறேம் என்னும் ஆவலில் அவனுக்குப் பசி, தாகம் ஒன்றுமே தெரியவில்லை.

படகு கொஞ்சம் கொஞ்சமாகக் கரை ஓரமாகப் போகத் தொடங்கியது. வர வர, முத்துவுக்குப் பசியினுல் களைப்பு ஏற்பட ஆரம்பித்தது. சூரியன் நீல வானத்தில் நடுமத்திக்கு வந்து விட்டான். வெய்யில் தாங்க முடியாமல் இருந்தது. முத்து என்ன செய்வது என்று தெரியாமல் கரையைப் பார்த்துக் கொண்டே போனுன். அவனுக்குப் படகு ஓட்டிப் பழக்கம் இல்லை யாதலால் தன் இஷ்டப்படி துடுப்பைப் போட முடியவில்லை.

அப்பொழுது ஆற்றங்கரை ஓரமாக ஒரு கிழவி கையில் வளைந்த தடியை ஊன்றிக் கொண்டு போனுள். அவள் ஆற்றில் தனியாக ஒரு படகு மிதந்து செல்லுவதையும் அதில் முத்து பயத்துடன் உட்கார்ந்து கொண்டிருப்பதையும் பார்த்தாள்.

உடனே அந்தக் கிழவி சற்று நின்று, தன் வளைந்த ஊன்றுகோலினுல் படகைக் கரைப் பக்கம் இழுத்தாள். படகும் முத்துவும் கரை சேர்ந்தார்கள்.

முத்துவின் கையைப் பிடித்துக் கொண்டு கிழவி, "தம்பி, உன் பெயர் என்ன? நீ எங்கேயிருந்து வருகிருய்? இந்தப் படகில் உன்னை யார் ஏற்றி விட்டார்கள்?" என்று மிகவும் ஆதரவோடும் அன்போடும் கேட்டாள்.

"பாட்டி, என் பெயர் முத்து. என்னுடைய அப்பா, அம்மா எல்லோரும் ஊரில் இருக்கிருர்கள். நானும் என் சிநேகிதி பாலாவும் எப்பொழுதும் எங்கள் வீட்டு ரோஜாத் தோட்டத்தில் விளையாடிக் கொண்டிருப்போம். இப்பொழுதும் ரோஜாப் பூவை நினைத்தால் பாலாவின் ஞாபகம் வந்துவிடுகிறது. நானும் பாலாவும் வழக்கம் போல் மூந்தா நாள் மைதானத்துக்கு விளையாடப் போனேம். அப்பொழுது அங்கே ஒரு பிரம்பு அகப்பட்டது பாலாவுக்கு. அதைப் பார்த்தால் ஒரு மந்திரவாதியின் பிரம்பு மாதிரியிருந்தது.

"அதைப்பற்றி நாங்கள் அவ்வளவாகப் பொருட் படுத்தாமல் அந்தப் பிரம்பை வீட்டுக்கு எடுத்துச் சென்றேம். இன்று காலையில் அந்த மந்திரப் பிரம்பை வைத்திருக்கப் பயந்து மைதானத்திலேயே போட்டு விடலாம் என்று தீர்மானித்தோம். எங்கள் இரண்டு பேருடைய சைக்கிள்களையும் எடுத்துக்கொண்டு மைதானத்துக்குப் போனேம். காலையில் அந்தப் பிரம்பைக் கையில் எடுத்ததிலிருந்து பாலாவின் காரியங்களெல்லாம் தாமாகவே நடக்க






## 3. மாயக் கிழவி

ஆற்றங் கரையில் பாலாவைப் பற்றியே யோசித்துக் கொண்டிருந்த முத்துவுக்கு ஒரு யோசனை 'பளிச்' சென்று தோன்றியது. 'இந்த ஆற்றில் தானே பாலா படகில் ஏறிப் போயிருக்கிறான்? அப்படியானால் இந்த ஆறு நம் சினேகிதி பாலாவை நன்றாய்ப் பார்த்திருக்குமே! இதற்குத் தெரியாமல் பாலா எங்கே போய்விட முடியும்?'

இந்த யோசனை அவனுக்குத் தோன்றியதுதான் தாமதம், முத்து ஆனந்தத்தினால் குதி போட ஆரம்பித்து விட்டான். பிறகு முத்து தைரியமாக ஆற்று ஜலத்தின் அருகில் சென்று, "நதியே, நதியே! அருமை பாலா எங்கே போனான் என்று உனக்குத் தெரியுமா? அவனை எப்படியாவது என்னிடம் கொண்டு வந்து சேர்த்தால் என் சைக்கிளை உனக்குக் கொடுத்து விடுகிறேன். அப்பா எனக்காகப் பட்டணத்திலிருந்து இந்த சைக்கிளை ஆசையோடு வாங்கி வந்தார். சைக்கிள் போனால் இன்னொரு சைக்கிள் வாங்கிக் கொள்ளலாம். ஆனால், பாலா......!" இப்படிச் சொல்லும்போது முத்துவால் மேலே பேச முடியவில்லை. துக்கம் தொண்டையை அடைத்தது. மூன்று சக்கர சைக்கிளைச் சிரமப்பட்டுத் தூக்கி ஆற்று ஜலத்திலே வைத்தான் முத்து. ஆனால் ஆறு அதை எடுத்துக் கொள்ளவில்லை. ஒரு சாண் ஆழத்தில் சைக்கிளை வைத்தால் அதை ஆறு எப்படி எடுத்துக் கொண்டு போகும்? இன்னும் ஆழத்தில் கொண்டு போய் சைக்கிளை வைக்க வேண்டும் என்று நினைத்தான் முத்து.

ஒன்றும் தோன்றாமல் இங்கும் அங்கும் பார்த்த முத்துவின் கண்களில், கரை யோரமாகப் புதருக்கு மத்தியில் இருந்த சின்னப் படகு தென்பட்டது. முத்து மெதுவாக அந்தப் படகை ஜலத்துக்கு இழுத்துக் கொண்டு வந்தான். படகு மிகவும் இலேசாக இருந்தது. ஆகையினால் அதை இழுத்துக் கொண்டு வருவதும் சுலபமாக இருந்தது அவனுக்கு. அத்துடன் துடுப்பும் இருந்தது. அதில் சைக்கிளை வைத்துத் தானும் ஏறி உட்கார்ந்து கொண்டு, துடுப்பினால் தள்ளிக் கொண்டு நடு ஆற்றுக்குப் போய் அங்கே சைக்கிளைப் போட்டுவிட்டால் அதை ஆறு எடுத்துக் கொண்டு போய்விடும் என்பது தான் அவன் யோசனை.

சைக்கிளைப் படகில் வைத்துவிட்டுத் தானும் ஏறி அதில் உட்கார்ந்து கொண்டான், முத்து! பிறகு அவன் துடுப்பினால் மெதுவாகத் தள்ளவே, உடனே படகு ஆடி அசைந்து கொண்டு நகர ஆரம்பித்தது.

படகு நல்ல ஆழத்துக்கு வந்ததும், முத்து சைக்கிளை மெதுவாகத் தூக்கி ஆற்றில் போட்டான்.

ஆற்றில் விழுந்த சைக்கிள் 'தொபுக்' என்று உள்ளே போய்விட்டது.

முத்துவுக்கு அளவுகடந்த சந்தோஷம். படகு எங்கே போய்ச் சேருமோ என்னவோ என்று அவன் கொஞ்சமும் பயப்படவில்லை. ஆற்றுப் பிரவாகம் தன் சைக்கிளை ஏற்றுக் கொண்டு விட்டதாகவே முத்து தீர்மானித்து விட்டான்.

சைக்கிளை ஏற்றுக்கொண்ட ஆறு, உற்சாகத்துடன் முத்துவின் மேல் தண்ணீரை வாரி இறைத்துத் தன் சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொண்டது! விலை உயர்ந்த சைக்கிளைப் பரிசாக ஏற்றுக் கொண்ட ஆறு எப்படியும் பாலாவிடம் தன்னைக் கொண்டு போய் விட்டுவிடும் என்று முத்து மனப் பூர்வமாக நம்பினான்.

படகு போய்க்கொண்டே இருந்தது. முத்துவுக்கு பாலாவைப் பார்க்கவேண்டும் என்று ஒரே ஆவல்.

"நதியே, நதியே! நீ என் சினேகிதி பாலாவைக் கண்

யாத அன்னிய ஆண்மக்களைப் பற்றி அதே தேசத்தைச் சேர்ந்த பெண் மக்கள் ஏன் அச்சப்பட வேண்டும்? ஆண் மக்களின் உள்ளமும் உணர்ச்சியும் சுத்தமாக இருப்பின் பெண்கள் உள்ளத்தில் பயம் உண்டாகாது. முகமும் கண்ணும் உள்ளத்திலே தோன்றும் உணர்ச்சியை உடனே காட்டும். ஆண் மக்கள் முகத்திலும் கண்ணிலும் தோன்றும் குறிப்புகளைப் பார்த்துத்தான் சகோதரிகள் பயப்படுகிறார்கள். ஆண் மக்களைப் பார்த்து சகோதரிகள் அச்சமடைந்து வரும் சமூகத்தை என்னவென்று மதிப்பது? பசு தரும வேகத்தை மக்கள் வெளி போட்டு நன்றாக ஆண்டாலொழிய நம்முடைய சமூகம் இன்னும் சரியான பண்பாடு அடையவில்லை என்றே முடித்துக் கொள்ள வேண்டும். இதையெல்லாம் நான் எழுதுகிறேனே என்று கோபித்துக் கொள்ள வேண்டாம்.

ஒரு ஸ்திரீயைக் கண்டால் இவள் தேவியின் அவதாரம் என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் எண்ணியபடியே நாம் ஒவ்வொருவரும் பாவித்து, பசு தருமப் பேயை அடக்குவோமாக. அனைவரும் அறியும்படி வேசிகளாக வாழ்ந்த பெண்களையும் பகவான் ராமகிருஷ்ணர் துர்க்கா தேவியின் அம்சமாகவே கண்டார். ஒரு வேசியைக் கண்டாலும் தாயிடம் செலுத்தும் அன்பும் வணக்கமுமே அவர் உள்ளத்தில் தோன்றும். நம்முடைய உள்ளத்தில் பசுத்துவத்துக்கு இடம் உண்டாகாமலிருக்க நாம் ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய மந்திரத்தை நன்றாகக் கையாள வேண்டும். பழக்கத்தினால் ஆகாத காரியம் ஒன்றில்லை. சீதை, பார்வதி, லக்ஷ்மி, கௌரி, ஈசுவரி, அம்மன் இவையனைத்தும் தேவியின் நாமங்கள். பெண்ணுருவம் ஒன்றைக் கண்ட போது ஸ்ரீ ராமகிருஷ்ணரை தியானித்து தேவியின் நாமங்களை நாவிலும் உள்ளத்திலும் தரித்து, இவள் தேவி, இவளும் பராசக்தியின் அவதாரம், இவளை உள்ளத்தில் பணிவேனாக என்று நம்முடைய சமூகத்துக்கும், நம் சுய நன்மைக்காகவும் சேவை செய்வோமாக. சுத்த வாழ்க்கைக்கும் உயர்ந்த பண்பாட்டுக்கும் சாதனமாகிய இந்த தேவி கவசத்தை ஸ்ரீ ராமகிருஷ்ணர் நமக்குக் கொடுத்திருக்கிறார். அதைப் பயன்படுத்திக் கொள்ளுவோமாக.



பள்ளிகளில் கூடிப் பயிலும் மாணவர்களே! ரூபாயைப் பெருக்கும் உங்கள் நன் முயற்சிகளில் இதையும் சேர்த்துக் கொள்ளுங்கள். மனத் துப்புரவு உங்களுக்கு மிகவும் முக்கியம். துப்புரவு என்பது உடலும் உடுப்பும் சுத்தமாக வைத்துக் கொள்வது மட்டுமல்ல. எல்லாப் படிப்பையும் விட முக்கியமான படிப்பு மனதில் பசு தர்மக் கவர்ச்சிப் பேய் குடி கொள்ளாமல் உள்ளத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்ளப் பயில்வதாகும். பசு தருமம் பாய்ந்த அழுக்குப் படங்களும் கதைகளும் புஸ்தகங்களும் நம்முடைய சமூகப் பண்பாட்டை நாசம் செய்யப் பார்க்கின்றன. பணம் சம்பாதிப்பதற்காகப் பசு தரும வேகத்தையே மூலதனமாகக் கொண்டு பொய்யை மெய்யாகக் காட்டி மக்களுக்குச் சமூகத்தில் அதிக இடமும் சலுகையும் ஏற்பட்டு விட்டிருக்கிறது. நம்முடைய சிறுவர்கள் எந்த விதத்திலும் மிக நல்லவர்கள். அவர்களுடைய பசு தருமத்தைத் தூண்டி அவர்களையும் பாவக் குழியில் தள்ளி நம்முடைய சமூகமும் மதிப்பிழக்க நாம் விடுவதா? பராசக்தியை வழிபட்டு இல்லற வாழ்க்கையை மேம்படுத்தித் தமிழ் நாட்டில் எந்தச் சிறுமியும் எந்த வேளையிலாயினும் எங்கேயாயினும் தைரியமாகப் போகலாம், இருக்கலாம், எந்தத் தமிழ் மகனும் அவளுக்கு அண்ணனும் நல்ல படைகாப்புமாவான் என்று உறுதிப் படுத்துவோம். ஓங்குக நல்லொழுக்கம்! வாழ்க நற் றமிழர்!

கத்தில் அமைக்கப் பட்டிருக்கிற இல்லற வாழ்க்கையும் மனைவி மக்கள் அன்பும் உயர்ந்த சாதனங்களாகும். இந்த நெறியை விட்டு துன்மார்க்கத்தில் மக்களுடைய பசுதருமம் சென்றால் கேடும் துக்கமும் நிச்சயம்.

சில மகான்கள் கவர்ச்சி வேகத்தை முற்றிலும் வென்று, அதை ஆன்ம வேகமாக மாற்றிக் கொண்டு பிரம்ம சரிய நிலையில் இருந்து வருகிறார்கள். மகா சக்தியின் அருளால் அவர்களுடைய பசு தருமத்தின் வேக முழுமையும் உடல் உள்ளம் இரண்டுக்கும் உரம் தரும் சாதனமாகிப் போய் அவர்களை உயர் நிலைக்குத் தூக்கி விடுகிறது. முற்றிலும் அடக்க முடியாதாயினும் எவ்வளவில் பசு தருமத்தை மறந்து வெற்றி பெறுகிறோமோ அவ்வளவில் ஆன்ம சக்தியும் மேதை மலர்ச்சியும் அடைகிறோம்.

தமிழ் மக்களாகிய நாம் நல்ல இயற்கைப் பண்பும் சமுதாயப் பண்பாடும் பிறப்புரிமையாகப் பெற்றிருக்கிறோம். பாரம்பரியமாகக் கூரிய புத்தியும் சிரிப்பும் சந்தோஷமும் கொண்ட சுபாவத்தைப் படைத்திருக்கிறோம். தமிழர்களுடைய உணர்ச்சியானது, வெறியாட்டம் கொள்ளாமல் எப்போதும் அடக்கமும் சாந்தமும் கொண்டு மலரும். இவ்வளவு நல்ல குணங்களுக்கிடையில் பசுதருமக் கவர்ச்சி வேகம், எல்லாவற்றையும் பாழ்படுத்தும் அபாயமாக இருக்கிறது. மிருகங்களுக்கும் மக்களுக்கும் பொதுவான அந்த வேகத்தை அடக்கி ஆளாவிட்டால் அது கொடும் பிசாசு ஆகி விடுகிறது. பொருள்களின் ஏற்றத்தாழ்வை அறிய முடியாதபடி விவேகத்தைக் கலைத்துக் கொன்று தனி மகனையும் சமூகப் பண்பாட்டையும் கெடுத்து விடும். இதற்கு இடம் கொடுக்காமல் நாம் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். இல்லாவிடில் நம்முடைய சமூகத்தின் மிக நல்ல குணங்கள் எல்லாம் இந்தப் பிசாசுக்கு இரையாகி நாசமாய்ப் போகும். பெண்கள் துணையின்றித் தெருவிலும் கடையிலும் மற்ற இடங்களிலும் பயமில்லாமல் செல்லும் நிலைமை ஏற்பட்டு வந்தால்தான் அந்தச் சமூகம் பண்பட்ட ஜாதியாக மதிக்கப்படும். உயர் நிலை நாகரிகத்துக்கு இதுவே அடையாளம். வாழ்க்கைச் சுகத்துக்கும் இது இன்றியமையாத நிலை. நம்முடைய சென்னைத் தெருக்களில் சென்றால் எல்லாவித நாகரிகங்களும் காணப்படுகின்றன. முன் நாட்களை விட மக்கள், ஆண்களும் பெண்களும் எல்லா ஜாதியாருமே, இப்போது சுத்தமாகவும் நல்ல உடை தரித்தும் வருகிறார்கள். ஆயினும் ஆண் மக்களுடைய நடை பாவனைகளைப் பார்த்தால் பசு தருமம் சரியாக அடக்கப்பட்டு வருகிறதா என்பது கொஞ்சம் சந்தேகமாகத்தான் தோன்றுகிறது. ஆண் மக்களைக் கண்டால் பெண்கள் இயற்கையாகக் கூச்சப் படலாம். ஆனால் கூச்சம் வேறு; அச்சம் வேறு. தாம் அறி



# ராமகிருஷ்ண உபநிஷதம்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

மணியம்.

## 12. தேவி கவசம்

மரத்தில் வேரிலிருந்து நுனிக்கிளை வரையில் பரவி இயங்கும் மரச்சாறு, இலையும் கிளையும் பூவும் காயுமாகத் தோற்றம் கொள்ளுகிறது. அதைப்போல ஒரே பரம்பொருள் பிரபஞ்சத்திலுள்ள எல்லாத் தோற்றங்களுமாகிறது. இந்தச் சிருஷ்டி வயநிலையிலிருக்கும் பரம் பொருளுக்கு நம் பெரியோர்கள் மகா சக்தி என்றும் மாயை என்றும் இன்னும் பல வேறு பெயரிட்டுச் சொல்லுவார்கள். நாம் காணும் எல்லாப் பொருள்களும் எல்லா வேகங்களும் எங்கும் பரவி நிற்கும் பரம் பொருளின் உருவ விகாரங்களேயாகும். உயிர் பெற்று வளர்ந்து அழிந்து மறையும் ஜீவராசிகள் அனைத்தும் மகாசக்தியின் விசுவரூபம். ஏகமாய் நின்ற பரம்பொருள் தன் சங்கற்பத்தினால் பலவாகப் பிரிந்தது. அவ்வாறுண்டான தனிப் பொருள்கள் ஓயாமல் முன் போல் மறுபடி ஒன்று சேரப் பார்க்கின்றன. அதுவே நாம் பார்க்கும் பலவித பௌதிக மானசிகக் கவர்ச்சி வேகங்களுக்கு மூல காரணம். பிரிபட்ட தாதுக்கள் ஒன்றுசேரத் துள்ளி விரும்புவதே பலவித கவர்ச்சி வேகங்களாகின்றன. பௌதிக விஞ்ஞானிகள் அவற்றைச் சோதித்தும் வகுத்தும் விளக்கியிருக்கிறார்கள். பூமியினின்று பிரிந்த பொருள்களைப் பூமி இழுப்பதும் எண்ணற்ற கோளங்கள் பிரம்மாண்டத்தில் விசுவகவர்ச்சி வேகத்துக்கு அடங்கி ஓயாமல் சுழல்கின்றதும்-எல்லாமே பராசக்தியின் திருவிளையாடல்கள். விசுவ கவர்ச்சியை விஞ்ஞானிகள், அது எப்படி வேலை செய்கிறது, அதன் விசை என்ன என்பதையெல்லாம் ஆராய்ந்தும் விளக்கியும் வந்திருக்கிறார்கள். அது ஒரு பெரிய கணித சாஸ்திரப் பகுதி. ஆனால் அந்தக் கவர்ச்சியும் அதன் நியதியும் அது எந்த மூல காரணத்தின் தோற்றம் என்பதும் அவர்களுடைய ஆராய்ச்சிக்குள் அடங்காத விஷயம். மகா சக்தி, மாதவி, துர்க்கை, தேவி என்றெல்லாம் ஸ்ரீ ராம கிருஷ்ணர் உள்ளங் கரைந்து வழிபட்ட பரம் பொருளே அது. ஸ்ரீ சங்கரர் ஆயிர நாமங்களிட்டு அர்ச்சித்ததும் அந்த மகா சக்தியையே.

மகா சக்தியின் தோற்ற வேறுபாடுகளான பல கவர்ச்சி வேகங்களில் ஆண் பெண் கவர்ச்சியும் ஒன்று. இது மக்களை மிக வாட்டுகிறது என்பது அனைவரும் அறிந்த விஷயம். பராசக்தியின் பிரசாதமான இந்த இயற்கை வேகம் மக்களுக்கு அடங்கா மகிழ்ச்சியும் தந்து வருகிறது. கூடவே அவர்களை மிகவும் துன்புறுத்தியும் வருகிறது. இல்லற வாழ்க்கையும் அதில் தோன்றி வளரும் சந்தோஷமும் அன்பும் இந்தக் கவர்ச்சியினின்று விளையும் பயன்கள். பல கஷ்டங்களுக்கும் துக்கத்துக்கும் பாவத்துக்கும் அதுவே தோற்றுவாயாகிறது. பெரும் சக்தி கொண்ட இந்தக் கவர்ச்சிக்குப் 'பகத்துவம்' அல்லது 'பக தருமம்' என்பதும் ஒரு பழைய பெயர். அது எல்லா ஜீவராசிகளுக்கும் பொதுவான ஒரு இயற்கை வேகம். அதை இகழ்தலில் பயனில்லை. அதைத் தீய நெறியில் செலவிடாமல் தரும மார்க்கத்தில் அடக்கிச் செலுத்த வேண்டும் என்பது பெரியோர்களின் உபதேசம். கவர்ச்சி வேகம் தூய நெறியில் செல்வதற்காக சாதாரண மக்களுக்குச் சமூ

## எதிர்பாராத முட்டுக்கட்டைகள்

பிரஜா உரிமைச் சட்டத்தை அமுல் நடத்தும் கமிஷனர் மனுதாரர்களிடம் சட்டத்தை மீறியும் சில கேள்விகள் கேட்பதாகத் தெரிகிறது. உதாரணமாக கல்யாணமானவர்கள் 1939-ம் வருடம் ஜனவரி முதல் தேதியிலிருந்து இலங்கையில் தொடர்பாக வசித்து வந்தால் பிரஜா உரிமை பெறலாமென்று சட்டம் கூறுகிறது. இதற்குமுன் அவர்கள் இலங்கையில் இருந்திருக்க வேண்டிய அவசியமோ, இருந்ததை ருசுப்படுத்த வேண்டிய அவசியமோ கிடையாது. ஆனால் 1939-ம் ஆண்டுக்கு முன்பிருந்தே ஒருவர் இலங்கையிலிருந்து அவருக்கு கல்யாணமும் முன்பே ஆகியிருந்தால் கல்யாணமான தேதி முதல் மனைவி இலங்கையிலிருந்ததை ருசுப்படுத்த வேண்டுமென்று கேட்கிறார்களாம். இவ்விதம் கேட்கச் சட்டத்தில் அதிகாரம் கிடையாது. பல்லாயிரக்கணக்கான தொழிலாளர் பிரஜா உரிமைக்கு இப்பொழுது மனுக்கொடுக்க இருப்பதினால் இந்திய ஹைகமிஷனர் காரியாலயம் அரசாங்கத்துடன் கலந்து பேசிப் பிரஜைகளாக விரும்புவோருக்கு அனாவசியமான முட்டுக்கட்டைகள் போடாதிருக்கும்படி கவனித்துக்கொள்ள வேண்டும்.

## விமோசனம் இல்லையா ?

இலங்கையில் ஒரு பிரபல கம்பெனியின் டைரக்டர் இந்தியாவில் படிக்கும் தமது மைனர் பிள்ளையை விடுமுறைக்கு இங்கு அழைத்துவர கொழும்பிலுள்ள கண்ட்ரோலரிடம் 'விஸா' கேட்டார். "கொழும்பில் 'விஸா' கொடுக்கும் வழக்கமில்லை. தூத்துக்குடியிலுள்ள இலங்கை உதவி கண்ட்ரோலரிடம் 'விஸா' வாங்கிக் கொண்டு வரலாம். எவ்விதத் தடையும் இருக்காது" என்று கண்ட்ரோலர் தாராளமாகச் சொல்லி விட்டார். ஆனால் பையன் தூத்துக்குடிக்கு வந்து கேட்ட பொழுது என்ன பதில் கிடைத்தது தெரியுமா? "உன் தகப்பனார் உனக்கு 'விஸா' கொடுத்து அனுப்புமாறு கேட்டிருக்கிறாரே தவிர, உனக்கு உத்திரவாதமளிப்பதாக எழுதவில்லை. ஆகையால் இலங்கைக்குப் போக முடியாது" என்று உதவி கண்ட்ரோலர் சொல்லித் தடுத்து விட்டார்! மைனர் பையனுக்குத் தகப்பனார் உத்தரவாதமாயில்லாமல் வேறு யார் உத்தரவாதமாகயிருக்கப் போகிறார்கள்? இது சம்பந்தமாகப் பிரதம மந்திரி காரியாலயத்துக்கும் இந்திய ஹைகமிஷனருக்கும் ஆட்சேபனை அனுப்பப்பட்டிருக்கிறது.

கணவன் இருக்கும் இடத்துக்கு மனைவி போகக் கூடாது என்றும் தடுக்கிறார்கள். இந்தியாவிலேயே குடும்பத்தை வைத்து ஜீவனத்துக்கு இங்கிருந்து போதிய பணம் அனுப்பலாமென்றால் செலாவணிக் கட்டுப்பாடு குறுக்கே நிற்கிறது. வருஷத்துக்கு ஒரு தடவை இந்தியாவுக்குப் போய் குழந்தை குட்டிகளைப் பார்த்துவிட்டு வரலாமென்றால் "இந்தியா போனால் திரும்பி வராதே. வந்தாலும் ஒரிரண்டு வருடத்துக்குமேல் இலங்கையில் இருக்கக்கூடாது" என்று பாஸ் போர்ட்டில் குறிப்பிட்டுவிடுகிறார்கள். இந்தியாவிலுள்ள குடும்பத்தை இலங்கைக்கே அழைத்து வந்து விடலாமென்றால் "மனைவி இலங்கையில் ஐந்து வருடம் தொடர்ந்து இருந்தாளா? இல்லாவிட்டால் இலங்கைக்குப் போகப்படாது!" என்று தடுக்கிறார்கள். இந்தப் பலவகைத் துன்பங்களிலிருந்தும் இலங்கை இந்தியர்களுக்கு விமோசனமில்லையா?

## பிரதமரின் பெருந்தன்மை

மகாத்மா காந்தி ஸ்தூபி நிதிக்கு கொழும்பிலுள்ள ஓர் ஏஜண்டின் மூலம் இரண்டாயிரம் ரூபாய் வரையில் வசூலித்து அனுப்ப அனுமதிப்பதாகப் பிரதம மந்திரி ஸ்ரீ சேனநாயகா சென்னை சட்ட சபைத் தலைவரும் காந்தி ஞாபகார்த்த ஸ்தூபி நிதியின் கௌரவப் பொக்கிஷதாருமான ஸ்ரீ ஜே. சிவஷண்முகம் பிள்ளையவர்களுக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். இது தவிர இன்னொரு பெருந் தொகை வசூலித்து அனுப்பப் பிறகு அனுமதிப்பதாயும் பிரதமர் வாக்களித்திருக்கிறார்.

மகாத்மா காந்தியிடம் பக்தியும் காந்தி ஸ்தூபி நிதிக்கு உதவி புரிய ஆவலும் உள்ளவர்கள் பிரதமரின் பெருந்தன்மையைப் பாராட்டுவார்கள் என்பதில் சந்தேகமில்லை. இந்தச் சந்தர்ப்பத்தை இலங்கை இந்தியர்கள் நன்கு பயன்படுத்திக் கொண்டு புனிதப் பணியான காந்தி மகான் ஸ்தூபிக்குத் தாராளமாக நன்கொடைகள் வழங்குவார்களென்று எதிர்பார்க்கப்படுகிறது. நன்கொடை அனுப்புவோர் பெல்லார்ஸ் வெல்டன் கிழுல் ஏஜன்ஸீஸ், ஆட்டுப் பட்டித் தெரு, புறக்கோட்டை, கொழும்பு என்ற விலாசத்துக்கு அனுப்பி வைக்க வேண்டும்.

விட்ட அண்ணனுக்காக; உயிர் கொடாது அங்குப் போகேன்; உயிரைத் தத்தம் செய்ய வேண்டும், அப்படிச் செய்யாமல் ராமன் பக்கம் போக முடியாது நான்; கார்க் கோல மேனி மைந்த: அழகிய மாலை அணிந்த மார்பு கொண்ட தம்பியே; என் துயர் தவிர்த்தியாயின்: என் மனதில் இருக்கிற துயரத்தை நீக்க வேண்டும் என்று நீ எண்ணினால் நீ செய்ய வேண்டியது இது தான்; கார்க்கோல மேனியானை: நீல மேக சாமள வர்ணனாகிய ராமனை; கூடுதி கடிதின் என்றான்: இப்போதே ஒரு நொடியில் திரும்பிப் போய்ச் சேர்ந்து விட வேண்டும் நீ. என்று சொன்னான் கும்பகர்ணன்.]

*.*

தம்பி விபீஷணன் மேல் உள்ள ஆசையும் அன்பும், அவன் எப்படியாவது உயிர் தப்ப வேண்டும் என்ற ஆத்திரமும், ஒரு அற்புதமான கவி உருவம் எடுக்கிறது செய்யுளில்.

<u>நமது இலங்கைக் கடிதம்</u>

# பார்லிமெண்டுத் தலைவரின் பாராட்டு

ரஜனி

கொழும்பு மே 24—

இந்தியர் பாகிஸ்தானிகள் பிரஜா உரிமைச் சட்டத்தைப் பகிஷ்கரிப்பதென்று 1948-ம் வருடம் தீர்மானித்த அதே ஹட்டன் நகரத்தில் இந்திய காங்கிரஸ் கமிட்டி இவ்வாரம் கூடி பிரஜா உரிமைச் சட்ட பகிஷ்காரத்தை வாபஸ் பெறுவதென்றும், சட்டப்படி பல்லாயிரக் கணக்கிலே பிரஜைகளாகப் பதிவு செய்து கொள்ளும்படி இந்தியர்களுக்கு யோசனை கூறுவதாயும் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியிருக்கிறது. இத் தீர்மானத்துக்குக் கடுமையான எதிர்ப்பு இருந்தது உண்மைதான். என்ன காரணத்துக்காக மேற்படி சட்டத்தைப் பகிஷ்கரிப்பதென்று 1948-ம் ஆண்டில் தீர்மானிக்கப்பட்டதோ அந்தக் காரணம் அப்படியே மாறுபடாமலிருக்கையில் பகிஷ்காரத்தை வாபஸ் பெற எவ்வித நியாயமுமில்லையென்று சிலர் காரசாரமாக வாதித்தார்கள். குடியேற்றச் சட்டமும் செலாவணிக் கட்டுப்பாடுகளும் கடுமையாகி இந்தியர்கள் பலவகையிலும் நெருக்கப்படுகையில் அரசாங்கத்தினிடமிருந்து சிறிதளவு நல்லெண்ண சமிக்ஞையும் கிடைக்கவில்லை என்று இந்தக் கோஷ்டியார் வாதித்தார்கள். அதே சமயம் காங்கிரஸ் அக்கிராசனரும் ஸ்ரீ எஸ். தொண்டமான் போன்ற பழுத்த அனுபவசாலிகளும் பகிஷ்காரத் தீர்மானத்தை வாபஸ் பெற வேண்டுமென்று தகுந்த காரணங்களுடன் எடுத்துக் கூறினர்.

## நல்ல எண்ணம் பிரதிபலிக்குமா?

"சட்டத்தை ஒரு வருஷம் பகிஷ்கரித்துப் பார்த்தாகி விட்டது. அதனால் கஷ்டங்கள் மேலும் மேலும் அதிகரித்தனவே தவிர அரசாங்கத்தின் மனம் இரங்கவில்லை. அரசியலில் ஸ்தம்பித நிலைமை ஏற்பட இடம் கொடுக்கக்கூடாது. இலங்கையரல்லாதார்களுக்கு ஓட்டுரிமையில்லாதபடி தேர்தல் சட்டத் திருத்த மசோதாவும் சட்டமாகிவிட்டபடியினால், இந்தியர்கள் பல்லாயிரக் கணக்கிலே பிரஜைகளாகப் பதிவு செய்து கொண்டு ஓட்டுரிமை பெற்றாலொழிய அடுத்த பார்லிமெண்டில் இந்தியர்களின் குறைகளை எடுத்துச் சொல்லவும் பிரதிநிதிகள் இல்லாமல் போய்விடுவார்கள். இம்மாதிரிச் சூழ்நிலையில் திருப்தியற்ற பிரஜா உரிமைச் சட்டத்தை ஏற்று அதன்படிக் கிடைக்கும் உரிமைகளைப் பெற்று, புதிய உரிமைகளுக்குக் கிளர்ச்சி செய்வதுதான் புத்திசாலித்தனம்" என்று ஸ்ரீ ராஜலிங்கம் கோஷ்டியார் கூறினார்கள். கடைசியில் பகிஷ்காரத்தை வாபஸ் பெறும் தீர்மானம் நிறைவேறியது. எட்டுபேர்களைத் தவிர மற்றவர்கள் யாவரும் தீர்மானத்தை ஆதரித்து ஓட்டளித்தனர்.

இலங்கை பார்லிமெண்டுத் தலைவரான ஸர் பிரான்ஸிஸ் மொலமூரே காங்கிரஸ் தீர்மானத்தைப் பாராட்டி இத் தீர்மானம் நல்லெண்ணத்துக்கும் பரஸ்பர நம்பிக்கைக்கும் அடிகோல வேண்டுமென்று அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறார். காங்கிரஸ் சம்பந்தப்பட்டமட்டில் நல்லெண்ணம் பூரணமாக இருக்கிறது. நிபந்தனை எதுவுமின்றிப் பகிஷ்காரத் தீர்மானத்தை வாபஸ் பெற்றது இதற்கு ஒரு அத்தாட்சி. இந்த நல்லெண்ணம் அரசாங்கத்தினிடமும் பிரதிபலிக்குமா என்பதுதான் இப்போது கேள்வி.

# கம்பர் தரும் காட்சி

## 295. ராமனிடம் போய்விடு!

'தம்பி விபீஷணன் ராமனிடம் இருந்து பிரிந்தல்லவா வந்து விட்டான்' என்று எண்ணிக்கொண்டு வருத்தப்பட்டான் கும்பகர்ணன்.

'ராமனே அனுப்பித்தான் வந்திருக்கிறேன் உன்னிடம்' என்றான் விபீஷணன்.

'நீயே ராமனிடம் வர வேண்டும்' என்று பரிந்து சொல்லிக் கும்பகர்ணன் காலில் விழுந்தான் விபீஷணன்.

மாலை சுற்றிய ரத்தின கிரீடம் தரையில்த் தோய்கிறது.

கையால் அண்ணனது காலைப் பற்றிக்கொண்டு புலம்புகிறான் விபீஷணன்.

தும்பியந் தொடையல்மா லைச்
சுடர்முடி படியில்தோ யப்
பும்புபொற் கழல்கள்கை யால்ப்
பற்றினன் புலம்பும்பொற் றோய்த்
தம்பியை, எடுத்துமார் பில்த்
தழுவித்,தன் தடங்கண்ண டு
வெம்புண்நீர் சொரியநின் றான்
இனையன விளம்பல்உற் றான்.

[தும்பியந் தொடையல் மாலைச் சுடர் முடி : வண்டு சூழும் புஷ்ப மாலை சுற்றிய விபீஷணனது ரத்தின கிரீடம்; படியில் தோய : தரையில் பட்டுக் கிடக்க; பும்பு பொற்கழல்கள் : சப்திக்கிற அழகிய வீரக் கழல் அணிந்த கும்பகர்ணனது காலை; கையால் பற்றினன் புலம்பும் : கையினால் பற்றிக் கொண்டு அழுகிற; பொற்தோள் தம்பியை : அழகிய தோள் கொண்ட தம்பியை; எடுத்து மார்பில் தழுவி : கையால் எடுத்து மார்போடு தழுவினவனாய்; தன் தடங்கண்ணோடு வெம்புண் நீர் சொரிய நின்றான் : தன் விசாலமான சிவந்த கண்ணில் இரத்த வாரி போலக் கண்ணீர் சொரிய நின்றான்—கும்பகர்ணன்; இனையன விளம்பல் உற்றான் : அவன் கீழ்க் கண்டபடி பேச ஆரம்பித்தான்;]

* * *

தரையில்ப் பெண்கள் கோலம் போடுகிறார்கள். கோலப் பொடி கொண்டு போடுவார்கள். அரிசி மாவைத் தண்ணீரில்க் கரைத்தும் கோலம் போடுவார்கள்.

இந்தக் கோலங்கள் கொஞ்சம் தரையில்ப் பதிந்து நிற்கும். கண்ணுக்கும் புலப்படும்.

வெறும் பச்சைத் தண்ணீரைக் கொண்டு கோலம் போட்டால் நிற்கவா செய்யும். ஒரு நொடியில் ஆவியாய்ப் போய் வெறுந் தரையாகத் தான் இருக்கும்.

ஒரு க்ஷணத்தில் அல்லவா நீர்க் கோலம் மறைந்து விடுகிறது.

'வாழ்க்கையும் அதன் லக்ஷ்யங்களும் இன்பங்களும் அப்படி க்ஷணத்தில் மறைவனவாய்த்தான் இருக்கின்றன' என்கிறான் கும்பகர்ணன்.

ஆனாலும் அந்த வாழ்க்கையில் ஆசை கொண்டு என்ன எல்லாமோ செய்யச் சொல்லுகிறது அரசர்களை. அண்ணன் ராவணனையுந்தான்.

என்னை யுத்தத்துக் கென்றே வளர்த்து யுத்தத்துக்கான இந்த வேஷத்தை யெல்லாம் போட்டு இங்கே விட்டிருக்கிறான் அண்ணன். இது தெரிகிறதல்லவா உனக்கு.

'நீர்க்கோல வாழ்வை நச் சி
நெடிதுநாள் வளர்த்துபின் னைப்
போர்க்கோலம் செய்துவிட் டார்க்(கு)
உயிர்கொடா(து) அங்குப்போ கேன்
தார்க்கோல மேனிமைந் த
என்துயர் தவிர்த்தியா யின்
கார்க்கோல மேனியா னைக்
கூடுதி கடிதின்' என் றான்.

[நச்சி : விரும்பி; நெடிது நாள் வளர்த்து: இத்தனை வருஷமாக என்னை யுத்தக் கடாவாக வளர்த்து : பின்னைப் போர்க்கோலம் செய்து விட்டார்க்கு : கடைசியாக ஆசையோடு இப்படி போர்க் கோலம் செய்து இங்கு வர

○●○

சென்னை மாகாணத்திலும் மாகாணத்துக்கு வெளியிலும் கூடப் பல்லாயிரம் மக்களின் கவனத்தைக் கவரும்படியாகத் தம் புதல்வியின் திருமணத்தை நடத்திய ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் தம்பதிகளை மேலே காணலாம்.

★

சௌபாக்கியவதி லக்ஷ்மி நாராயணியின் திருமண வைபவத்தின்போது ஸ்ரீ வாஸன் அவர்களின் செல்வப் புதல்வன் சிரஞ்சீவி பால சுப்பிரமணியத்தின் உபநயனமும் நடந்தேறியது. தந்தையைப் போல் குமாரனும் பெயரும் புகழும் வாழ்க்கையில் வெற்றியும் பெற்று விளங்க வேண்டுமென ஆசிகூறுகிறோம்.

○●○



போனதும் உபசார வார்த்தைகளுடன் என்னை வரவேற்றார். பிறகு, நீதிஸ்தல வேலையாக என்னைக் கூப்பிடவில்லை யென்றும், தாம் சொல்லப் போகும் வார்த்தைகளை ஒரு அண்ணனின் மொழியாக நான் கருத வேண்டு மென்றும் கூறி பின்வருமாறு போதித்தார்.

“ உனக்கு வேலையில் நல்ல ஊக்க மிருக்கிறது. விரைவில் படிப்படியாய் உயர்ந்து உத்தியோகத்தில் பெரிய பெயரெடுப்பாய் என்பதில் சந்தேகமில்லை. என்ன, நான் சொல்லுகிறது தெரிகிறதா ?” என்று மிகவும் பரிவுடன் கேட்டார்.



அந்த உத்தியோகத்தில் இரண்டே படிகள்தான் உண்டு. நான் கீழ்ப்படி, அவர் மேல்படி. இப்படியிருக்கையில் அவர் பேசியதின் அர்த்தம் எனக்கு ஒன்றும் விளங்கவில்லை.

என் மேலதிகாரி மேலும் சொன்னார் :

“ உன் நலத்தைக் கருதியே இதை நான் சொல்லுகிறேன். தினமும் கச்சேரி வேலையைச் சீராகச் செய்து முடித்த பின் மனுஷன் பொறுப்புவிட்டுத் தன்னிஷ்டம் போல் போகலாம். ஆனால் பாரு, நீயோ நீதிபதி பதவியிலிருக்கிறாய். பல கண்களும் உன்மேல் பார்வையிடும். நான் என்ன சொல்லுகிறேன், இந்த ஆடு மேய்ப்பது, சண்டைச் சேவல் வளர்ப்பது இதையெல்லாம் விட்டுவிடு. இந்தமாதிரி முரட்டுக் காரியமெல்லாம் உன் பதவிக்குத் தகுந்ததில்லை. இதை யெல்லாம் விட்டுவிடு ” என்று சொன்னார்.

என்னிடத்தில் சண்டைக் கோழியோ மற்றவிதக் கோழியோ கிடையாது. ஆகையினால் அவரைக் குறுக்கிட்டுப் பேசாமல் சும்மா இருந்து விட்டேன். ஏனென்றால், எனக்கு வந்த ஆத்திரத்தில் பேசாமலிருப்பதே நலமென்று தோன்றியது. மேலும் சண்டைக் கோழி விஷயத்தில் நான் முற்றிலும் நிரபராதி. ஆனால் என்னிடம் பந்தயப் புறாக்க ளிருப்பது எல்லோருக்கும் தெரிந்ததே.

மேற்கண்ட சம்பாஷணை நடந்து ஆறு மாதத்துக்கெல்லாம் அந்த ஊரில் ஒரு விழா நடைபெற்றது. அதில், நாட்டுப் பசுக்களின் முன்னேற்றத்திற்குத் தான் முதலாய் ஒரு கறவைப் பந்தயம் வைத்து நிறைய பால் கொடுத்த பசுவின் சொந்தக்காரனுக்கு ஐம்பது ரூபாய் பரிசளிப்பதாக ஏற்படுத்தியிருந்தார்கள். கறவைப் போட்டி பசுக்களுக்கென்று இருந்த போதிலும், என் மந்தையில் பிறந்த இரண்டு ஆடுகளையும் போட்டிக் இல்லாமல் பசுக்களுடன் கறக்க அனுமதி பெற்றேன். அன்று பரிசு பெற்ற பசு காலையும் மாலையுமாக இரண்டே கால் சேர் பால் கறந்தது. என் ஆடுகளோ தலைக்கு மூன்று சேருக்கு மேல் கொடுத்தன. போட்டியைப் பார்க்க வந்த அரசாங்கப் பிரதானி யொருவர் இதைக் கண்டு வியந்தார். அப்பொழுது என் மேலதிகாரி “ படித்தவர்கள் ஜீவராசி வளர்ப்பில் சிரத்தை யெடுத்துக் கொண்டால் அது பயன்படாமல் போகாது ” என்று என்னை மெச்சிப் பேசியதை நான் என்றும் மறக்க மாட்டேன்.

பல தடைகளைக் கடந்து செழித்த என் ஆட்டுப் பண்ணை எதிர்பாராத விதத்தில் முடிந்துவிட்டது. வேலை மாறி உயர்ந்த உத்தியோகம் கிடைத்ததால் ஊரை விட்டு அடிக்கடி வெளியே போக வேண்டி வந்தது. சில வேளை ஊர் திரும்ப இரண்டு மாதங்களாகிவிடும். கவனிப்பாரின்றி ஆடுகள் கெடுவதைவிட அவைகளைப் பிறருக்குக் கொடுத்தால் அவர்கள் பார்த்துக் கொள்வார்கள் என்று நினைத்தேன். என்னிடமிருந்த இருபத்திரண்டு ஆடுகளில் பதினாறு ஆடுகளைத் தெரிந்தவர்களுக்கு இனாமாகவே கொடுத்தேன். ஆறு ஆடுகளைப் பாலுக்காக வேண்டியவருக்கு விற்றேன். ஒரு வருஷம் சென்ற பின் விசாரித்ததில், விலை கொடுத்து வாங்கிய பொருளையே மனிதன் மதிப்பான் என்னும் உண்மையை நான் உணர்ந்து கொண்டேன்.



அப்படியே செய்து பார்த்தேன். அந்த முறையில் சற்றும் பலன் தெரியவில்லை.

* * *

இருட்டிய பின்னும் ஒரு நாள் ஆடுகள் வீடு திரும்பவில்லை. பிறகு, ஏழு மணிக்கு சுப்பன் மந்தையுடன் வந்து சேர்ந்தான். ஆனால், எனக்கு மிகவும் பிடித்த ஒரு ஆட்டுக் குட்டியைக் காண வில்லை. தன் தாயுடன் மந்தையைவிட்டு விலகிக் குன்றின் மீதேறி மேய்ந்து கொண்டிருக்கையில், ஒரு சிறுத்தை வந்து அதைக் கௌவிக் கொண்டு போய் விட்ட தென்றும், இதைத் தான் கண்ணால் பார்த்ததாகவும், வெருண்டு சிதறிய மற்ற ஆடுகளை ஒன்று கூட்டி ஓட்டி வருவதற்கு நேரமாய் விட்டதென்றும் சுப்பன் சொன்னான். அவனுக்குச் சுமார் பதி மூன்று வயதிருக்கலாம். அந்தச் சிறு பையன் சிறுத்தையைக் கண்டு அஞ்சாது காட்டினுள் ஆடுகளைப் பின் தொடர்ந்து திரட்டிக் கொண்டு வந்ததை எண்ணி அவனை மெச்சினேன். தொலைவிலிருந்த அந்தக் காட்டுக்கு இனி ஆடுகளை மேய்த் துச் செல்லவேண்டாமென்றும், சமீபத்தி லுள்ள குன்றடிவாரப் புதற்காட்டுக்குப் போனால் போதுமென்றும், சொன்னேன். அப்பொழுது கடுவேனிற்காலம். ஆறு வற்றி, கரையோரமுள்ள செடிகள் சருகு மற்றிருந்தன. இந்தப் புதற் காட் டில்தான் பசுமையைச் சிறிதேனுங் காணலாம். மறுநாள் முதல் ஆடுகள் அங்கேயே சென்றன. இப்படி ஒரு வாரங் கழிந்தது. பின்னொரு நாள் மத்தியானம் இரண்டு மணிக்கே ஆடுகள் திரும்பி வந்து விட்டன. மற்றொரு குட்டியைச் சிறுத்தை கொண்டு போய் விட்டதென் றும், தினத்திற்கு மூன்று சேர் கறக்கும் ஒரு ஆடு மிரண்டு எங்கேயோ போய் விட்டதென்றும், மிகுந்தவை ஒரே பாய்ச் சலில் ஓடி வந்து விட்டன வென்றும், பின் வந்த சுப்பன் சொன்னான். காணா மற் போன ஆடு சாயங் காலம் தானாகவே வந்து விட்டது. மறுநாள் அதே ஆடு போய் விட்டது. தன் மத்தியானச் சாப்பாட்டை மர நிழலில் புசித் திருக்கை யில், சில குடியானவர்கள் வந்து அந்த ஆட்டைச் சிறுத்தை கொண்டு போய் விட்ட தென்று சொன் னார்கள் என்று சுப்பன் சொன்னான். அந்த ஊரில் சிறுத்தைகள் மிகுந்திருப் பது உண்மையே. அப்படி யும், பத்து நாட்களுள் வெவ்வேறு இடங்களில் மூன்று ஆடுகள் சிறுத்தைக் கிரையானதை யோசித்தால் எனக்கு சந்தேகமேற்பட்டது. என் சந்தேகத்தை யுணர்ந்த சுப்பன் பல தெய்வங்கள் மீது ஆணை வைத்துத் தான் சொன்னது நிஜந்தானென்று சாதித்தும் எனக்கு நம்பிக்கை பிறக்கவில்லை.

சில நாள் கழித்துச் சாயங்காலம் வேலையிலிருந்து வீடு வந்ததும், நான் முதல் முதலாக வாங்கிய கறவை ஆட் டைப் புதற்காட்டில் சிறுத்தை கொன்று விட்டதென்றும், கல்லை விட்டெறிந்தும் உரக்கக் கூவியும் புலியை விரட்டி விட்டு அந்த ஆட்டைச் சுமந்து சுப்பன் பின் வருவதாகவும், மற்ற ஆடுகளைத் தன் வசம் வீட்டுக் கனுப்பி விட்டதாகவும் ஓர் இடைப் பையன் வந்து சொன்னான். சிறிது நாழிகை கழித்துச் செத்த ஆட் டைத் தோள்மேல் சுமந்து கொண்டு சுப்பன் வந்தான். குரல் வளையில் சிறுத் தையின் பல் பட்ட சின்னங்களைத் தவிர, புலி கொன்ற ஆட்டின்மீது ஒரு காயமு மில்லை. அப்பொழுது வஞ்சனையோ பயமோ அறியாத அந்தச் சிறுவனை நான் சந்தேகித்ததைப் பற்றி வருந்தவில்லை. இப்படி அநியாயமாக என் அருமை ஆடுகள் சிறுத்தை வாய்ப்பட்டுச் சாகின் றனவே, இதைத் தடுக்க வழியொன்று மில்லையே என்று ஏங்கினேன். கடைசி யில் ஆடுவளர்ப்பதையே கைவிட்டுவிடலா மென்று கூட எனக்குத் தோன்றிற்று.

இப்படி சிந்தித்திருக்கையில், பட்டை யணிந்தவொரு சர்க்கார் சேவகன் என் னருகில் வந்து நின்று மெல்லக் கனைப் பதை யுணர்ந்தேன். பிறகு என் மேலதி காரி என்னை அழைத்து வரச் சொன்ன தாக அவன் சொன்னான்.

* * *

அப்பொழுது நான் நீதிபதியாக வேலை பார்த்து வந்தேன். எனக்கு மேலுள்ள நீதிபதியின் வீட்டுக்கு நான்



கூடிக் கொண்டு, என்ன கூலி கொடுத்தாலும் தழை கொண்டு போடுவது முடியாத காரியமென்றும், ஆடுகளைக் காட்டுக்கு ஓட்டிச் சென்று வயிறு நிறைய மேய்த்து வருவதே தங்களுக்குத் தெரிந்த வழியென்றும், கடைமொழியாகக் கூறி விட்டார்கள். மூன்று நாள் ஆடுகளுக்கு உலர்ந்த கொடிகளையும் கருவேலங்காயையும் இலை உணவுக்குப் பதிலாக அளித்து, வீட்டிலுள்ள இதர வேலையாட்களை அனுப்பி ஏதோ கொஞ்சம் தழைகளைத் தருவித்துக் கொடுத்தேன். ஆடுகள் மெலிந்ததுமன்றி, வீட்டு வேலைக்காரர்களை நான் முழுதும் ஆட்டு சேவைக்கு ஏவுதலைவிட எல்லோருமே ஆடுகளாய் மாறிக் கொட்டடியிலே குடியிருந்து தழையுண்பதே மேல் என்று என் மனையாள் சொல்லலானாள். முடிவில், நானும் மற்றவர்களைப் போல் ஆடுகளைக் காட்டுக் கனுப்ப ஒப்பி, கப்பன் என்ற இடைப் பையனை ஆட்டு வேலைக்கு நியமனப்படுத்தினேன்.



* * *

ஆல், அத்தி, பலா முதலியவைகளின் தழை, தோவைக் கொடி, அகத்திக் கீரை இவைகள் தோட்டங்களிலும் வழியோரமாகவும் அகப்படும். ஆனால் மரமடர்ந்த காடுகளுக்கே இடையர் ஆடுகளை ஓட்டிச் செல்வார்கள். குன்றின் அடிவாரத்திலுள்ள காட்டை நோக்கித் தினமும் என் ஆடுகள் காலை ஒன்பது மணிக்குப் புறப்படும். மாலை ஐந்து மணிக்கெல்லாம் வீடு வந்து சேரும். ஒரு நாள் வயிறு நிறைய வேப்பந் தழையை மேய்ந்து வந்தன. அன்று பாலில் வேம்பின் கசப்பும் வேகமும் தோன்றின. புளியங் கொழுந்து, வேப்பிலை முதலியவைகளை ஆடுகள் மேயாது பார்த்துக் கொள்ள வேண்டுமென்று கப்பனிடம் வற்புறுத்திச் சொன்னேன். அவன் எவ்வளவோ ஜாக்கிரதையாக இருந்தும், சிற் சில நாள் ஆடுகள் பாலுக்குதவாத தழைகளையும் பூண்டுகளையும் தின்று விடும். ஆடுகள் வெளியே சென்று மேய்ந்து வருவதற்கு இதுவுமொரு ஆட்சேபணை. இப்படி மேய்வதில், மற்ற ஆட்டு மந்தைகளுடன் கலந்து அதனுடைய ஜாதி கெட்டுப் போகாமலும் ஜாக்கிரதையாகப் பாதுகாக்க வேண்டும். மேலும், சிலவிபத்துக்களும் ஏற்படலாம்.

காடுகளில் மரத்தடியிலும் இலைமீதும் உண்ணியின் இளம் படைகள் காத்துக் கொண்டிருக்கும். பளபளவென விளங்கும் சருமத்தோடு துள்ளிக் குதித்து மேய்ச்சலுக்குச் சென்ற ஆடு, மாலையில் தலை குனிந்து மயிர் சிலிர்த்துத் தள்ளாடித் தள்ளாடித் திரும்பலாம். உற்றுப் பார்த்தால் ஆயிரக் கணக்கான உண்ணிகள் அதன்மேல் ஒட்டிக் கொண்டு அதன் ரத்தத்தை உறிஞ்சிக் கொண்டிருப்பதைக் காணலாம். மந்தையின் ஒன்றிரண்டு ஆடுகளே இப்படி உண்ணி செறிந்து வீடு வரும். ஆனால், வெகு சீக்கிரத்தில் உண்ணிகள் மற்ற ஆடுகளுக்கும் கொட்டிலுக்கும் பரவிவிடும். பலமாகப் பற்றிய பிறகு உண்ணிகளைக் கையாலெடுத்துக் களைவது சாத்தியமில்லை. மண்ணெண்ணெயும் சவுக்கார நீரும் கலந்து ஆட்டின்மேல் அப்பினால் பேன்கள் சாகுமே தவிர உண்ணி ஒழியாது.

உண்ணிக்கென்று தயாரித்த பரதேச மருந்துகளையோ, பாஷாணம் கலந்த மருந்தையோ, அப்பினால் உண்ணிகள் செத்து உதிர்ந்து விடும். தவிரவும் அநேக நாட்களுக்கு மறுபடியும் உண்ணி பிடிக்காது. இம்மாதிரியான மருந்துகளை நம் தேசத்தில் சர்க்கார் கால்நடை வைத்திய சாலைகளில் உதவுவதில்லை. பிற தேசங்களில் இவை எளிதிற் கிடைக்கும். இங்கு கிடைக்காது. அதுவும் ஆடுகள் மலிந்த நாட்டுப்புறங்களில் பாஷாணமோ இதர உண்ணி மருந்துகளோ இலேசில் அகப்படாது. நான் எங்கிருந்தோ சிரமப்பட்டுப் பாஷாணம் தருவிக்கு மட்டும், சில மாதங்களுக்கு, என் ஆடுகள் உண்ணி பற்றி மெலிந்து வாடின. பிறகு நான் உண்ணிக்குப் பயப்படுவதில்லை.

உயர்தர ஆடுகளுக்கு இயற்கை பலம் குறைவென்றும், என் ஆடுகளுக்குப் பிடித்தவாறு நாட்டு ஆடுகளுக்கு உண்ணி பற்றுவதில்லை யென்றும் ஒருவர் என்னிடம் அடிக்கடி சொன்னார். அவரை யழைத்துக் கொண்டு, செம்மறியாடும் வெள்ளாடும் மிகுந்த ஒரு பட்டிக்குச் சென்றேன். அங்கு நாட்டு ஆடுகளும் உண்ணி செறிந்து வருந்துவதைக் கண்டோம். துளசிச் சாற்றையும் உப்பையும் கலந்து தேய்த்தால் உண்ணிகள் உதிர்ந்து விடும் என்று ஓர் இடையன் சொல்லவே

காலப் போக்கில் இது ஒரு மந்தையாகி விட்டது. மூன்று வருஷங்களாக இந்த மந்தையை வளர்த்த அனுபவத்தைக் கொண்டே இதை எழுதுகிறேன்.

* * *

ஆடுகள் ஐந்து மாதம் சினையிருந்து குட்டிப் போடும். வீட்டில் கட்டி, சுத்தமாக வைக்கப்பட்டு, தகுந்த தீனி தின்று வரும் கறவை ஆட்டுப் பாலுக்கு ஒருவித துர்நாற்றமும் இருக்காது. எவ்வளவோ முறை ஒரு கோப்பையில் ஆட்டுப் பாலையும் மற்றொன்றில் எருமைப் பாலையும் என் நண்பர்களுக்கு அளித்து வித்தியாசம் கண்டு பிடிக்கும்படி கேட்டிருக்கிறேன். அநேக முறை அவர்களுக்கு வித்தியாசம் தெரியவில்லை; அப்படித் தெரிந்தாலும் ஆட்டுப் பால் வேகமற்றுச் சுவையாக இருப்பதை அவர்களாகவே சொல்லியிருக்கிறார்கள்.

நிலக்கடலைப் பிண்ணாக்கு, கொள்ளு, கம்பு இவைகளை ஊறவைத்தும், கடலைப் பொட்டுவையும், உலர்ந்த அவரைக் கொடி, கருவேலங்காய் முதலியவைகளையும் ஆடுகளுக்குக் கொடுக்கலாம். வடித்த கஞ்சி, பழத்தோல், காய்கறித்தோல் இவைகளையும் தீனியுடன் சேர்க்கலாம். நானிருந்த ஊரில் அரிசித் தவிடு கிடையாது. கிடைத்தபொழுது வெந்நீருடன் கலந்து ஒரு தொட்டியில் கொட்டிக் காட்டினால் ஆடுகள் ஆவலுடன் குடிக்கும். தீனியுடன் சிறிது உப்பும் கலக்க வேண்டும். கறக்கும் ஆடுகளுக்கு மேற்கண்ட தீனியைப் போது மட்டும் கொடுக்காவிட்டால் பால் குன்றிவிடும். இலையாகாரம் எல்லா ஆடுகளுக்கும் அவசியம். சுத்தமான ஆகாரத்தைக் கண்டிப்பாக வேளா வேளைக்கு உதவுவதே ஆட்டு வளர்ப்புக்கு மிகவும் முக்கியமானது.

தீனி சுத்தமாயில்லாவிட்டால் ஆடு அதைச் சரியாகத் தின்னாது. சற்று மண் பட்ட உணவை எட்டியும் பாராது. காலையிலும் மாலையிலும் கறக்கும் வேளையில் கொள்ளு, கம்பு முதலிய தானிய ஆகாரத்தைக் கொடுக்க வேண்டும். இத்துடன் கடலைப்பொட்டு, நொய், தவிடு கலக்கலாம். மத்தியானம் பிண்ணாக்கும் நீரும் காட்டவேண்டும். தினமும் மூன்று வேளையாவது தழைகளைக் கொடுக்கவேண்டும். எப்பொழுதும் குடிக்கத் தண்ணீர் இருக்க வேண்டும். கறவை ஆடுகளைக் கொட்டிலில் கட்டி, தினமும் நன்கு தேய்த்து, குளிப்பாட்டி, தகுந்த தீனியைக் கொடுத்து வந்தால் பால் மூலம் பலன் பெறலாம். பால் கறக்குமுன் மடியைக் கழுவ வேண்டும். பாலை உடனே வடிகட்டவேண்டும். ஆட்டுப் பால் தயிருக்கோ, வெண்ணெய்க்கோ பசு எருமைப் பாலைப்போல் உதவாது. ஆனால், பாலாக எப்படி வேண்டுமென்றாலும் உபயோகப்படுத்திக் கொள்ளலாம். மற்றப் பாலைவிட இதுவே மேன்மையானது.

* * *

ஆடு வளர்ப்பது அவ்வளவு இலகுவான காரியமில்லை. முதலில், எவரும் சுலபமாகச் செய்யக் கூடியதாகக் காணலாம். யோசித்துப் பார்த்தால்கூட சுலபமான காரியமாகவே தோன்றலாம். ஆனால், அனுபவத்தில் பல தடைகள் தென்படும். அதிலும் நான் வளர்த்த அந்த ஊரில் தென்படும். அது ஒரு காடு அடர்ந்த இடம். மர நெருக்கமுள்ள அப்படிப்பட்ட இடங்களில்தான் ஆடுகளுக்கு வேண்டிய தழைத் தீனி குறைவின்றிக் கிடைக்கும். இருந்தாலும் உயர்தரக் கறவை ஆடுகளைத் தினமும் தூரச் சென்று மேய்த்து வந்தால் அவை சரியாகப் பால் கொடுப்பதில்லை. கொட்டிலிலே கட்டி, தழைகளைத் தருவித்து ஆடுகளுக்குப் போடுவதே சரியான முறை. அந்த ஊரிலோ எவரும் இம்முறையைக் கேட்டதில்லை. என்ன கூலி தந்தாலும் வேலை தவறாது தழை கொண்டு வந்து தருவதற்கு ஆள் கிடைக்கவில்லை. முதல் முதலில், என்னிடம் ஐந்து ஆடுகள் இருந்தபொழுது ஓர் இடைப் பையனை ஏற்படுத்தியிருந்தேன். பிறகு ஆடுகள் அதிகரித்தபின், இன்னொரு ஆள் உதவியாக நியமித்தும் அவைகளுக்கு வேண்டிய தழைகள் கிடைக்கவில்லை.

நான் ஆடுவளர்க்கத் தொடங்கி ஒரு வருஷத்துக்குள் எல்லா இடையர்களும்





# ஆட்டுப்பால்

மா. கிருஷ்ணன்

நான் குடியிருந்த ஊரில் கோடை காலத்தில் பால் கிடைப்பதரிது. சொற்ப அந்தஸ்துடையவரும் வீட்டில் எருமை கட்டியே பால் தயிர் தட்டாது பார்த்துக் கொள்வார்கள். ஒரு நல்ல பசுவையோ எருமையையோ வாங்கும்படி என் நண்பர்கள் பலரும் எனக்குப் போதித்தார்கள். ஆனால் அப்பொழுது எருமை அகப்படவில்லை. கிழப்பட்ட எருமைகளே விற்பனைக்கு வந்தன. அவை கறப்பதற்கு அநேக மாதங்கள் செல்லுமாதலால் நான் எருமை வாங்கவில்லை. எனக்கு அந்த ஊர்ப் பசுக்களைக் கண்டாலே பிடிக்கவில்லை. அவை கறவைப் பசுக்களல்ல: அவற்றுள் மிகவும் சிறந்தனவும் நாளுக்கு ஒன்று அல்லது ஒன்றரைச் சேருக்குமேல் கறப்பதில்லை. (சேர் என்றால் பட்டணம் படிக்கு சுமார் முக்கால் படி) பதினெட்டு மைல்களுக்கப்பாலுள்ள கிராமத்தில் ஒரு நல்ல சிவலைப்பசு இருப்பதாகவும், மறு மாதம் தாம் அங்கு சென்றால் எனக்காக அதை வாங்கி வருவதாகவும், அதுமட்டும் பொறுத்திருக்க வேண்டுமென்றும் என் சிநேகிதர் ஒருவர் என்னிடம் சொன்னார். இப்படிப் பொறுத்திருக்கையில், பத்து ரூபாய் கடனாக வாங்கிச் சென்ற ஒரு முகம்மதியர் தமக்கு இன்னும் ஐந்து ரூபாய் அவசரமாக வேண்டுமென்றும், கடனுக்குப் பதிலாகத் தம் அருமை வெள்ளாட்டை எனக்குத் தருவதாகவும் சொல்லி, அந்த ஆட்டையும் என்னிடம் கொண்டு வந்தார். அது ஒரு கிழ ஆடு. வெள்ளை வஸ்திரத்தில் இரும்புத் துருவின் கறை ஏறினாற்போல் அழுக்குச் சிவப்புக் கலந்த நிறம். மேலும் தன் கூரிய கொம்புகளால் கண்டவரை முட்டும் முரட்டு சுபாவமுடையது. இருந்தாலும், அதன் எஜமானனின் துர்த்திசையை உத்தேசித்து ஐந்து ரூபாய் கொடுத்து அந்தக் கிழ ஆட்டைப் பெற்றுக் கொண்டேன்.

அதுவே நான் முதல் முதலாக வளர்த்த ஆடு. காலையில் கால் சேரும். இரவில் சற்றுக் குறைவாகவும் கறக்கும். அதன் பால் உப்புக் கரிக்கும். நாய்க் குட்டிக்கு அதை விட்டு விடுவோம். வீட்டிற்கு வந்த நாளாய் தினமும் கறவை குன்றி, இரண்டு மாதங்களுக்குள் பால் முழுதும் வற்றி விட்டது. 'சைதானி' என்ற பெயர் கொண்ட அந்த ஆடு எவருக்கும் பயப்படாது. சற்று அஜாக்கிரதையாக இருந்தால் தோட்டச் சுவரை ஏறிக் குதித்து அண்டை வீடுகளிலுள்ள பூச் செடிகளையும் காய்கறிப் பாத்திகளையும் அழித்து விடும். சமையற்கட்டுக்குள் பாய்ந்து கிடைத்ததைத் தின்று விடும். இரவில் எங்கேனும் எவரேனும் அசைந்தால், உடனே விழித்துத் தன் பாழ்த்த குரலில் கதறும். இன்னமும் அந்த 'சைதானி'யை நினைத்தால் எனக்கு ஆத்திரமும் சிரிப்பும் கலந்து வருகின்றன. ஆனால், அதன் மூலமாகத்தான் வெள்ளாடு வளர்க்கும் முறையையும் மேன்மையையும் நான் தெரிந்து கொண்டேன்.

என் நண்பர் சொன்ன சிவலைப் பசு அதன் கிராமத்திலேயே இருந்து விட்டது. பாலுக்காக, தினமும் ஒன்றரைச் சேர் தரும் பசுவை விட, நல்ல கறவை ஆடுகள் வாங்குவது உசிதம் என்று எனக்குத் தோன்றியது. அந்த ஊரில் ஆட்டுப் பால் உபயோகிப்பவர் மிகச் சிலரே. உயர்தர ஆடு அக்கம் பக்கத்திலும் கிடையாது. அநேக இடங்களில் விசாரித்து, முடிவில் காட்பாடியிலிருந்து இரண்டு கறவை ஆடுகளைத் தருவித்தேன். அவைகளுடன் அதே ஜாதி கடாக்குட்டியொன்றையும் வாங்கினேன். அவை மூன்றும் சூரத் தேசத்தைச் சேர்ந்த வெள்ளைக் கறவை ஜாதி. குட்டையாகவும், மெல்லியனவாகவும், கொம்பற்றனவாயும் இருந்தன. கடாக்குட்டி சுத்த வெள்ளை நிறம். அதற்கு மட்டும் நீண்ட தாடியுண்டு. பெண் ஆடுகள் கருப்புக் கோடு கட்டிய வெள்ளை. அவைகளிரண்டும் மூன்று மாதம் சினையாக இருந்தன. இவைகளுடன், நான் நீண்டலைந்து வாங்கின இரண்டு நாட்டு ஆடுகளையும் சேர்த்து வளர்த்தேன்.

வடக்கே தென்காசி என்று புகழ்பெற்ற இடம் காசி. அந்தப் புண்ணிய க்ஷேத்திரத்துக்குச் சென்று வைதிக ஹிந்துக்கள் பலர் தங்கள் மூதாதையருக்குச் சிராத்தம் செய்து விட்டு வருவார்கள். முன்னெல்லாம் பஸ் போக்குவரத்து அவ்வளவு சரியாக இல்லாததால், அங்கு செல்பவர்கள் திரும்பிவர நாலைந்து நாட்களாவது ஆகும். இதனால் அங்கிருந்த புரோகிதர்களுக்கு நிறைய வரும்படி கிடைத்து வந்தது. இப்பொழுது சர்க்கார் பஸ்கள் குறிப்பிட்ட நேரத்தில் அங்கு சென்று வருவதால், யாத்திரீகர்கள் ஒரே நாளில், தங்கள் சடங்குகளை முடித்துக் கொண்டு கிளம்பி விடுகிறார்கள். இதன் காரணமாகத் தங்களுடைய வரும்படி மிகவும் குறைந்து விட்டது என்று அங்குள்ள புரோகிதர்கள் புகார் செய்திருக்கிறார்கள்.

இந்தச் செய்தியைப் படிக்கும்போது சென்னை சர்க்காரின் தீர்க்கதரிசனத்தை யாராலும் பாராட்டாமலிருக்க முடியாது. ஏனெனில், குறிப்பிட்ட நேரங்களில் பஸ்களை விட்டு மேற்கூறியது போன்ற புகார்களுக்கு அவர்கள் இன்றுவரை இடம் கொடுக்கவில்லையல்லவா?

★

அம்பாலாவில் கூடிய வட இந்திய ஜோதிடர் மகாநாட்டில், ஒவ்வொரு மாகாணத்திலும் ஒரு ஜோசியரை சட்டசபை மெம்பராகத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்று தீர்மானம் நிறைவேறியது.

இப்பொழுதுள்ள சட்டசபை மெம்பர்கள் எல்லோருமே ஜோசியம் சொல்லிக் கொண்டுதானே இருக்கிறார்கள்? "ஜனங்களுக்கு இன்னும் இந்த வருஷத்தில் நல்ல காலம் பிறக்கப்போகிறது. ஆறு வருஷத்தில் சொர்க்கபோகம் கிடைக்கப்போகிறது" என்று சட்டசபை மெம்பர்கள் ஜோசியம் சொல்லிக்கொண்டிருக்கும்போது, தனியாக வேறு ஜோசியரை நியமிக்க வேண்டுமா?

"எல்லாவிதமான விஷயங்களுக்கும் மாற்று தெரிவிக்கும் அருமையான ஓலைச் சுவடியொன்றைப் புத்தகமாகப் பிரசுரிக்கச் சென்னை சர்க்கார் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்." —சென்னைச் செய்தி.

விஷம்போல் ஏறிக்கொண்டிருக்கும் விலைக்கு அந்தப் புத்தகத்தில் மாற்று ஏதேனும் இருக்குமா என்று அறிய விரும்புகிறோம்.

★

"அரிசி, கோதுமை முதலிய ரேஷன் பொருள்களை திறந்த விற்பனை செய்ய டி. யு. வி. எஸ். ஏற்பாடு செய்துவருகிறது."

—செய்தி.

ரேஷன் பொருள்களின் விற்பனையையே நிறுத்தாமல் பொருள்களை திறந்துபோட ஏற்பாடு செய்து வருவது மெச்சத் தகுந்த விஷயந்தான்!

★

"நேற்று ஆரணியில் ஒரு ஷராப்புக் கடையில் திருப்பதி போலீஸ் இன்ஸ்பெக்டரும், செய்யாறு போலீஸ் அதிகாரியும் சேர்ந்து சுமார் மூன்று மணிநேரம் சோதனை போட்டு சுமார் இரண்டாயிரம் ரவுடன் கலங்களைக் கைப்பற்றினர்." —ஆரணிச் செய்தி.

கைப்பற்றிய கலங்களும் சுமாரானதாகத் தான் இருந்திருக்க வேண்டும் என்கிறான் சுலைமான்.

★

"ஜனாப் லியாகத் அலிகான் அதிக நேரம் தூங்கிவிட்டதால், அமெரிக்கக் கடற்படை காசகாரி மரியாதைக்காகப் போடவிருந்த பத்தொன்பது குண்டுகளை இழந்தார்."

—அமெரிக்கச் செய்தி.

மரியாதைக்காகப் போடவிருந்த குண்டுகளைத் தூக்கத்திலிருந்து எழுப்புவதற்காகப் போட்டிருக்கலாமே!

நாகர் கோவிலை அடுத்துள்ள மருங்கூர்-ரவிபுதூர் கிராமத்தில் ஒரு வாசகசாலையை இருபத்தைந்து வருஷத்துக்கு மேலாக இடைவிடாமல் நடத்திவந்து சென்ற மேமீ 7உ வெள்ளி விழாவும் நடத்தினார்கள். கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் முன்னின்று நடத்தியபடியால் இந்த வாசகசாலை வெள்ளிவிழா இணையிலாத வைபவங்களுடன் நடந்தேறியது. இந்த விழாவை யொட்டி நாகர்கோவிலுக்கு விஜயம் செய்திருந்த ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களும் கனம் எம். பக்தவத்ஸலம் அவர்களும் நாகர்கோவிலில் கலைவாணர் திருப்பணியினால் எழுந்த மகாத்மா காந்தி ஞாபகார்த்த ஸ்தூபியைப் பார்த்து மகிழ்ந்தார்கள். ஞாபகார்த்த ஸ்தூபியின் அடிப் பகுதியில் மகாத்மாவின் அமுத மொழிகள் கல்லில் பொறிக்கப்பட்டு விளங்குவதுடன், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள் இயற்றிய பாடல் ஒன்றும் பொறித்திருக்கிறது. அந்தப் பாடலை ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் உற்சாகத்துடன் படித்துக் கொண்டிருக்கும் காட்சியை எதிரில் உள்ள படத்தில் காணலாம்.

# அக்கப்போர்

"போலீஸ் காவலிலிருந்து தப்பி ஓடிய ஹைதராபாத் மாஜி பிரதமர் லேக் அலியைப் பாகிஸ்தானில் தொழில் ஆலோசகராகப் பாகிஸ்தான் சர்க்கார் நியமித்திருக்கிறார்கள்."

—செய்தி.

சிறையிலிருந்து தப்பியோடும் தொழில் பாகிஸ்தானின் முக்கிய தொழிலாக ஆகி விடப் போகிறது!

★

சில புண்ணியவான்கள் நெய்யுடன் வனஸ்பதியைக் கலந்து விற்கிறார்களல்லவா? அதைத் தடுப்பதற்காக வனஸ்பதியில் ஏதாவது ஒரு வர்ணத்தைக் கலந்துவிடலாம் என்று பம்பாய் சர்க்கார் இந்திய சர்க்காருக்கு யோசனை கூறியிருக்கிறார்களாம்.

ஏது. இந்தப் பம்பாய் சர்க்கார் சும்மா இருக்கமாட்டார்கள் போலிருக்கிறதே! அப்புறம் பாலில் தண்ணீரைக் கலக்காமலிருப்பதற்காகத் தண்ணீரில் ஏதாவது ஒரு வர்ணத்தைக் கலந்து விடலாம் என்றுகூட அவர்கள் யோசனை சொல்வார்கள் போலிருக்கிறதே!

★

"முநீக்குளம் மைதானத்தில் ஸ்ரீ டி. பிரகாசம் இரண்டுமணி நேரம் பேசினர்."

—செய்தி.

பேசினரா, அல்லது கண்ணீர் வடித்தாரா?

★

"ஆயிரம் ரூபாய் பெறுமானமுள்ள பவுண்டன் பேனா தங்க நிப்புகளைப் புதுச்சேரியிலிருந்து திருட்டுத்தனமாகக் கொண்டு வந்ததற்காக ஒருவர் செங்கற்பட்டில் கைது செய்யப்பட்டார்."

—பத்திரிகைச் செய்தி.

பீரங்கி, அணுகுண்டு, ஜலவாயு குண்டு எல்லாவற்றையும் விடப் பேனா முனை பயங்கரமான ஆயுதம் என்று இப்போதாவது தெரிகிறதல்லவா?

★

"கோவையில் நடந்த தமிழ்த் திருவிழாவில் சென்னை மாகாண முதன் மந்திரி, நவீனக் கலைகளைத் தமிழில் கொண்டுவர வேண்டும் என்று வற்புறுத்தினர்."

—கோவைச் செய்தி.

எழுத்தாளர்களுக்கு இருக்கும் கவலை போதாதென்று இன்னும் நவீனக் கவலைகளை உண்டு பண்ணுகிறார்களே என்று கவலைப் படுகிறாள் ஒரு எழுத்தாளரின் சகதர்மிணி.

"உணவு இலாகா இதுவரை பலரது கௌரவத்துக்கு யமனாக இருந்திருக்கிறது. ஆனால் என் கௌரவம் போகும் நிலை ஏற்பட்டால் அதற்கு முன் என் உயிர் போவதையே விரும்புவேன்."

—உணவு மந்திரி ஸ்ரீ முன்ஷி

வேண்டாம், வேண்டாம். ஒருவர் ரேஷன் மிச்சப்படுவதால் உணவு நிலைமை சீர்திருந்தி விடுமா?

★

"நாம் தமிழ்ப் பாஷையைத் தாய் பாஷை என்று சொல்லுவதின் காரணத்தை மதித்து உணரவேண்டும்."

—ஒரு பிரசங்கி.

"வீட்டில் அம்மா பேசுகிறபடியினால்தான் அதற்குத் தாய் பாஷை என்று பெயர் வைத்திருக்க வேண்டும் என்னும் எனது அபிப்பிராயம் சரியில்லையா?" என்று கேட்கிறான் அம்பிப் பயல்.

★

உடுமலைப்பேட்டையில் தண்ணீரை ரேஷன் செய்யவேண்டுமென்ற தீர்மானம் அவ்வூர் நகரசபையில் நிறைவேறியது. ஐந்து பேர்களுள்ள குடும்பத்துக்கு ஒரு குடமும், அதற்கு அதிகமான பேர்களுள்ள குடும்பத்துக்கு இரண்டு குடமும் அளிக்க முடிவு செய்திருக்கிறார்கள்.

தங்களுக்கு விசேஷ சலுகைகள் அளிக்க வேண்டுமென்று உடுமலைப்பேட்டை பால்காரர்கள் கேட்பார்களா?

★

'நாம் பிறந்த தேசத்திற்குக் கடன் பட்டுள்ளதைக் கொடுக்காவிடில் நம்முடைய கடமையைச் செய்யத் தவறியவன் என்று நாம் உணர்வதாக' ஸ்ரீ சேத் ராமகிருஷ்ண டால்மியா கூறினர்.

—பத்திரிகைச் செய்தி.

முதலில், யோக்யமாக வருமான வரியைக் கட்டிவிட்டு அப்புறம் கடனைத் திருப்பிக் கொடுத்தால் உண்மையில் கடமையை நிறைவேற்றியதாகும்.

★

"நான்கு சிறுவர்கள் தங்களைத் தாக்க வந்த ஒரு காடையை எதிர்த்துக் கொன்று விட்டார்கள்."

—குற்றாலம் செய்தி.

ஒருவேளை அந்தச் சிறுவர்கள் சும்மா காடை விடுகிறார்களோ, என்னமோ!

மாய ஏரி இருக்கிறது. அந்த ஏரி இருபதுமைல் நீளமும், எட்டுமைல் அகலமும் இருக்கிறது. அவ்வளவு பெரிய ஏரியாக இருந்தும்கூட சிற்சில வருஷங்களுக்கு ஒரு தடவை அது அடியோடு வற்றிவிடுகிறது. மறுபடியும் திடீரென்று எங்கிருந்தோ ஏரி நிறையத் தண்ணீர் வந்து விடுகிறது. இவ்வாறு ஏரி திடீரென்று நிரம்புவதற்கும் வற்றிப் போவதற்கும் காரணம் என்ன என்பதை உலக விஞ்ஞானிகளும் ஆராய்ச்சியாளர்களும் அறிந்து சொல்ல முடியாமல் திகைக்கிறார்கள்.

அந்த ஏரியின் பூமி மட்டத்துக்குக் கீழே கண்ணுக்குப் புலப்படாத பெரிய ஆறு ஓடுவதாகவும், சில வருஷங்களுக்கு ஒரு தடவை அந்த ஆறு வற்றிப் போவதாகவும், ஆற்றின் ஓட்டம் குறைந்தால் ஏரித் தண்ணீர் வற்றுவதாகவும், அந்த ஆற்றில் பூர்ணப் பிரவாகம் ஏற்பட்டால் ஏரி திடீரென்று தானாக நிறைந்து விடுவதாகவும் சிலர் கூறுகிறார்கள்.

★

இயற்கைச் செல்வத்துக்கும் ஆஸ்திரேலியா பெயர் போனது. உலகத்திலேயே பெரிய தங்கச் சுரங்கங்களில் ஒன்று ஆஸ்திரேலியாவில் இருக்கிறது. தங்கத்தைத் தவிர வெள்ளி, ஈயம், தாமிரம், இரும்பு, நிலக்கரி, யுரேனியம் முதலியவைகளும் அங்கு கிடைக்கின்றன.

ஆஸ்திரேலியாவில் பெரிய காடுகள் ஏராளமாக இருக்கின்றன. யூகலிப்டஸ் மரங்களுக்கு ஆஸ்திரேலியாக் கண்டம் பிரசித்தி பெற்றது.

ஆஸ்திரேலியாவில் உள்ள பதினைந்து கோடி ஆடுகள் அந்தத் தேசத்தின் வற்றாத செல்வத்துக்குக் காரணமாக இருந்து வருகின்றன. அவைகளிலிருந்து ஆஸ்திரேலியா பிரதி வருஷமும் சுமார் அறு கோடி ரூபாய் பெறுமானம் உள்ள கம்பளியை வெளிநாடுகளுக்கு விற்று வருகிறது. ஆஸ்திரேலியாவிலுள்ள தங்கச் சுரங்கங்களைக் காட்டிலும் ஆடுகளின் மூலம் தான் அந்தேசத்துக்கு அதிகச் செல்வம் கிடைக்கிறது என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்!

அங்கு கோடிக் கணக்கில் அன்னாசி, ஆரஞ்சு, ஆப்பிள் பழங்களும் வாழைப் பழங்களும் உற்பத்தியாகின்றன. இவற்றைத் தவிர அங்கு ஐம்பது லட்சம் பசுக்கள் இருப்பதால், அந்தேசம் முழுதும் பாலும் வெண்ணெயும் வழிந்தோடுகிறது எனலாம்!



விநோதக் கரடி

ஆஸ்திரேலியாவில் இருப்பதுபோல் பதினாயிரக் கணக்கான சதுர மைல் விஸ்தீர்ணமுள்ள ஆட்டுப் பண்ணைகளும் மாட்டுப் பண்ணைகளும் பலவிதமான பழத் தோட்டங்களும் உலகிலே வேறு எந்த நாட்டிலும் இல்லை. அதனால் உலகிலுள்ள பல தேசங்களுக்கும் ஆஸ்திரேலியா பால் டின்களும் பழங்கள் அடங்கிய டின்களும் ஏராளமாக ஏற்றுமதி செய்ய முடிகிறது.

ஆஸ்திரேலியாவில் கோதுமை விவசாயம் தான் முக்கியமானது. அங்கு ஒன்றரைக் கோடி ஏக்கர்களுக்குமேல் கோதுமை விளைவதால், அது உலக நாடுகளுக்கெல்லாம் கோதுமை ஏற்றுமதி செய்யக்கூடிய நிலையில் இருக்கிறது. அந்த நாட்டில் ஏராளமான சர்க்கரையும் உற்பத்தியாகிறது.

ஆஸ்திரேலியாவில் வேலையில்லாமல் எவரும் கஷ்டப்படும்படி நேருவதில்லை. வயதுவந்த யாராயினும் அவர் நோய்வாய்ப்பட்டாலோ அல்லது வேலையை இழந்தாலோ அவருக்குச் சர்க்கார் பிரதி வாரமும் நாலு டாலரும் (சுமார் இருபது ரூபாய்), அவரது மனைவிக்கு மூன்று டாலரும், பதினாறு வயதுக்கு உட்பட்ட ஒவ்வொரு குழந்தைக்கும் எழுபத்தைந்து சென்டும் உதவித் தொகை கொடுத்துப் பராமரிக்கிறார்கள்.

மற்றும் ஆஸ்திரேலியாவில் பிறக்கும் ஒவ்வொரு குழந்தையின் தாய்க்கும் சர்க்கார் மாதா மாதம் ஐம்பது டாலர் கொடுக்கிறார்கள். குழந்தைக்குப் பதினாறு வயது நிரம்பும் வரையில் அவ்வாறு அந்தக் குழந்தையின் தாய்க்கு உதவித் தொகை கொடுக்கப்படுகிறது.

அதிகச் செல்வம் உள்ளவர்களுக்கு அதிக வரி விதிப்பதே ஆஸ்திரேலியா சர்க்காரின் கொள்கை. அந்த வரித் தொகையைக் கொண்டே அவர்கள் மேலே குறிப்பிட்ட விதம் ஏழை மக்களுக்கு உதவியளிக்க முடிகிறது.

ஆஸ்திரேலியாவில் சமஷ்டி அரசியல் அமுலில் இருந்து வருகிறது. சமஷ்டி பார்லிமெண்டைத் தவிர ஒவ்வொரு மாகாணத்திலும் பார்லிமெண்டும் மந்திரி சபையும் இருக்கின்றன. (தொடரும்)

அவர்கள் இடைவிடாது கிளர்ச்சி செய்ததின் மீது, பிரிட்டிஷ் கைதிகளை ஆஸ்திரேலியாவுக்குக் கொண்டு போகும் வழக்கம் 1867-ல் அறவே நிறுத்தப் பட்டது.

இவ்வாறாக, ஆசியாவை அடுத்துள்ள ஆஸ்திரேலியாவில் ஆசியர்களுக்கு இடம் இராமல் போயிற்று. பிரிட்டிஷ் கைதிகளின் காலனியாக இருந்த அந்தக் கண்டம் ஆங்கிலேயர் மயமாகியது!

போர்ச்சுகீசியர்கள் 1542-ம் வருஷம் கிழக்கு இந்தியத் தீவுகளுக்கு அப்பால் ஒரு பிரம்மாண்டமான தீவு இருக்கிறது என்று கண்டு பிடித்தார்களாம். அந்தத் தீவுதான் ஆஸ்திரேலியா. ஆஸ்திரேலியா உலகத்திலுள்ள கண்டங்களில் மிகச் சிறியது; ஆனால் உலகத்திலுள்ள தீவுகளில் மிகப் பெரியது.

ஆஸ்திரேலியா ஒரு கண்டமாக இருந்தும்கூட அதன் பூர்வ குடிகளான சுதேசிகளின் மொத்தத் தொகை ஐம்பதாயிரம் தான். அவர்கள் நாகரிக மற்று மிகவும் பிற்போக்கான நிலையில் இருப்பதால், அங்கு சுதந்திரப் புரட்சி என்ற பேச்சுக்கு இந்த ஜன்மத்தில் இடமில்லை என்றே தோன்றுகிறது!

★

ஆஸ்திரேலியாவின் சரித்திர விசித்திரத்தைப் போல அங்கு சிருஷ்டி விசித்திரங்களையும் காணலாம். ஆஸ்திரேலியாவிலுள்ள மரங்கள், புஷ்பங்கள், மிருகங்கள் எல்லாம் விசித்திரமானவை. அங்கு வளரும் யூகலிப்டஸ் மரங்களிலிருந்து இலை உதிருவதே இல்லை. எனவே மரங்கள் வருஷம் முழுவதும் பச்சைப் பசேலென்று பசுமையாகவே இருந்து வருகின்றன. ஆனால் அவைகளிலிருந்து வருஷத்துக்கு ஒரு தடவை பட்டைகள் மாத்திரம் உதிர்ந்து பிறகு முளைத்து விடுகின்றன! அந்தக் கண்டத்தில் பூக்கும் சில புஷ்பங்கள் பல வருஷங்கள் வரையில் வாடாமல் இருக்கின்றனவாம்!

கங்காரு, கோலா என்ற விநோதக் கரடி, குரைக்கத் தெரியாத மூர்க்க நாய், பிளாடிபஸ் என்ற அபூர்வ ஜந்து இவை ஆஸ்திரேலியாவின் விசேஷ மிருகங்கள். அங்குள்ள விநோதக் கரடி சாதாரணமாக மற்றத் தேசங்களிலுள்ள கரடியைப்போல இருப்பினும், உருவத்தில் மிக மிகச் சிறியது. மகா சாதுவானது! ஆஸ்திரேலியாவில் வளரும் யூகலிப்டஸ் மரங்களின் இலைகள்தான் அந்தக் கரடிக்கு ஆகாரம். அந்த ஆகாரம் இல்லா விட்டால் மேற்படி கரடிகள் உயிர் வாழ முடியாது!

ஆஸ்திரேலியாவில் உலகத்திலே வேறெங்கும் இராத எழுநூறு வகைப் பட்சிகள் இருக்கின்றன. அவற்றில் எமு என்ற ஒரு வகைப் பட்சி பறப்பதில்லை; ஆனால் பறப்பதைப்போல மிகவும் வேகமாகத் தரையில் ஓடுகின்றன. மற்றொரு வகைப் பட்சி மனிதனைப்போல் சிரித்துப் பார்ப்பவர்களைத் திடுக்கிடச் செய்யுமாம்! மற்றும் அநேகவிதமான பட்சிகளைப் போலவும் பல்வேறு மனிதர்களைப் போலவும் குரல் கொடுக்குமாம்!

மத்திய ஆஸ்திரேலியா முழுதும் மரங்களே இராத, மழையே பெய்யாத வறண்டப் பிரதேசமாக இருக்கின்றது. எனினும் அந்தப் பிரதேசம் முழுவதும் பூமி மட்டத்துக்குக் கீழே ஊற்று இருப்பதால் பூமியில் குழாய்களை இறக்கித் தண்ணீர் வசதி செய்து கொள்ளுகிறார்கள். சிற் சில இடங்களில் தண்ணீர் வசதி கிடைப்பதற்காக ஆறாயிரம் அடிக்குக் கீழே குழாய்களை இறக்கியிருக்கிறார்கள்!

ஆஸ்திரேலியா மாகாணங்களில் ஒன்றான குவீன்ஸ்லந்தின் கடற்கரையோரமாக ஆயிரத்து இருநூறு மைல் தூரத்துக்குக் கண்ணுக்குத் தெரியாத பாறைகள் தண்ணீர் மட்டத்துக்குக் கீழே இருப்பதால், அவைகள் எண்ணிக்கையற்ற கப்பல்களைத் தகர்த்துப் பலி கொண்டிருக்கின்றன.

ஆஸ்திரேலியாவின் தலை நகரான கான்பெர்ராவுக்கு அருகில் ஜார்ஜ் என்ற





# யுத்த கேந்திரம்

ஜெயமணி

## 2. ஆஸ்திரேலியா

சிருஷ்டியில் எத்தனை எத்தனையோ விசித்திரங்கள் இருப்பது போலச் சரித்திரத்திலும் எத்தனை எத்தனையோ விசித்திர சம்பவங்கள் காணப்படுகின்றன. உதாரணமாக இதைப் பாருங்கள் : அமெரிக்காவில் வெகு காலத்துக்கு முன் சுதந்திர யுத்தம் நடந்தது அல்லவா? அந்த யுத்தம் அமெரிக்காவுக்கு அருகிலுள்ள பிரதேசங்களின் விதியைக்கூட மாற்றவில்லை. ஆனால் ஏழாயிரம் மைல்களுக்கு அப்பால் ஒரு மூலையில் உள்ள ஆஸ்திரேலியாக் கண்டத்தின் விதியை அடியோடு மாற்றி விட்டது!

பிரிட்டிஷ் சர்க்கார் இந்தியாவை ஆட்சி புரிந்த போது இந்தியக் கைதிகளை அந்தமான் தீவுக்கு அனுப்பி வந்ததைப் போல அந்தக் காலத்தில் பிரிட்டிஷார் இங்கிலாந்திலுள்ள கைதிகளைத் தங்களுடைய ஆதிக்கத்தில் இருந்த அமெரிக்கக் காலனிகளுக்கு அனுப்பி வந்தார்கள். சுதந்திர யுத்தத்தில் அமெரிக்கர்கள் வெற்றி பெற்றதால், பிரிட்டன் அந்தக் காலனிகளை இழக்க நேர்ந்தது. அதே சமயம் அமெரிக்காவிலிருந்த பிரிட்டிஷ் கைதிகளை வைப்பதற்கு வேறு ஏதாவது இடம் தேட வேண்டிய அவசியம் பிரிட்டிஷாருக்கு ஏற்பட்டது. அப்போது வெகு தொலைவிலுள்ள ஆஸ்திரேலியாக் கண்டம் ஆங்கிலேயர்களின் ஆதிக்கத்துக்கு உள்ளாகியிருந்ததால், அமெரிக்காவிலிருந்த பிரிட்டிஷ் கைதிகளை அங்கு கொண்டு போய்ச் சேர்ப்பதென்று முடிவு செய்தார்கள்.

எனவே, ஜார்ஜ் வாஷிங்டன் சுதந்திர அமெரிக்காவின் அரசியல் திட்டத்தை நிர்ணயிப்பதற்காகக் கூடிய மகாசபையில் அக்கிராசனம் வகிப்பதற்காக 1787 மே மாதம் 13-ம் தேதி பிலடெல்பியா நகருக்குள் பிரவேசித்த அதே சமயத்திலே, பிரிட்டிஷ் இராணுவத் தலைவர் காப்டன் ஆர்தர் பிலிப் அமெரிக்காவிலிருந்த பிரிட்டிஷ் கைதிகளுடன் கப்பலில் ஆஸ்திரேலியாவுக்குப் பிரயாணமானார்!

அதிலிருந்து மேலும் மேலும் ஆஸ்திரேலியாவுக்குப் பிரிட்டிஷ் கைதிகள் கொண்டு போகப் பட்டார்கள். பிறகு ஆஸ்திரேலியாவில் ஏராளமான தங்கச் சுரங்கங்கள் கண்டு பிடிக்கப்பட்டதால் கைதிகள் அல்லாதாரும் ஈசல்களைப் போல் லட்சக் கணக்கில் அங்கு போய்க் குடி ஏறினார்கள். அங்கு சென்ற கைதிகள் அல்லாதாரையும் கைதிகள் என்றே உலகம் கருத ஆரம்பித்ததால்,

பெருக்குவதற்காகப் போட்டுள்ள திட்டங்களையும் பாயின்டுகளையும் தேசமெங்கும் வரவேற்கிறார்கள். நீயோவென்றால் 'சீக்கிரமே வீழ்க!' என்று சபிக்கிறாயே? உனக்கென்ன, ஏதாவது..." என்றார்.

"எனக்கு ஒன்றுமில்லை; தங்களுடைய பாயின்டுகளும் திட்டங்களும் சீக்கிரம் வீழ்ந்தால் நாம் உணவு உற்பத்தி விஷயத்தில் கோரிய பலனை அடைந்து விட்டோம் என்பதுதானே பொருள்? போதிய உணவு கிடைத்த பிறகு தங்கள் திட்டங்களும், பாயின்டுகளும் என்னத்திற்கு? அதற்காகத்தான் 'தங்களுடைய பாயின்டுகளும் திட்டங்களும் சீக்கிரம் வீழ்க!' என்று மனதார வாழ்த்தினேன்" என்று சொன்னேன்.

ஸ்ரீ முன்ஷி என் முதுகிலே ஒரு ஷொட்டு கொடுத்து "நீ யார்! ரொம்ப புத்திசாலியாயிருக்கிறாயே?" என்று அன்புடன் விசாரித்தார்.

"நான் தென்னாட்டிலிருந்து வருகிறேன். புத்திசாலிகளுக்குப் பெயர் போன தென்னிந்தியர்கள் பலர் இப்போது டில்லி அரசாங்க இலாகாக்களில் வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். இவர்களுடைய சேவையை நன்கு பயன்படுத்திக்கொண்டு பதிலுக்குத் தென்னாட்டுக்குக் கொஞ்சம் அதிகப்படி அரிசி அனுப்பி வையுங்கள். அப்படி அதிகப்படி அனுப்பும் அரிசிக்கு அதிகப்படி விலை பட்டும் கேட்காதீர்கள்!" என்று சொல்லி விட்டு வெளியே சென்றேன்.

"விடாக்கண்டரே! இன்னும் புறப்படவில்லையா?" என்று பழக்கப்பட்ட குரல் ஒன்று கேட்டது.

இப்படி என்னை அன்புடன் விசாரிக்கிறவர்கள் புது டில்லியில் வேறு யார் இருக்கிறார்கள்? பிரதம மந்திரி பண்டிட் ஜவாஹர்லால்தான் தம்முடைய ஜாகை வாசலில் நின்று என்னைக் கூப்பிட்டார்.

"இதோ புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன்" என்றேன்.

"இந்தோனேஷியாவுக்குத்தானே?..." என்று கேட்டார் பிரதம மந்திரி.

"இல்லை; சொந்த ஊருக்கு. தாங்கள் இந்தோனேஷ்யாவுக்குக் கப்பலில் புறப்பட்டுச் செல்லுங்கள். தாங்கள் ஜாகர்த்தாவை அடைவதற்குள் நான் 'மனோப்ளே'னில் அங்கு வந்து சேர்ந்து விடுகிறேன்" என்றேன்.

"ரொம்ப சரி; இங்கே யாரைப் பார்த்து விட்டுப் போகிறாய்?" என்று விசாரித்தார் பிரதம மந்திரி நேரு.

"யாரைப் பார்க்கிறது? இப்போதெல்லாம் டில்லி அரசாங்க மாளிகைக் கருகில் தவறி விழுந்தால் யாராவது புதிய மந்திரிகள் மீதுதானே விழ வேண்டியிருக்கிறது? புதிய மந்திரிகளில் முக்கியமான இரண்டு பேரைப் பார்த்துப் பேசிவிட்டுப் போகிறேன். பண்டிட்ஜி! நிதி மந்திரிப் பதவிக்குத் தாங்கள் சரியான ஆசாமியைத் தேர்ந்தெடுத்தது பற்றி எங்கெங்கும் மகிழ்ச்சி தெரிவிக்கிறார்கள். முதலில் அந்தப் பதவிக்கு உ. பி. முதல் மந்திரி ஸ்ரீ கோவிந்த வல்லபபந்தின் பெயர் அடிபட்டுக் கொண்டிருந்தது. பிறகு அவர் வருவதற்கில்லை என்று ஏற்பட்டதும் எங்கள் ராஜாஜியின் பெயர் பிரஸ்தாபிக்கப்பட்டது அவரும் இல்லை என்று ஏற்பட்டதும் எல்லோரும் தாங்கள் நிதி மந்திரியாக யாரைத் தேர்ந்தெடுக்கப் போகிறீர்கள் என்று கவலையுடன் கவனித்துக் கொண்டிருந்தார்கள். நிதி மந்திரிப் பதவிக்குச் சரியான ஆசாமி கிடைக்காமல் தாங்கள் திண்டாடப் போகிறீர்கள் என்றும் சிலர் எதிர்பார்த்தார்கள்" என்றேன்.

பண்டிட்ஜி சிரித்து விட்டு "விடாக்கண்டரே! இதிலெல்லாம் எனக்கு எப்போதுமே கஷ்டம் ஏற்படுவதில்லை. கஷ்டப்படுகிற பொறுப்பெல்லாம் தினப் பத்திரிகைக்காரர்களைச் சேர்ந்தது. அவர்கள் பாட்டுக்கு இன்னின்னார் நிதிமந்திரியாகக் கூடும் என்று சில பெயர்களை ஜாபிதா கொடுப்பார்கள். தினந்தினம் பெயர்களை மாற்றிக் கஷ்டப்படுவார்கள்" என்றார்.

இவ்வாறு நாங்கள் சம்பாஷித்துக் கொண்டிருக்கும் போதே நேருஜியின் ஜாகைக்கு வெளியில் ஒரு பெரும் கூட்டம் கையில் சாட்டையுடன் 'கொள், கொள்' என்று பயங்கரமாகக் கோஷமிட்டுக் கொண்டு வந்து சேர்ந்தது.

"யாரையாவது மந்திரியாக எடுத்துக் கொள்!" என்று ஏதோ கோஷ்டி வந்திருக்கிறதோ என்று நினைத்தேன்.

நேருஜி சிரித்துக் கொண்டே என்னைப் பார்த்து "இவர்களெல்லாம் டோங்கா வண்டிக்காரர்கள். இவர்கள் தங்களுடைய குதிரைகளுக்குக் கொள்ளு வேண்டும் என்று கேட்கிறார்கள். இப்போது டில்லியில் குதிரைகளுக்குப் போடும் கொள் ஆகாரத்துக்குப் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது" என்றார்.

"பாவம்! நல்ல பிரதம மந்திரிப் பதவி!" என்று நமது ஜவாஹர்லால் நேருவுக்காக இரக்கப்பட்டுக் கொண்டே சென்னை வந்து சேர்ந்தேன்.

# புது மந்திரிகள் பேட்டி

[ நமது விசேஷ விடாக்கண்ட நிருபர் ]

"தேஷ்முக் ஸார்! ரொம்ப சந்தோஷம்" என்று சொன்னேன்.

"ரொம்ப சந்தோஷம்; என்ன விசேஷம்? தாங்கள் யார்?" என்று கேட்டார், நமது புதிய நிதி மந்திரி ஸர் சிந்தாமணி துவாரகாநாத் தேஷ்முக்.

"நானா? என்ன அப்படிக் கேட்டு விட்டீர்களே? டில்லி வட்டாரத்தில் நான் ரொம்பப் பிரசித்தமாயிற்றே! என் பெயர் விடாக்கண்டன். யாரையும் எந்தச் சமயத்திலும் விடாப்பிடியாகப் பார்த்து பேட்டி காண்பதுதான் என்னுடைய ஜோலி!" என்றேன்.

"அப்படியா? ரொம்ப ரொம்ப சந்தோஷம்!" என்றார் சிந்தாமணி.

"என்னைத் தங்களுக்குத் தெரியாவிட்டாலும், தங்களை எனக்கு நன்கு தெரியும். தங்களிடம் எனக்கு மிகுந்த பரிச்சயமும் உண்டு. அடிக்கடி தாங்கள் என்னிடம் அகப்பட்டுக்கொண்டு தப்பிப் போயிருக்கிறீர்கள்!" என்றேன்.

"பெரிய கதைக்காரராய் இருப்பீர்போலிருக்கிறதே?" என்றார் தேஷ்முக்.

"அவசரப் படாதீர்கள்; தாங்கள் ரிஸர்வ் பாங்கி கவர்னராயிருக்கவில்லையா? அப்போதெல்லாம் கரன்ஸி நோட்டுகளில் தங்களுடைய கையெழுத்து வெளியாகுமல்லவா?"

"ஆமாம்!"

"அந்த சக்தி வாய்ந்த, தங்களுடைய இருக் கையெழுத்தைத் தாங்கிய பண நோட்டுகளில் சில எப்போதாவது அபூர்வமாக என்னிடமும் வந்து அகப்பட்டுக் கொள்ளும். தங்களுடைய அழகிய கையெழுத்தைத் தாங்கிய அந்த நோட்டுகளை நான் என்னிடமே வைத்துக்கொண்டு விட ஆசைப்படுவேன். ஆனாலும் நான் என்னதான் விடாப்பிடியாக வைத்துக் கொண்டிருந்தபோதிலும் தாங்கள் எப்படியோ என் கையிலிருந்து நழுவி வேறு கைக்கு மாறிவிடுவீர்கள். இப்படி ஒருவர் கையிலும் அகப்படாமல் நழுவிக் கொண்டிருந்த தாங்கள் எப்படியோ எங்கள் நேருஜியிடம் அகப்பட்டுக்கொண்டீர்கள் அல்லவா? தங்களை நிதி மந்திரியாகப் போட்ட நேருஜீ நீடூழி வாழட்டும். ரொம்ப சந்தோஷம்!" என்றேன்.

"இதில் நீர் சந்தோஷப் படுவதற்கு என்ன இருக்கிறது!" என்று கேட்டார் நிதி மந்திரி தேஷ்முக்.

"எனக்கில்லை; வர்த்தக சமூகத்தினர் யாவரும் தாங்கள் நியமனத்தைக் குறித்து ரொம்ப ரொம்ப சந்தோஷம் தெரிவித்திருக்கிறார்கள். வானத்தை வில்லாக வளைப்பீர்களாம். மணலைக் கயிறாகத் திரிப்பீர்களாம் தங்களுக்குப் பதினேழு பாஷைகள் தெரியுமாம். தாங்கள் ரொம்ப ரொம்ப புத்திசாலியாம். இப்படி ஒருவர் நிதி மந்திரியாக வந்தால் யார்தான் சந்தோஷப்படமாட்டார்கள்?" என்றேன் சந்தோஷத்துடன்.

தேஷ்முக் "விடாக்கண்டரே! பதவி மிகவும் கஷ்டமான பதவி. இந்தப் பதவியில் நல்ல பெயர் வாங்குவது சிரமம். எல்லா இலாகாக்களுக்கும் ஜீவாதாரமான இலாகா நிதி இலாகாதான். எல்லோரையும் திருப்தி செய்ய வேண்டுமானால் அதற்குக் கஜானாவில் நிதி நிறைய இருக்க வேண்டும். சட்டியில் இருந்தால் தானே அகப்பையில் வரும்? இருந்தாலும் என்னால் சாத்தியமானதை முயற்சித்துப் பார்க்கிறேன்" என்றார் சிந்தாமணி.

"ஒன்றும் சாத்தியப்படவில்லையென்றால் நிதி மந்திரிப் பதவியிலிருந்து நழுவி விடப் பார்க்காதீர்கள்" என்று கூறி விட்டுச் சட்டென்று ஸர் சிந்தாமணியின் முகத்தைப் பார்க்காமலேயே அந்த இடத்தை விட்டு நழுவிவிட்டேன்.

அடுத்தபடியாகப் புதிய உணவு மந்திரி ஸ்ரீ கே. எம். முன்ஷியைப் பேட்டி காண அவருடைய அறைக்குச் சென்றேன். உணவு மந்திரி ஸ்ரீ முன்ஷி ஏராளமான திட்டங்கள் அடங்கிய 'பைல்' கட்டுகளுடன் உட்கார்ந்து தம்முடைய எட்டு பாயிண்டுகளையும் தட்டாமல் நிறைவேற்ற வேண்டுமென்று அஷ்டதிக்குகளுக்கும் உத்தரவு போட்டுக் கொண்டிருந்தார்.

"தங்களுடைய பாயிண்டுகளும், திட்டங்களும் சீக்கிரமே வீழ்க!" என்று வாழ்த்திக்கொண்டே உணவு மந்திரியின் அறைக்குள் பிரவேசித்தேன்.

"என்னப்பா இது? ஆச்சரியமாயிருக்கிறதே! நான் உணவு உற்பத்தியைப்

# கானகலாதரர்

மதுரை மணி ஐயர் என்று சொன்னால் அழுத பிள்ளை அக்கணமே அழுகையை நிறுத்தி, மறுகணம் மெட்டு ஆவர்த்தனம் ஸ்வரம் பாடும் என்பது பிரசித்தமான விஷயம்.

ஒரு ஊரில் உள்ள சிறந்த சங்கீத ரஸிகர்களையெல்லாம் சேர்த்தாற்போல் காண வேண்டும் என்றால், அந்த ஊரில் மதுரை மணி ஐயரின் கச்சேரி எப்போது எவ்விடத்தில் நடக்கிறது என்று பார்த்துக் கொண்டிருங்கள். அந்தக் கச்சேரியின் 'சதஸ்'ஸில் அந்த ஊர் ரஸிகர்கள் அத்தனை பேரையும் ஒருங்கே காணலாம்.

கானகலாதரரின் கச்சேரி ஆரம்பத்தில் மத்தகஜத்தின் நடையுடன் கம்பீரமாகவும் மகோன்னதமாகவும் ஆரம்பமாகும். பழைய காலத்து பாதுஷாக்கள், நவாப்புகள், மகாராஜாக்களுடைய தர்பாரில் மந்திரி பிரதானிகள் கை கட்டி வாய் புதைத்து அடக்க வொடுக்கமாக நிற்பதுபோல் ஸ்வரங்களும், ராகங்களும், தானங்களும், கிருதிகளும் மதுரை மணி ஐயர் முன்னால் வந்து நின்று "எங்களில் யார் மீது தங்கள் கருணைப் பார்வை விழுமோ?" என்று கேட்கும் பாவனையில் இருக்கும்.

இந்த ராகந்தான், இந்தத் தானந்தான், இந்தக் கிருதிதான், இந்த வாக்கேயகர்த்தா தான் என்ற பேதபாவம் கானகலாதரருக்குக் கிடையவே கிடையாது. அந்த நிமிஷத்தில் எந்த ராகம் அல்லது கீர்த்தனத்தின் பேரில் அவருடைய கவனம் விழுகிறதோ, அதன் பாடு யோகந்தான்.

மதுரை மணி ஐயரிடம் கன ராகம் அபூர்வ ராகமாகும்; அபூர்வ ராகம் கனராகமாகும்!

ஆயிரம் வித்வான்கள் பாடி ராஜ பாட்டையாக அமைந்துள்ள ராகத்தை ஆலாபனம் செய்ய எடுத்துக் கொண்டாலும் அதில் யாரும் கவனியாத கோணத்துக்குச் சென்று அபூர்வமான பிடிகளைக் கையாண்டு ரஸிகர்களைத் திகைக்கச் செய்வார்.

மற்றவர்கள் சிறிது நேரமே கையாளக் கூடிய அபூர்வ ராகங்களை எடுத்துக் கொண்டாலும் அவற்றை வெவ்வேறு கோணங்களில் நின்று கையாண்டு கன ராகத்தைப் போலவே சவிஸ்தாரமாய்ப் பாடி ரஸிகர்களைத் திணறச் செய்வார்.

நூறு வருஷமாகப் பெரிய வித்வான்கள் பரம்பரையாகப் பாடிப் பழகிய கீர்த்தனத்தைப் போலவே சமீப காலத்திய கீர்த்தனமும் அவரிடம் ஜீவகளை பெற்று விளங்கும். "பக்கல நிலபடி"யைப் போலவே "பராமுகம் ஏனய்யா"வும் அவரிடம் சோபையை அடையும். "ஸ்ரீ சுப்ரமண்யாய நமஸ்தே"யைப் போல் "காணக் கண் கோடி"யும், கேட்பதற்குக் கோடி காது இல்லையே என்று ஏங்கும்படி அமையும்.

மதுரை மணி ஐயரின் கச்சேரி மகோன்னதமான யானை நடையுடன் ஆரம்பமாகும் என்று சொன்னேனும். போகப் போக, 'டெம்போ' அதிகமாகிக் கொண்டே போகும். சில சமயம் மேலே போகாமல் நின்று விட்டதாகக் கூடத் தோன்றும். இந்த நிலையில் சிறிது அலுத்துப் போன ரஸிகர்கள் "ராகமாலிகை ஸ்வரம்" எப்போது வரப்போகிறதென்று காத்திருப்பார்கள். சபையின் நோக்கத்தை அறிந்து சில சமயம் மணி ஐயர் ஏதேனும் ஒரு கீர்த்தனைக்கு ஸ்வரம் பாடும்போதே ராகமாலிகை ஸ்வரத்தை எடுத்து விடுவார். பொறுமையுள்ள பெரிய 'சதஸ்'களில் பல்லவிக்குப் பிறகு ராகமாலிகை ஸ்வரம் எடுப்பார். எப்போது எடுத்தால் என்ன? கச்சேரியின் உச்சத்தையும் கற்பனையின் சிகரத்தையும் காலத்தை மறக்கச் செய்யும் மனோதர்மப் பொழிவையும் மதுரை மணி ஐயர் ராகமாலிகை ஸ்வரம் பாடும்போது காணலாம்.

கச்சேரி முடிவில் மணி ஐயர் பாடும் இதர உருப்படிகளுக்கென்று ரஸிகர்களில் ஒரு பகுதியார் காத்திருப்பார்கள். மற்றவர்கள் பாடிப் பிரபலமான இதர உருப்படிகளைப் பாடுவதற்கு மணி ஐயர் தயங்குவதில்லை. ஆனால் அவரிடம் அந்தப் பழைய இதர உருப்படிகள் புது மெருகு பெற்றுப் புதிய ஜீவகளையுடனேதான் பிரகாசிக்கும்.

கானகலாதர மணி ஐயரின் முழுக் கச்சேரியையும் கேட்ட ரஸிகர்களுக்குக் கங்கையிலும் காவேரியிலும் குற்றாலத்து அருவியிலும் அடுத்தடுத்து ஸ்நானம் செய்தது போன்ற ஆனந்த உணர்ச்சி ஏற்படும்.

* * *

சங்கீத வித்வான்கள் எவ்வளவோ பேர் அவ்வப்போது நம் தமிழ்நாட்டில் தோன்றிப் புகழ் பெற்றுப் பிரகாசிக்கிறார்கள். ஆனால் சங்கீதத்தில் ஒரு புதிய பாணியை ஏற்படுத்திய பெருமை சிலருக்குத்தான் உண்டு. அந்தச் சில பாக்கியசாலிகளில் மதுரை மணி ஐயர் ஒருவர். சங்கீத உலகில் ஒரு புதிய சகாப்தத்தையே அவர் தொடங்கியிருக்கிறார் என்று சொன்னாலும் மிகையாகாது.

அதாவது பொன் முட்டை யிட்ட வாத்தைக் கொல்வதற்கும் உணவு உற்பத்திக்கு இன்றியமையாத காடுகளை அழிப்பதற்கும் வேற்றுமை யில்லை என்பது இப்போது அனுபவ பூர்வமாகத் தெளிவாகி யிருக்கிறது!

* * *

அதனால்தான் இந்திய சர்க்கார் உணவு மந்திரி ஸ்ரீ கே. எம். முன்ஷி பதவியை ஏற்றுக் கொண்டதும் சிறிதும் காலங் கடத்தாமல் வனங்களையும் விருட்சங்களையும் பெருக்க வேண்டிய அவசியத்தை இடைவிடாது வற்புறுத்த முற்பட்டிருக்கிறார்.

உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்காக அவர் வகுத்துள்ள எட்டு அம்சங்கள் அடங்கிய திட்டத்தில் மரங்களையும் காடுகளையும் வளர்க்க வேண்டும் என்பது முக்கியமாகும்.

“பிரிட்டிஷ் சர்க்கார் யுத்த காலத் தேவைகளுக்காகப் பரந்த விஸ்தீரணமுள்ள காடுகளை அழித்துவிட்டார்கள். பிறகு இந்திய மன்னர்களும் ஜமீன்தார்களும் தங்களுக்குச் சொந்தமான காடுகளில் தங்களுக்குள்ள அதிகாரத்துக்கு ஆபத்து ஏற்படலாம் என்று ஏராளமான காடுகளை அழித்துப் பணமாக்கி விட்டார்கள். அதனால் மழை குறைந்து விட்டது. எனவே, மேற்படி விபரீதமான நிலைமைக்குப் பரிகாரம் ஏற்பட வேண்டுமானால் தேசம் முழுவதும் லட்சக்கணக்கான மரங்கள் வளர்க்கப்பட வேண்டும். மரவளர்ப்பை ஒரு தேசிய விழாவாகக் கொண்டாட வேண்டும்” என்று ஸ்ரீ முன்ஷியின் திட்டம் கூறுகிறது.

அதைத் தவிர, “காடுகளை வளர்த்து நாட்டுக்கு ஏற்பட்டு வரும் கேடுகளைப் போக்குங்கள்” என்றும் ஸ்ரீ முன்ஷி புது டில்லியிலிருந்து பாரத நாட்டு மக்களுக்கு இப்போது ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறார்.

“இந்திய மக்கள் இருப்பதா அல்லது இறப்பதா என்ற ஒரு பிரச்னை இப்போது எழுந்திருக்கிறது. இந்த நாட்டில் ஒரு வருஷத்துக்குக் கால் மைல் விகிதம் பாலைவனப் பிரதேசம் அதிகமாகி வருகிறது. இந்த நிலைமை ஜனங்களின் சுபிட்ச வாழ்வுக்கு மிகவும் ஆபத்தானது.

“பசுமையான காடுகள் இராவிட்டால், பூமியைக் கொண்டு மாத்திரம் மனிதன் வாழ முடியாது.

“வகை துறையில்லாமல் கண்டபடி மரங்களை வெட்டி வீழ்த்தியும் எரித்தும் மானிட வர்க்கம் தற்கொலை செய்து கொண்டு வருகிறது.

“நமது நாட்டில் நாம் காடுகளை அழித்து அந்த இடத்தில் பாலைவனத்தைச் சிருஷ்டித்து வருகிறோம். அதனால் கோரமான உணவுப் பஞ்சம் நம்மை எதிர்நோக்கி நிற்கிறது.”

இவ்வாறு ஸ்ரீ முன்ஷி தேச மக்களை எச்சரித்திருக்கிறார்.

மகாத்மா காந்தி சமாதியைச் சுற்றி இரண்டாயிரம் மரங்களை வளர்க்க வேண்டும் என்பதும் அவரது அவா.

இதைத் தவிர இன்னும் ஒரு வருஷ காலத்துக்குள் இந்தியா முழுதும் ஒரு கோடி மரங்களை வைத்துப் பயிர் செய்ய வேண்டும் என்பதில் ஸ்ரீ முன்ஷி தீவிரமாக முனைந்திருக்கிறார்.

பாகிஸ்தானில் ஒவ்வொரு நிலச்சுவான்தாரும் குறைந்த பட்சம் ஏக்கருக்கு இரண்டு மரங்களாவது வைத்துப் பயிர் செய்ய வேண்டும் என்று பாகிஸ்தான் சர்க்கார் சமீபத்தில் உத்தரவு பிறப்பித்திருக்கிறார்கள்.

இதிலிருந்து விருட்சங்களை வளர்க்க வேண்டியது மக்களின் இன்றியமையாத கடமை என்பதுடன், அவர்களுடைய க்ஷேமத்துக்கும் சுபிட்ச வாழ்வுக்கும் அத்தியாவசியமானது என்பது தெரிய வில்லையா?

ஸ்ரீ முன்ஷியின் கோரிக்கைக்கு இணங்க பம்பாயிலுள்ள வியாபாரிகள் சர்க்காருக்கு ஐயாயிரம் பதியன்களை நன்கொடை யளித்திருக்கிறார்கள்.

மற்ற நகரங்களிலுள்ள செல்வந்தர்களும் அவ்வாறே சர்க்காருக்குப் பதியன்களை நன்கொடையாக அளிப்பதுடன், தாங்களும் சொந்தத்தில் விருட்சங்களை வளர்க்க முன் வர வேண்டும்.

வனங்களையும் விருட்சங்களையும் அபிவிருத்தி செய்யும் விஷயத்தில் பொது ஜனங்களும் தங்களுடைய பங்கையும் கடமையையும் செய்ய வேண்டும்.

இதற்காக, அடுத்த ஜூலை மாதம் முதல் தேதியிலிருந்து தேசம் எங்கும் “வன மகோற்சவம்” ஆரம்பமாகி நடக்க வேண்டும் என்று இந்திய சர்க்கார் திட்டமிட்டிருக்கிறார்கள்.

அது மகத்தான தேசிய உற்சவமாக நடைபெறப் போகிறது.

அந்த உற்சவம் வெறும் விளையாட்டு விழா அல்ல; தேச மக்களின் சுபிட்ச வாழ்வே அந்த விழாவின் பூரண வெற்றியைப் பொறுத்திருக்கிறது.

# காட்டை வளர்த்து கேட்டைப் போக்குங்கள்!

“ஒரு புல் வளர்ந்துள்ள இடத்தில் இன்னும் ஒரு புல் வளர்ப்பவரைப் போல அந்தத் தேசத்தின் சிறந்த நண்பர் வேறு யாரும் இல்லை; எல்லாத் தொண்டர்களையும் காட்டிலும் அவர்தான் மேலான தொண்டர்; எல்லா அரசியல் வாதிகளையும் காட்டிலும் அவர்தான் மேம்பட்டவர்” என்று சொன்னார் ஓர் அறிஞர்.

அது எவ்வளவு ஆழ்ந்த கருத்துக் கொண்ட வாக்கியம் என்பதை உன்னிப் பாருங்கள்.

இன்று நம் பாரத நாட்டில் ஒரு நெற்கதிர் விளையும் இடத்தில் இன்னும் ஒரு நெற் கதிர் விளையும்படி செய்துவிட்டால் உணவு உற்பத்தி இரட்டிப்பாகப் பெருகி விடாதா? பிறகு பஞ்சமும் பற்றாக்குறையும் பறந்தோடி விடாதா?

அந்த அறிஞர் கூறி யிருப்பதைப் போல ஒரு புல் வளர்ந்துள்ள இடத்தில் மற்றொரு புல்லை வளர்க்காவிட்டாலும், வளர்ந்த புல்லையாவது பிடுங்கி எறியாமல் இருக்க வேண்டியது அவசியம் அல்லவா?

ஆனால், அவ்வாறு பிடுங்கி எறியும் கைங்கர்யம் நமது நாட்டிலே நடந்து வருகிறது என்பதைக் கேட்க எல்லோரும் திடுக்கிட்டுப் போவார்கள்.

ஒரு நாட்டின் செழுமைக்கும் சிறந்த வேளாண்மைக்கும் இயற்கை வழங்கியுள்ள சாதனங்களில் சிறந்தது அடர்ந்த காடுகள்தான்.

மழை பெய்வதற்கு மலைகளும் வனங்களும் மிகவும் அத்தியாவசியமானவை. வனங்கள் இல்லாவிடில் மழை பெய்யாது. மழை இல்லாவிடில் விவசாயமும் விளைச்சலும் பாழ்த்து நாடு பஞ்சத்தில் ஆழ்ந்துவிட நேரும்.

அதாவது வனம் இல்லாத நாடு பாலைவனம் ஆகிவிடும். வனங்களும் விருட்சங்களும் இல்லா விட்டால் ஊற்றுக்கண்கள் அடைபட்டுப் பூமி வறண்டு போய்விடும்.

ஏரிகள் நிறைவதற்கும் ஆறுகள் ஓடுவதற்கும் காடுகள் இன்றியமையாதவை. எனவே, கண்டபடி மரங்களை வெட்டுவதும் காடுகளை அழிப்பதும் நாட்டின் செழுமையையும் செல்வத்தையும் சுபிட்சத்தையும் சீர்குலைப்பதாக முடியும்.

*　　*　　*

“மரங்களை வெட்டாதீர்கள்; காடுகளை அழிக்காதீர்கள்; புதிதாக விருட்சங்களை வளர்க்க முன் வாருங்கள்” என்று சிறிது காலமாகச் சர்தார் பட்டேல் முதல் பல பிரமுகர்களும் முறையிடத் தொடங்கி யிருக்கிறார்கள்.

சில தினங்களுக்கு முன் டேராடூனில் காடுகள் ஆராய்ச்சிக் கல்லூரியின் பட்ட மளிப்பு விழா நடந்தது. அப்போது சர்தார் பட்டேல் பேசுகையில், பாரத நாட்டின் செழுமைக்கும் சுபிட்சத்துக்கும் காடுகள் அத்தியாவசியமானவை என்று குறிப்பிட்டார்.

“காடுகள் சீதோஷ்ண நிலையைக் கட்டுப் படுத்துகின்றன; பூமி வறண்டு பாலை வனமாகி விடாமல் காப்பாற்றுகின்றன; நதிகளின் வெள்ளத்தினால் நாசம் ஏற்படாமல் தடுக்கின்றன; பருவகால மழை பெய்வதற்கு உதவியாக இருக்கின்றன” என்று சர்தார் பட்டேல் விளக்கிக் கூறினார்.

இரண்டு வாரங்களுக்கு முன் சென்னை சர்க்கார் நந்தவனங்களின் நூறாவது ஆண்டு விழா உதகமண்டலத்தில் நடந்த போது சென்னை சர்க்கார் மந்திரி உள்பட பல பிரமுகர்களும் காடுகளை அழித்து விடுவதால் ஏற்படக்கூடிய ஆபத்தை ஆதாரங்களுடன் எடுத்துக் கூறினார்கள். குறிப்பாகச் சென்னை மாகாணத்தில் கண்டபடி காடுகளை அழித்து விட்டதால் பருவ மழை குறைந்து, தானியக் களஞ்சியங்களாக இருந்த பிரதேசங்கள் பஞ்சப் பிரதேசங்களாக மாறி விட்டன என்று அங்கலாய்த்தார்கள்.

பலகைகளுக்காகவும், விறகுகளுக்காகவும் காடுகளை அழித்தது ஒருபுறம் இருக்கட்டும். உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டு ஏராளமான காடுகள் அழிக்கப்பட்டது பெரும் தவறு என்பதை இப்போது தேசம் எங்கும் எல்லோரும் உணர ஆரம்பித்திருக்கிறார்கள்.

# புது மந்திரிகள்

① ஆலோசனை சொல்லும் ராஜாஜிக்கு ஆலோசனை சொல்லப்படுகிறது.

"தாங்கள் லார்ட் பிரஸிடென்டாயிருக்கலாம்; ஆனால் இப்போது நாங்கள் சொல்லுகிறபடி நீங்கள் கேட்டாக வேண்டும்."

② நிதி மந்திரி ஸ்ரீ தேஷ்முக் தமது வேலையில் ஆழ்கிறார்!

③ கைத்தொழில் மந்திரி ஸ்ரீ ஹரிகிருஷ்ண மேதாப் சர்க்காருடன் ஒத்துழைக்கும் படி முதலாளிகளைக் கேட்டுக் கொண்டிருக்கிறார்; ராம கிருஷ்ணா டால்மியா என்ன பதில் சொல்லப் போகிறாரோ?

④ வர்த்தக மந்திரி ஸ்ரீ பிரகாசா வியாபாரிகளின் முகம் பிரகாசம் அடைவதற்கு என்ன மார்க்கம் சொல்லலாம் என்று ஆலோசிக்கிறார்.

⑤ இதற்கு முன் இந்திய சர்க்கார் உணவு மந்திரி பதவி வகித்தவர்களைப் பார்த்து,.....

....."இவரைப் பார்த்தால் நாட்டில் உணவுப் பஞ்சம் இருப்பதாகத் தோன்றவில்லையே" என்றனர் பொது ஜனங்கள். இந்தத் தடவை இளைத்த மனிதர் ஸ்ரீ கே.எம். முன்ஷி உணவு மந்திரியாகியிருக்கிறார். என்ன நடக்கப் போகிறதோ?

இப்போது கிடைத்திருக்கிறது. அரவிந்த ஆசிரமத்திலிருந்து சுவாமிகள் வெளிப்போந்து தமிழ்த் தாய்க்கும் தமிழ் மக்களுக்கும் தொண்டாற்றப் போகிறார். சென்ற வாரத்தில் சுவாமி சுத்தானந்தரின் ஐம்பத்து மூன்றாம் ஜயந்தி புதுச்சேரியில் கொண்டாடப்பட்ட போது சுவாமிகள் இந்த நல்ல செய்தியை வெளியிட்டார். ஓமந்தூர் ஸ்ரீ ராமசாமி ரெட்டியார் அவர்களின் தலைமையில் சுவாமிகளின் ஜயந்தி கொண்டாட்டம் மிக விமரிசையாக நடைபெற்றது. சுவாமிகளிடம் பேரன்பு பூண்ட ஸ்ரீ சென்னியப்ப முதலியார், ஸ்ரீ சூரிய நாராயணா, ஸ்ரீ மணி ஐயர் முதலியோர் பெரு முயற்சி செய்து விழாவை நடத்தி வைத்தார்கள். இந்த நண்பர்களே சுவாமிகளுக்கென்று புதுச்சேரியில் ஒரு தனி ஆசிரமம் அமைத்துக்கொடுக்கப் போகிறார்கள். "சுத்த நிலயம்" என்பதாக ஒரு ஸ்தாபனத்தை ஏற்படுத்தி சுவாமிகளின் நூற்றுக் கணக்கான நூல்களை முறையாக மலிவான விலை வைத்து வெளியிடுவார்கள். சுவாமிகள் சிறிது காலம் புதுச்சேரியில் தனி ஆசிரமத்தில் வசித்து விட்டுப் பிறகு தமிழ் நாடெங்கும் யாத்திரை செய்து தொண்டு புரிவார்கள். சுவாமிகள் அவ்விதம் யாத்திரை தொடங்கும் போது தமிழ்நாடெங்கும் மக்கள் நம் காலத்தில் யோகசித்தி அடைந்த இந்தப் பெரியாரை ஆர்வத்துடன் வரவேற்று மகிழ்வார்கள் என்பதில் ஐயமில்லை. சுவாமிகள் தமிழ், தெலுங்கு, ஹிந்தி, சம்ஸ்கிருதம் முதலிய இந்த நாட்டு மொழிகளையன்றி ஆங்கிலம், பிரஞ்சு முதலிய மேனாட்டு மொழிகளையும் நன்கு அறிந்தவர். பிரஞ்சு பாஷையில் கவிதை இயற்றிப் பிரஞ்சு அறிஞர்களின் நன் மதிப்பைப் பெற்றவர். சுவாமிகளின் திருத்தொண்டு தமிழ் நாட்டுக்கு மட்டுமேயன்றி இந்திய தேசத்துக்கும் உலகத்துக்குமே பயன்பட வேண்டும் என்று அவருடைய சீடர்கள் விருப்பம் கொண்டிருக்கிறார்கள். அந்த நல்ல நாளை நாமும் ஆவலுடன் எதிர் நோக்குகிறோம்.

## தேசபக்தருக்குப் பாராட்டு

திருவண்ணாமலையின் தேச பக்தத் தியாகியும் தலைவருமான திரு என். அண்ணாமலைப் பிள்ளை அவர்களின் அறுபது ஆண்டு பூர்த்தியை முன்னிட்டு வேலூரில் சென்ற வாரம் சிறப்பான திருவிழா நடந்தது. தமிழ் நாடெங்குமுள்ள ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளையின் அன்பர்கள் திரட்டிச் சேர்த்த ரூ. 22,000 நிதியை அச்சமயம் ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளையிடம் சமர்ப்பணம் செய்தார்கள். ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளை இந்த நாட்டின் நலத்துக்காகச் செய்திருக்கும் தியாகத்துக்கும் இயற்றியிருக்கும் தொண்டுக்கும் 22,000 ரூபாய் ஈடாகுமா? ஒரு நாளும் இல்லை. ஆகையினாலேயே, மேற்படி ரூ. 22,000த்துடன் சேர்த்துக் கொடுக்கும்படி நம் தலைவர் ராஜாஜி அவர்கள் ஒரு துளசி தளத்தையும் அனுப்பி வைத்திருந்தார்கள். சத்தியபாமாவின் பொன்னெல்லாம் கண்ணனின் எடைக்குச் சரி எடை ஆகவில்லையென்பதையும் அந்தப் பொன் நகைகளுடன் ருக்மணி தேவியின் துளசி தளத்தை வைத்ததும் எடை சரிக்கராயிற்று என்பதையும் நேயர்கள் ஞாபகப்படுத்திக் கொள்வார்கள். கதையில் உள்ளதுபோலவே, ராஜாஜி அனுப்பிய துளசிதளம் ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளையிடம் தமிழ் மக்களின் அன்புக்கு அறிகுறியாக நின்று, இருபத்திரண்டாயிரம் ரூபாய் நிதியை உயர்வுபடுத்தியது.

## யாரை வாழ்த்துவது?

வேலூரில் நடந்த வைபவம் சம்பந்தமாக ஸ்ரீ என். அண்ணாமலைப் பிள்ளைக்கு வாழ்த்துக் கூறுவதா அல்லது தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ காமராஜை வாழ்த்துவதா என்று எளிதில் நிச்சயிக்க முடியவில்லை. ஏனெனில், ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளைக்கு அறுபது ஆண்டு ஜயந்தியும் நிதி முடிப்பு அளிக்கும் விழாவும் நடத்தியதற்கு முக்கிய காரணமாயிருந்தவர் ஸ்ரீ காமராஜ் அவர்கள்தான். சில வருஷங்களுக்கு முன்பு ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளையும் ஸ்ரீ காமராஜும் தமிழ் நாட்டு அரசியலில் மாறுபட்டு நின்றார்கள்; போரும் நடத்தினார்கள். வாக்குவாதப் போரில் அதிகமான பாணங்களை அச்சமயம் எய்தியவர் ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளை அவர்கள்தான். ஆயினும் அந்தப் பழைய கதையை யெல்லாம் இப்போது அவர்கள் நினைத்துக்கொண்டிருக்கவில்லை. அந்தப் போர் முடிந்ததும் இருவரும் முன் போலவே நண்பர்கள் ஆனார்கள். ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளைக்கு விழா நடத்தும் முயற்சியிலும் ஸ்ரீ காமராஜ் முதன்மையாக நின்று பிரயத்தனங்கள் செய்தார். வேலூரில் ஸ்ரீ காமராஜின் தலைமையிலேயே விழாவும் சிறப்பாக நடைபெற்றது. அரசியலில் அபிப்பிராய வேற்றுமைகள் தனிப்பட்டவர்களின் வாழ்க்கையையும் சிநேகத்தையும் பாதிக்கக் கூடாது என்பதற்கு ஸ்ரீ காமராஜின் இச் செயல் சிறந்த உதாரணமாகும். அந்த உதாரணத்தைத் தமிழ் நாடெங்குமுள்ள தேசபக்தர்களும் காங்கிரஸ் ஊழியர்களும் பின்பற்றி நடக்கவேண்டும்.



# கல்கி

மலர் 9 இதழ் 44

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா


## என்ன சேதி?

### சிறு விஷயம் அல்ல

மைத்தமிழும் பகம் பயிரும் செழித்து வளரும் நாஞ்சில் நாட்டுத் தமிழர்களின் உள்ளத்தில் ஒரு பெரும் ஆத்திரமும் கவலையும் தற்சமயம் குடி கொண்டிருக்கின்றன. திருவாங்கூர் ராஜ்யத்திலிருந்து பிரிந்து தமிழ் நாட்டில் சேர்ந்துகொள்ள அவர்கள் ஆர்வங்கொண்டிருக்கிறார்கள். பல காலமாகவே இதற்கான கிளர்ச்சியையும் அவர்கள் செய்து வருகிறார்கள். ஏற்கெனவே, திருவாங்கூர் மகாராஜாவின் ஆளுகைக்குள் இருந்த போது, அவர்களும் தம் பிரஜைகள் என்ற முறையில் மகாராஜா அவர்களுடைய நலன்களையும் ஓரளவு கவனித்து வந்தார். இப்போதோ திருவாங்கூர் — கொச்சி ராஜ்யத்தில் ஜனநாயக ஆட்சி நடைபெறுகிறது. புதிதாக வந்த ஜனநாயக ஆட்சியில் வீர்யாக அதிகாரம் படைத்தவர்கள் "அகப்பட்டதைச் சுருட்டா ஆண்டி அப்பா!" என்ற முறையில் தத்தம் சுய நலங்களை அவசர அவசரமாகக் கவனித்துக்கொண்டு வருகிறார்கள்! சிறுபான்மையோரான நாஞ்சில் நாட்டுத் தமிழர்களைக் கவனிப்பார் இல்லை. அவர்களுடைய உரிமைகளும் நன்மைகளும் புறக்கணிக்கப்பட்டு வருகின்றன.

திருவாங்கூர் ராஜ்யத்தைச் சேர்ந்த தமிழர் காங்கிரஸ் தலைவர்கள், பாவம், போராடிப் போராடி, ஓரளவு மனம் சோர்ந்து போயிருக்கிறார்கள். சமீபத்தில் சர்தார் படேல் திருவாங்கூருக்கு வந்தபோது தமிழர் காங்கிரஸ் தலைவர்கள் அவரைப் பேட்டி கண்டு தங்கள் குறைகளை எடுத்துச் சொன்னார்கள். "தமிழ் நாட்டோடு நாஞ்சில் நாட்டைச் சேர்த்து விடவேண்டும்; குறைந்த பட்சம் உடனடியாக நாஞ்சில் நாட்டுத் தமிழர் காங்கிரஸ் கமிட்டியையாவது தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியுடன் சேர்த்துவிட அநுமதி வேண்டும்" என்று கேட்டார்கள். இரும்பு மனிதராகிய ஸர்தார் "இந்தச் சில்லறை விஷயங்களுக்கெல்லாம் இப்போதுதானா அவசரம்?" என்று சொல்லி விட்டார் என்று அறிகிறோம். சர்தாரைப் போன்ற பெருந் தலைவர்கள் மிகப் பெரும் பிரச்னைகளில் ஈடுபட்டிருக்கிறார்கள். ஆகையால் அவர்களுக்கு இது போன்ற விஷயங்கள் 'சில்லறை' யாகத்தான் தோன்றும். தேள் கொட்டியவன் துடித்து அலறுவதைப் பார்த்து, மற்றவர்கள், "ஒரு அற்பத் தேள் கடிக்கு இவ்வளவு தடபுடலா?" என்பார்கள். தேள் கொட்டியவனுக்கோ ஒவ்வொரு கணமும் உயிர் போவதுபோலத் தோன்றும்; உடனடியாக உயிர் போய் விட்டாலும் நல்லது என்று தோன்றும்.

பல சிறிய குறைகள் சேர்ந்துதான் கடைசியில் நாசத்தை விளைவிக்கும் பெருங் குறையாகிறது. பல சிறு கால்வாய்கள் சேர்ந்துதான் பெருவெள்ளம் பாயும் நதியாகிறது. இதையெல்லாம் நம் மாபெருந் தலைவர்கள் கவனிக்கவேண்டும். கவனித்து, நாஞ்சில் நாட்டுத் தமிழர்களுக்கு நியாயம் செய்ய வேண்டும்.

### "சுத்த நிலையம்"

புதுச்சேரியில் அரவிந்தரின் ஆசிரமத்தில் தமிழ்த்தவம் செய்து வந்த யோகி சுத்தானந்த பாரதியார் பதினெட்டு வருஷ காலம் மௌன விரதம் இருந்தார். அந்தக் காலத்தில் தமிழ்த்தாய்க்கு எத்தனையோ அரும்பெரும் தொண்டுகள் ஆற்றினார். இரண்டு வருஷங்களுக்கு முன் சுவாமிகள் மௌன விரதத்தைப் பூர்த்தி செய்தார் என்று அறிந்து மகிழ்ந்தோம். அதைக் காட்டிலும் நல்ல செய்தி ஒன்று

ஆலப்புழை ஸ்ரீ பி. ராஜகோபால செட்டியார் அவர்கள் திருநெல்வேலி ஜில்லாவில் சமூகரங்கபுரம் என்னும் கிராமத்தில் 6–5–1886-ல் பிறந்தார். பால வயதில் ஆலப்பிழை சென்று சொற்ப சம்பளத்தில் ஜவுளி விற்பனையாளராக வியாபாரம் தொடங்கினார். அவருடைய விடா முயற்சியும் வர்த்தக ஞானமும் சமூகமான நேசப் பான்மையும் விரைவிலேயே ஜவுளி வர்த்தகத் துறையில் முன்னணிக்குக் கொண்டு வந்தன. தென்னிந்தியாவிலேயே மிகப் பெரிய ஜவுளி வியாபாரிகளில் ஒருவர் ஆனார். ஆஸ்திகப் பற்றும் தர்ம சிந்தனையும் மிகுந்த இப்பெரியார் ஆலப்பிழையில் பல தர்ம ஸ்தாபனங்களுக்குப் பெருந் தொகை நன்கொடைகள் வழங்கினார். பல தான தர்மங்களைச் செய்தார். பலகாலம் செட்டியார் சங்கத்தின் தலைவராக இருந்தார். செட்டியார் சமூகத்துக்கும் ஆலப்பிழை நகரத்துக்கும் ஆபரணமாக விளங்கினார்.



அத்தகைய பெரியார் தமது அருமை மனைவியாரையும் புதல்வர்கள் இருவரையும் புதல்விகள் இருவரையும் மற்றும் எண்ணற்ற உறவினரையும் நண்பர்களையும் பிரிந்து தமது 64-ம் பிராயத்தில் 19–5–50-ல் இம் மண்ணுலகை நீத்து விண்ணுலகம் அடைந்தார். இம்மையில் அவருக்குச் சகல நலன்களையும் அருளிய இறைவன் மறுமையில் மேலான சொர்க்க ஆனந்தத்தை அருள வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.
















# கல்கி

## பொருளடக்கம்

மலர் 9 இதழ் 44 | ஜூன் 4 | விக்ருதி வைகாசி 22




தெய்வீகத்திற்குப் பரிசுத்தம் இன்றியமையாதது. மிகவும் சுத்தமளிக்கும் சடங்காச்சார ஸ்நானங்களுக்கு சுயமான ஸோப்பை மட்டுமே நாம் உபயோகிக்க வேண்டும். ஸோப்பில் ஏது கலப்புமிருக்கலாம். ஆனால் கோத்ரெஜ் ஸாண்டலின் தன்மை தரும் கலப்பற்ற தாவர எண்ணெய்ச் சத்துக்களே, கோத்ரெஜ் சௌந்தர்யப் பொருட்களிலெல்லாம் உள்ளன போன்று, தனிமைப்பட உபயோகம் படுத்தப்பட்டுள்ளன. வெறுக்கத்தக்க மிருகக் கொழுப்புகள் யாதும் அவைகளில் இல்லை. சுவமைசூர் சந்தனத் தைலம் பிரதான்யமாகப் பொருந்தப்பெற்ற கோத்ரெஜ் சந்தன சோப்பானது இன்பமான குளிர்மை, இதம், மணம் இவைகளையுடைய சிங்குவை பயக்கும். எனவே, சரீரம் கடவுளின் கோவிலாயிருக்க, அதைத் தூய்மைப் படுத்த கோத்ரெஜ் தாவர வஸ்து ஸாண்டல் ஸோப் பன்றாது வேறெதுதான் ஏற்றதாகும்!



கோத்ரெஜ் லிம்டா — கிருமிகளைக் கொல்லவும் சௌந்தர்ய மளிக்கவும் வல்ல வேம்பின் குணங்களுடைய ஸோப்.

Godrej Sandal

# கோத்ரெஜ் (மார்க்) ஸாண்டல் (சந்தன)

# டாய்லெட் (ஸ்நான) ஸோப்

குறைந்த விலையில் மற்றைய ஸோப்புகளைவிட மிகவும் உயர்தரமான ஸோப்பு.

கோத்ரெஜ் சோப்ஸ், லிமிடெட்,
மதராஸ்: 164, பிராட்வே; கொச்சின்: 6/36, கல்வாத்தி

சிக்கனத்திற்கு...

போஸ்கோ AC/DC விசிறிகளை உபயோகியுங்கள் ★ ★

R.M.S. & CO. LTD.

EWI LTD

CAS. 511

உப விநியோகஸ்தர்கள்:

சேலம் ஜில்லா: எஸ். எம். டி. வேலு அண்டு கம்பெனி, சேலம் டவுன்.

கோயமுத்தூர் ஜில்லா: ஷண்முகம் அண்டு கம்பெனி, ஜெயில் ரோடு, கோயமுத்தூர்

திருநெல்வேலி ஜில்லா: மோட்டார் ஹவுஸ், மேல ரத வீதி, திருநெல்வேலி டவுன்

மேற்கு ராமநாதபுரம் ஜில்லா: ஜெனரல் & எலக்ட்ரிக் ட்ரேடிங் கம்பெனி, கோவில்பட்டி.

கிழக்கு ராமநாதபுரம் ஜில்லா: ஜெனரல் சேல்ஸ் அண்டு சர்வீஸ், காரைக்குடி.

# வேதனை யளிக்கும் நாட்கள்.....



ஏன் அனஸின் மாத்திரைகளால் அவைகளை மறக்கடிக்கக் கூடாது? தலைவலி, சோர்வு, நரம்புப் புடைப்பு, அருவருப்பு மற்றும் வேதனை யளிக்கும் உபத்திரவங்களையும் அனஸின் விரைவிலும் மிகவும் சுகமாகவும் நீக்குகிறது. அனஸின் நவீனப் பெயரில் ஆஸ்பிரினை வெளிப் பூச்சாகக் கொண்டது அல்ல. பெனஸிடின் காப்பெய்ன், கொய்னு, அஸிடில் ஸலிஸிலிக் திராவகம் ஆகியவைகளைக் கொண்டு தயாரித்தது. அனஸின் உட்கொண்டவுடன் கரைகிறது. பரிசீலனைகளால் சிறந்ததென்று ருசுவான அதன் அரிய சத்துக்கள் நரம்புப் பிடிப்புகளைத் தளர்த்தி உடலில் நல்ல உணர்ச்சியை உண்டாக்குகிறது. அனஸின் தகுதியுடையது, பாதுகாப்பளிப்பது, நம்பகமானது. வயிற்றில் எவ்வித கோளாறும் ஏற்படுத்தாது. இருதயத்துக்கும் ஹானி விளைவிக்காது. மாத்திரைகள் 14 கொண்ட குழாய்களிலும், 50 கொண்ட புட்டிகளிலும் முதல் சிகிச்சைக்கு வேண்டிய 2 கொண்ட பொட்டலங்களிலும் எங்கும் கிடைக்கும்.

## உறுதியுடன் பயமின்றி உட்கொள்ளுங்கள்

**ANACIN**

TRADE MARK REGISTERED

**TABLETS**

## அனஸின்




இந்தியாவில் தயாரிப்பவர்கள்: ஜியாப்ரே மானர்ஸ் & கோ., லிட்., பம்பாய், கல்கத்தா, சென்னை, டெல்லி
தயாரிக்க உரிமை அளித்தவர்கள்: ஒயிட்ஹால் பார்மகல் கம்பெனி, நியூ யார்க், யு. எஸ். ஏ.

# A reliable treatment for Coughs and Colds

## இருமலுக்கும், ஜலதோஷத்திற்கும் நம்பகமான சிகிச்சை




ஜலதோஷம், இருமல், மார்ச்சளி, இன்புளுயன்ஸா ஜுரம், சுவாசக் கோளாறு ஆகிய எல்லாவிதமான நோய்களுக்கும் ஏஞ்ஜியர்ஸ் எமல்ஷன் (Angier's Emulsion) சிபார்சு செய்யப்படுகிறது. அது இருமலைப் போக்குவதோடு மட்டுமல்லாது நல்ல பசியைக் கொடுத்து, ஜீரணக் கருவிகளை மிகவும் ஆரோக்கியமாக வைத்து பலத்தையும் திடகாத்திரத்தையும் அளிக்கிறது.

ஏஞ்ஜியர்ஸ் எமல்ஷன் (Angier's Emulsion) மிருக எண்ணெய் சேர்க்கப்படாமலும் கைபடாமலும் தயாரிக்கப்பட்டது. ஆகவே எந்த ஜாதியினரும் மதத்தினரும் உபயோகிக்கலாம்.

எல்லா கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் கிடைக்கும்

**ANGIER'S EMULSION**

---



**எக்ஸிமா**

சரும வியாதிகளுக்கு, முக்கியமாக எக்ஸிமாவுக்கு ஸைமாக்ஸ் மிகவும் சிறந்தது. சருமத்தின் மேல் ஏற்படும் எரிச்சலை மாயமாய்ப் போக்குகிறது. சருமத்தை இயற்கை நிறத்துக்கும் தன்மைக்கும் கொண்டு வருகிறது. என்றும் ஒரு பாட்டில் உங்கள் வசம் இருக்கட்டும்




**ZIMAX**

AN ECZEMA CURE



**தந்த சுகாதாரம்**

சொத்தையான பற்கள் சரீர தேக ஆரோக்கியத்தைப் பாதிக்கின்றன. தைமோஸின் பற்களையும் ஈறுகளையும் பாதுகாக்கும். பயோரியா, ஜிஞ்ஜிடிஸ் நோய்களையும் சுவாசத்தில் துர் நாற்றத்தையும் தவிர்க்கிறது. உங்கள் குடும்பத்துக்கு அவசியமானது தைமோஸின்



**THYMOCIN**

FOR DENTAL HYGEINE

டி. எம். தாகூர் & கோ., 9, ஸ்டிரிங்கர்ஸ் தெரு, ஜி. டி., மதராஸ்

இரு உள்ளங்களின் உணர்ச்சி வேகங்களை நெருங்க சித்தரிக்கும் உயர் ஓவியம்



J. ARTHUR RANK'S

# நீலக்கடல்

முதல் தமிழ் டெக்னிக்கலர் படம்

ஜூன் மாதம் 2 ஆம் முதல்

| | |
|---|---|
| மதராஸ் | காஸினோ, மஹாராணி |
| பங்களூர் | சூபர் டாக்கீஸ் |
| மதுரை | நியூசினிமா |
| கோயம்புத்தூர் | தியேட்டர் ராயல் |
| திருநெல்வேலி | ராயல் |
| சேலம் | அம்பிகா |

மாடர்ன் தியேட்டர்ஸாரின்



# மந்திரி குமாரி

விரைவில் வருகிறது!